## 99. பெரு வெக்கை.

குணம்:—மூக்கினால் அனல்பரிந்து கண்சிவந்து இருக்குமாகில் பெருவெக்கை யென்று பெயர்.

மருந்து:—வெதுப்படையுடன் நாழி எள்ளைச் சேர்த்து அரைத்து மோரிற் கலந்து கொடுக்க, சொஸ்தமாகும்.

## 100. அழல் வெக்கை.

குணம்:—நீர் விடும்போது காற்றுப் பரியுமாகில் அழல்வெக்கை யென்று பெயர்.

மருந்து:—தென்னம்பாளையையும், நெல்லுமியையு மிடித்துக் காடியிற் கலந்து கொடுக்க, சொஸ்தமாகும்.

## 101. அடைப்பான்.

குணம்:—கட்டுத்தறியை முட்டிக்கொள்ளுமாகில் அடைப்பானென்று பெயர்.

மருந்து:—பூவரசின் விதையைப் பொடிசெய்து, உரி வெண்ணெயிற் போட்டுக் கசக்கிச் சிரசில் மூளைக்குச் சரியாய்ப் பூச, சொஸ்தமாகும்.

## 102. முள்ளடைப்பான்.

குணம்:—முன்னங்கால்நடுவே வீங்குமாகில் முள்ளடைப்பானென்று பெயர்.

மருந்து:—கோழியவரைச் சாற்றுடன் அசமதாகமுங் கூட்டிக் கொடுக்கச் செ ஸ்தமாகும்.

## 103. உள்ளடைப்பான்.

குணம்:—மயிர் சிலிர்த்துக்கொண்டு வாயினால் நீரோடித் தூங்கிவிழுமாகில் உள்ளடைப்பா னென்று பெயர்.

மருந்து:—வெங்காயம், நெய், அகத்திச்சாறு, மிளகு இந்நான்கையுங் கூட்டிக் கொடுக்கச் சொஸ்தமாகும்.

## 104. முள்ளடைப்பான்.

குணம்:—மூன்றுநாள் வரையில் மேயாமல் தேகமெல்லாம் நடுங்கக்கண்டு கண்ணிற் பீளைகள் சாடுமாகில் முள்ளடைப்பானென்று பெயர்.

பக்குவம்:—சங்கங்குப்பி யிலைச் சாற்றையும், கிராம்பின் தோலையும் மோரில் விளாங்காய்ப் பிரமாணம் சேர்த்து உள்ளுக்குக் கொடுத்து மேலுக்கும் பூச, சொஸ்தமாகும்.

## 105. மந்த அடைப்பான்.

குணம்:—வாய் திறந்தும், தலை சாணியும், தன்னைத்தானறியாமலும் மேயாமலுமிருக்குமாகில் மந்த அடைப்பானென்று பெயர்.

பக்குவம்:—வெதுப்படையையும், ஓட்டடையையும் ஒன்றாயிடித்து மோரிற் கலந்து உள்ளுக்குக் கொடுத்துப் பின்பு மூன்றுநாள் வரையில் புற்றுமண் காய்ச்சி தேகத்திற் பூச, சொஸ்தமாகும்.

## 106. எலும்புருக்கி நோய்.

குணம்:—உலவி வழுக்கிக் கீழே விழுமாகில் எலும்புருக்கிநோயென்று பெயர்.

பக்குவம்:—நாய்வேளை வேரை யரைத்துத் தயிரில் கலந்து கொடுத்து, நெஞ்சில் இருதலைச் சூடாகச் சுட சொஸ்தமாகும்.

## 107. குதிரை வலி.

குணம்:—நாலு காலுந் தவறி மார்வலி காணுமாகில் குதிரைவலி யென்று பெயர்.

பக்குவம்:—ஐப்விரலிக்காய், வெள்ளெருக்கங்கொம்பு, கள்ளிச்சாறு, நல்லெண்ணெய் இந்நான்கையுஞ் சிறுநீரிற் கலந்து கொடுத்து, தலை முதல் வால்வரை முதுகிலிருபுறமுஞ் சூடி, மறுநாள் காலையில் மேற்சொன்ன மருந்துடன் கர்ப்பூரவல்லி யிலையைக் கலந்து கொடுக்கச் சொஸ்தமாகும்.

## 108. கோமாரி.

குணம்:—வாயினால் தண்ணீர் வடிந்தும் மேயாமலும் மயங்கியுந் தியங்கியும் அசந்து மிருக்குமாகில் கோமாரி யென்று பெயர்.

பக்குவம்:—மாட்டை யோட்டிக்கொண்டு போய் குளத்தில் வைத்தால் புண் சிலிர்த்து வெளுத்துப்போகும். அதைப் பழஞ் சீலையால் இலகு வாய்த் துடைத்து கர்ப்பூரம் போட்டு அதன்பேரில் வேப்பெண்ணெயைத் தடவி, ஈக்கள் முதலியவை மொய்க்காமலும், மாடு நக்காமலும் வைத்தால் சுத்தமாய்ப் புண்ணாறி யுலர்ந்துபோகும். பின்பு, சூடு தணியவேண்டி, பச்சரிசியையும் பச்சைப் பயற்றையும் சேர்த்துக் கஞ்சி காய்ச்சி வார்க்கவேண்டும்.

### 109. வாய் கோமாரி.

குணம்:—வாயில் நீரோடியும் வைக்கோல் புல் முதலியவை தின்னுமலும் மேயாமலும் மயங்கித் தியங்கி உலர்ந்து அசந்து நிற்குமாகில் வாய் கோமாரி என்றுபெயர்.

பக்குவம்:—அளிந்த வாழைப்பழம் 50, சர்க்கரை 5-பலம், பசுநெய் 5-பலம் இம்மூன்றையும் ஒன்ருய்ச் சேர்த்துக்கொடுத்து, சாமத்து மேல் பச்சரியையும் பச்சைப்பயற்றையும் போதுமானவரையில் கஞ்சி காய்ச்சி வார்க்க, தேகங் குளிர்ந்து மேனியாகும். வைக் கோலும் புல்லும் செவ்வையாகத் தின்னும்.

### 110. வாய் நாற்றம்.

குணம்:—வாயிலே நாற்றங் கண்டால் அல்லது கோமாரி வந்தால் வருகிற தற்கு ஆரம்பங் கண்டால் அதற்குக் கொடுக்கும் ஔடதம்.

மருந்து:—பச்சைப்பயறு $\frac{1}{4}$-படி, பச்சையரிசி $\frac{1}{4}$-படி, காக்காச்சோளம் $\frac{1}{4}$-படி, வெங்காயம் 5—பலம் இவைகளைச் சுத்தமாக்கி வைத்துக்கொண்டு ஒரு பானையிலே சலம்விட்டுக் கிளறி உண்டைகள் செய்து 1, 2, 3-வேளைகள் கொடுக்கவும். இது அனுபவம்.

### 111. வாய்க் கோமாரிக்கு.

மருந்து:—வாழைப்பூ இரண்டு கொண்டுவந்து அரக்கீரை வேர் சமூலமும் கழுவி இரண்டையும் சேர்த்து இடித்து அரிசிகழுவிய கழுநீரிலே கரைத்து, வடிகட்டி, இரண்டு குழாய் வார்க்கவும். வைக்கோல் போடவும். இரண்டு சாமத்துக்குப் பின்பு $\frac{1}{4}$-படி பச்சைப்பயறு போட்டுக் கஞ்சி காய்ச்சி வார்க்கவும். குடிக்காவிட்டால் குழா யாலே வார்க்கவும்.

### 112. பேராமணம்.

குணம்:—மாட்டுக்கு மத்தியானம் சாயங்கால வேளையில் வயிற்றைப் பொரு மித் திட்டு திட்டென்று நிற்கும்.

மருந்து:—பெருங்காயம் அரைப்பணத்துக்கு வாங்கிவந்து, வெள்ளைக் கத்தி ரிக்காய் பெருங் காயாக கொண்டுவந்து, காயைக் குடைந்து அதற் குள்ளே பெருங்காயத்தை வைத்து, உமிக்காந்தலிலே புதைத்துக் கருகச் சுட்டு, அரைத்து கவளமாய்ப்போட்டு, அரைப்படி வென் னீரால் மருந்தரைத்த அம்மியெல்லாங் கழுவிப் புகட்டவும்.

இதற்கு நசியம்:—எருக்கிலைப்பழுப்பு இரண்டு, குப்பைமேனியிலை, வேளை யிலை, வேலி, பருத்தியிலை, வனமாவிலை, கோளியவரையிலை, மஞ்சிக் கோரைங்கிழங்கு, சுக்குதேரு 1, வெள்ளுள்ளிப்பூடு 1, மிளகு 10, உப்பு 3, இவை யெல்லாவற்றையும் நறுக்கிப் பொட்டண மாய்ப் பிடித்து, சிறுநீரிலரைத்து, காது இரண்டிலும் கண்ணிரண் டிலும் விட்டுத் தேய்த்து, இரண்டு நாசியிலேயும் பிழிந்துவிடவும். இந்த நசியம், விருட்டி, கோரமுட்டிக்கொருவன், முன்னடைப் பன், பின்னடைப்பன், ஊத்தடப்பன், வற அடைப்பன், நீரடைப் பன், தெரியன சீத வெக்கை, செங்கமாரி ஆகிய இவைகளுக் கெல்லாம் இந்த நசியம் விடவும்.

## 113. அடைப்பன்.

குணம்:—வாய் நீர் வரும். குன்றி நிற்கும். புல்லரித்து மயிர் சிலிர்க்கும். வயிறு பொருமிக் காணும். எரு கட்டிப்படும். செருமல் காணும்.

இதற்கு முன்னதாகக் கொடுக்கிற மருந்து:—உப்பு ஒரு சிறங்கை, மிளகு 1-பிடி அம்மியிலிட்டு அரைத்து, 1–படி வென்னீரில் நாசியிலே மேல் புகட்டவும். இதில் மிஞ்சினால் கோவைக் கிழங்கு, பொன் முசுட்டைவேர், அழிஞ்சிவேர், மாவிலங்கிவேர், வனமரைக்கிழங்கு, சங்கம்வேர், சங்கத்தாரிவேர், மறுக்காரைக்கிழங்கு, சுக்கு 10-பலம், மிளகு 10–பலம், உள்ளி 10–பலம், ஓமம் 10–பலம், வசம்பு 10–பலம் இவற்றையெல்லாம் (இந்தக் கிழங்கும்) கடைச் சரக்குடன் இடித்து, வசம்பு அரைத்து, அரைப்படி வேப்ப எண் ணெயில் போட்டு, பதமாய் எரித்து, மாட்டை விழுத்தாட்டி, ஒரு நேரமாய்ப் புகட்டவும். அன்றைக்குத் தண்ணீர் வைக்கக் கூடாது. மறுநாள் சுடவைத்து ஆற்றிவிட்டு வைக்கவும்.

## 114. பிற அடைப்பான்.

குணம்:—முழங்கால் பலகைகூட வீக்கங்காணும். தாடி வீக்கங்காணும். கன்னத்தில் வீங்கும். நெஞ்சங் குலைவீங்கும். இதற்கெல்லாம் முன்சொன்ன மருந்து நசியமாம்.

இதற்கு மேல் பூச்சு மருந்து:—1–படி சதிரக் கள்ளிப் பாலைச் செம்மறி ஆட்டு எருவில் குழப்பிப் பிசைந்து, வீக்கங்கண்ட மாட்டுக்குப் பூசவும். இந்தப் பூச்சுப் பூசுமுன்னே வீக்கத்தில் தடவி, பிறகு செம்மறியாட்டெருவையும் கள்ளிப்பாலையும் பூசவும். இது பூசின மூன்றும் நாள், புத்தான் சோறும், நண்டு வளை மண்ணும், கள்ளிப்பாலும் கூட்டி சிறுநீரில் அரைத்துப் பூசவும்.

### 115. விருட்டி.

குணம்:—தொண்டைக்குரல்வளை முடிச்சில் வீக்கங் காணும். கண் கூடு இரண்டும் வீக்கங் காணும். முகம் வீக்கங் காணும். கேவும். வாய் நீர் சாய்க்கும். எருகும். [முன்சொன்ன மருந்து நசியமாம்.]

### 116. வற வெக்கை.

குணம்:—மலங் கட்டுப்பட்டு எரு வரண்டு புழுக்கையாக விழும். கண் குழியும். நீர் மஞ்சளித்திருக்கும்.

மருந்து:—அழுஞ்சியிலை, நொச்சியிலை, ஆடாதோடையிலை, செருப்படியிலை, தும்பையிலை, கோழியவரையிலை, கருநொச்சியிலை, அம்மைப்பச் சரிசி, துளசியிலை, கொட்டான்கரந்தை, அம்பையிலை வகைக்கு 1-பிடி, வெள்ளுள்ளி சிறங்கை இவற்றையெல்லாந் துவைத்து, கவளமாய்க் கொடுக்கவும்.

இதற்கு வேறு:—மூக்காவேளையைக் கொண்டுவந்து நறுக்கி வேது வைத்துத் தண்ணீர் குடிக்க வைக்கவும். முசுட்டையிலையைக் கொண்டுவந்து இரவடுப்பிலே வேகவைத்து எருக்கண்டால் நெல்லுப்பொரி குறுணி யிடித்து முசுட்டையிலை அவித்ததை அதிலே பிசைந்து கொடுக்கவும். இதற்குக் குளுமை இலவயிலை, துவைத்துக் குருணி மோரில் பிசைந்து கொடுக்கவும். நீர் வெக்கைக்குப் படி கொடுக்கவும். உதிர வெக்கைக்கு உமி படிக் கொடுக்கவும்.

### 117. நீர் வெக்கை

குணம்:—சொருக்குச் சொருக்கென்று நீர் விடும்.

### 118 உதிர வெக்கை.

குணம்:—ரத்தம்போலே நீர் காணும்.

மருந்து:—இதற்கு முன்சொன்ன மருந்து கொடுக்கவும்.

## வியாதிக் குறிகள்.

### 119. மூக்கடைப்பான், நெஞ்சடைப்பான்.

குணம்:—மூக்கிலிருந்து சளி மிகுதி யுண்டாவதோடுகூட சிறிது காய்ச்சலும் காணும். ஓதிறல், திம்மென்றிருத்தல், காதுகள் மடங்கித்தொங் குதல், தலை யிறக்கம், நாடி உதட்டியாய்ப் படபடவென் றடித்துக்

கொள்ளுதல், கொம்புகளும் காதுகளும் சிலவேளை சூடாயும் சில வேளை சில்லென்றும் மாறிமாறி இருத்தல், சாதாரணமாய்ச் சிறுமல் கண்டிருத்தல், மேல்மூச்சுவாங்குதல், கண்ரெப்பைகளின் உள் தோல் ரத்தம் கட்டி உப்பியிருத்தல், ஏதோ ஒரு வேளையில் படுத்திருந்தாலும் சாதாரணமாய்ப் படுக்காக்காமலிருத்தல், கடைசியாய்ச் சாகுங் கால் சுவாசக் குழல் கெட்டுப்போவதால் சுவாசம் அதிகமாய் நாறுதல் இவைகளாகும்.

## 120. கோமாரி நோய்.*

குணம்:—முதலில் பசி தீபனம் அடங்கிப்போம். வாய் மூக்கு வறளும். கண் ரெப்பைகளும், நாசியும் கொஞ்சம் சிவந்திருக்கும். நாடி கொஞ்சம் படபடவென்று அடித்துக்கொள்ளும். உடம்பு சுடும். மாடாது. அசைவு போடாது. பின்பு காய்ச்சலுண்டாகி மேற் கண்ட குறிகள் பலத்துவரும். நிற்கும்போது கால்களை அடிக்கடி தூக்கிக்கொண்டு பலமாய் உதறும். சிலவேளைகளில் படுத்தால் எழுந்திருக்கவே மாட்டாது. வாயிலிருந்து தண்ணீர் வடிந்து கொண்டே யிருக்கும். அடிக்கடி உதடுகளைச் சப்பும். அல்லது தாடைகளைக் குதக்கும். சோதித்துப் பார்த்தால், வாயிலும் காலடிச் சந்துகளிலும் அநேக கொப்புளங்கள் தென்படும். அந்தக் கொப்புளங்கள் பழுத்தபின், காய்ச்சல் வரவரத் தணியும். நாக்குக் கூச்சம் குறையக்குறைய பசி தீபனம் மறுபடி உண்டாகும். 7—நாள்முதல் 16—நாட்களுள் வியாதி சொஸ்தமாகலாம். ஆனால் மாட்டை வேலையில் நெடுநாளைக்குக் கட்டி ஓட்டாதிருந்தால்தான் கால்புண்களாறும்.

## 121. விஷ ரத்தத்தினுட் குறிகள்.†

குணம்:—இது திருட்டு வியாதி. இதைக் கண்டுபிடிப்பது சிரமம். வெளியில் குறிகள் தோன்றுவதற்கு முன்னமே உள்ளேயே அதிகமாய் வலுக்கும். முதல் மூன்று, நான்கு நாள் பசி தீபனங் கொஞ்சங் கொஞ்சமாய் அடங்கும். ஆனால் தெரியாது. திம்மென்றிருப்பதும், முறைப்பாய் மயிர் சிலிர்த்துக்கொண்டிருப்பதும், காது தொங்கிக்கொண்டிருப்பதும் முன்னெச்சரிக்கையான குறிகள். அதற்குப் பின், குளிர்ந்த வேளைகளிலே கழுத்திலும் பக்கத்திலும் நரம்புகளிலும் ஒருவிதமான விடாத இசிவும் நடுக்கமும்

---

* இதை, திருநெல்வேலியில் வாய்நோய், கால் நோய் என்பார்கள். மதுரையில் காணை ஆம் என்பார்கள்.

† இதை, திருநெல்வேலியில் வாட்டுக் காய்ச்சலென்றும், கூடலூரில் வக்கை, சாவெக்கை என்றும் சொல்லுவர்கள்.

உண்டாகும். ஈறுகளிலும் உதடுகளின் உட்பக்கத்திலும் சிறு கொப்புளங்கள் காணும்.

இரண்டாவது நிலையிலே பசி தீபனம் அடங்கிப் போம். மூக்கு வாய் வறண்டு போம். சளி தங்கும். உள் தோலில் ரத்தங் கட்டிக்கொண்டிருக்கும். மூக்கிலிருந்து சளியும், கண்களிலிருந்து பீளையும் வடியும். முதலில் சாதாரணமான பேதி ஆரம்பிக்கும். ஆனால் அது சீக்கிரத்தில் துர்க்கந்தமும் அழுகல் நாற்றத்தோடுங் கூடி மிகவும் தண்ணீராய், ஜீரணமாகாத தீனியும், சீதமுங் கலந்து ஒருவிதமாகும். இதனாலே இன்னதென்று இந்த வியாதியை அறிந்துகொள்ளலாம்.

மூன்றாவது நிலையிலே மாடு வெகு துர்ப்பலப்பட்டுப் படுக்கையிலே விழுந்துகிடக்கும். இரத்தங்கலந்து பேதியாகும். வெகுவாய் முக்கிக்கொண்டு அதிக நோவோடு கொஞ்சங்கொஞ்சமாய்ப் போகும். நாடி சீக்கிரமாய் அடித்துக்கொண்டாலும் அதிக ஈனப்பட்டுக் கைக்குத் தென்படாது. உடலுங் கால்களும் சில்லிட்டு, கண்கள் குழி விழுந்து, மேல் மூச்சு வாங்கும்.

குணம்:—விஷச்செய்கை வெளிப்படும்போதெல்லாம் ஒருவிதமான துடி துடிப்புண்டாகும். ஆகிலும் இது சுற்றுப் பக்கத்தில் நிச்சப்தமாயிருந்தால் அதற்குத் தக்கபடி கொஞ்சம்மும் முறமாகவும், சந்தடியாயிருந்தால் அதற்குத் தக்கபடி அதிக மும்முறமாகவுமிருக்கும். தாகமெடுக்கும். ஆனால் தண்ணீர் வைத்தால் குடிக்க ஆவலாயிருந்தபோதிலும் தொண்டை நரம்புகள் இழுத்துக்கொள்வதனாலே மாடு தண்ணீர் குடிக்காது. இந்த வெறியிலும் ஓர் ஒழுங்கு இருக்கிறது. அதாவது மாடானது ஏதாகிலும் கிட்ட வருவதைப் பார்த்துக்கொண்டே சமீபத்தில் வரும்வரையில் சும்மாயிருந்து, பின்புதான் பாயும். எதற்கும், இந்தக் குறிகளினாலே கபால சூலை முதலிய வியாதிகளிருந்து இந்த வியாதியைப் பிசகாமல் தெரிந்துகொள்ளலாம்.

## 123. குண்டிக்காய் எரிச்சல்.

குணம்:—சாதாரணமாய்க் காய்ச்சல் சம்பந்தமான வருத்தத்தோடு, கொஞ்சங் கொஞ்சமாய் அடிக்கடி மூத்திரம் போகும். முதலிலே அது பிசுபிசுப்பாயிருக்கும். பின், ரத்தங் கலந்து வரும். மாட்டிற்கு முதுகு வளைந்துபோகும். இடுப்பிலே அமுக்கினால் நோவுண்டாகும். நடக்கும்படி கட்டாயஞ்செய்தால் பின்னங்கால்களை இழுத்துக்கொண்டு நடக்கும். நடப்பதால் உண்டாகும் நோவினாலே காய்ச்சல் குறிகள் மிகவும் அதிகமாகும்.

## 124. ரத்த மூத்திரம்.*

குணம்:—இதனாலே தேகத்திற்கு உபாதி கிடையாது. கொஞ்சங் காய்ச்சலாய் இருக்கலாம். கண்ணிலும் வாயிலும் உட்தோலிலே கொஞ்சம் மஞ்சள் நிறத்தையுங் காணலாம். இதனாலே ஈரலின் தொழில் மாறிப்போனதாகத் தெரியவரும். ஆயினும் மூத்திரத்தின் வர்ணந்தான் பிரதானக் குறி. அது முன்னே இளஞ்சிவப்பாயிருந்து, பின்பு கொஞ்சம் கருப்பான பழுப்பு நிறம் அல்லது காபி நிறமாக மாறும்.

## 125. மண்ணீரலில் ரத்தமடைப்பான்.

குணம்:—இந்த வியாதி சந்துகளில் காணும். மாடு முதுகை வளைத்துக் கொள்ளும். அடி யெடுத்துவைக்காது. போகும்படி கட்டாயஞ் செய்தால் பாரிசவாயு கண்டாற்போலத் தள்ளாடிக் கொண்டு போம். மூச்சுத் திணறும். அடி வயிறு நோவுறு ஜவ்வுத் தோல்களிலே ரத்தங்கட்டிக்கொள்ளும். நாடி படபடப்பாய் அடித்துக்கொண்டு கம்பிபோலிருக்கும். கவலையோடு சுற்று முற்றும் பார்க்கும். மூத்திரம் ரத்த நிறமாய் இருக்கும். மாடு தீவிரமாய் மயக்கங்கண்டு சீக்கிரத்தில்—6-மணி நேரத்தில்—செத்துப்போம்.

## 126. கபால சூலையின் குறிகள்.

முதலில் மாடு திம்மென்று உறக்கம் பிடித்திருக்கும். தலையைச் சாதாரணமாய் முன்னுக்குக் கொண்டுவந்து எதன் மேலாவது படியவைத்துக்கொள்ளும். நாடி உதட்டியாய்ப் பொறுத்துப் பொறுத்து அடித்துக்கொள்ளும். ஜவ்வுத் தோல்களிலே ரத்தங் கட்டிக்கொள்ளும்.

இரண்டாவது நிலையில் விகாரம் வந்துவிடும். ஜல பய ரோகங் கண்டிருக்கும் மாடு அதிகப் பிரமங்கொண்டு தனக்குத் தென்படும் பொருள் எதுவானாலும் பேதமில்லாமல் அதன்மேல் பாயும். கொம்புகளினாலும் முன்னங் கால்களினாலும் தரையைப் பீறிக்கொண்டு விடாமல் கதறும்.

* இதை, வெறிசென்னி யென்று கூடலூரிலும், விஷக்கடிநோய் என்று திருநெல்வேலியிலும் சொல்லுவார்கள்.

### 127. மண்டையடைப்பன் குறி.

இந்த வியாதி சடுதியிலே உண்டாகிறது. அறிவும் பலமும் கெட்டு, மாடு கீழே விழுந்து படுக்கும் வேஷ்டியோடு பெருமூச்சு வாங்கும். கண் பிதுங்கிக் கண்மணி பெரிதாயிருக்கும். நாடி துடிதுடிப்பாய்ப் பொறுத்துப் பொறுத்து அடிக்கும். சாவு அதிக சீக்கிரம் வந்து செத்துப்போம்.

### 128. தொண்டை அடைப்பான் குறிகள்.*

முதலில் இந்த வியாதி சடுதியில் வரும். பசி தீபனம் அடங்கிப்போய், மாடு அசைவு போடாது. காதுகள் தொங்கும். நாடிகள் அதிகவேகமாய் அடிக்கும்.

இரண்டாவது நிலையில், தொண்டையைச் சுற்றிலும் வீக்கமுண்டாகும். கஷ்டப்பட்டு மூச்சுவிடும். தலை நிமிர்ந்தபடி இருக்கும். வாயிலிருந்து நுரை விழும். கவலையோடு சுற்றுமுற்றும் பார்க்கும். ஜவ்வுத் தோல்களில் இரத்தங் கட்டிக்கொண்டு இருண்ட நீல நிறமாயிருக்கும். நாடி சிறிது வேகமாய் அடிக்கும்.

மூன்றாவது நிலையில், குறிகள் பலக்கும். பார்வைக்கு அதிக வருத்தம் தென்படும். நாடி வெகுவாய் விழுந்துபோம். தொண்டை வீக்கம் மிகவும் அதிகரித்து, கழுத்துக்கடியில் வந்துவிடும். மூச்சு வருத்தத்தோடு குறுகலாய்த் திக்குமுக்கலாடிக்கொண்டு வேகமாய் விடும். அசைவு சோர்ந்துபோய் விடும்.

### 129. ரத்தக்கட்டுக் காய்ச்சல் வியாதிகள்.

இது மாடுகளுக்கும் ஆடுகளுக்கும் காண்கிறதுண்டு. இங்கிலாந்து தேசத்திலுள்ள மாட்டு வைத்தியர் குளிர்ச்சியான தேசங்களிலே இவைகளைத் தொற்று வியாதி அல்லவென்று சொன்னபோதிலும், உஷ்ண தேசங்களில் சந்தேகமில்லாமல் அவை தொத்து வியாதிகள்தான். அவை தொத்து வியாதிகளிலே மிகக் கொடியன. அந்த வியாதி கண்ட பிராணி பிழைப்பதரிது. இந்து தேசத்திலே ஆடுகளுக்கும் அப்படிப்பட்ட வியாதி காண்பது அருமைதான். மாடுகளுக்கு ரத்தக்கட்டுக் காய்ச்சலைப்பற்றிக் காண்கிற பல ரூப பேதமான வியாதிகள் 2—மணி நேரமுதல் 30—மணி நேரந்தானிருக்கும்.

---

*இதை, கூடலூரில், அதிரநோய், பண்ணிநோய், நெஞ்செரிச்சல், மேனிக்கட்டு என்று சொல்லுவார்கள்.

### 130. கால் கோமாரி, வாய் கோமாரி.

கால் கோமாரியும், வாய் கோமாரியும் வெகுவாய்த் தொத்து கிற குணமுள்ளவைகள். கொல்லுவது அரிது. ஜாக்கிரதையாய் வைத்தியஞ் செய்தால் அந்த நோய் கண்ட மாடுகள் 100—ல் 1, 2 அல்லது 3 சாகா. பக்கச்சூலே மிகவும் தொத் துக்கொள்ளும் தன்மையது. அஃது அப்படிப்பட்டதென்று மாட்டுச் சொந்தக்காரர்களாகிய சுதேசஸ்தர்களுக்குச் சாதாரண மாய்த் தெறியாது. அது கண்டால் உள்ளேயே மறைந்திருக்கும். அது கொஞ்சங் கொஞ்சமாய் அதிகரிக்கும். அப்போது மாடுகள் வரவர இளைத்தாலும் வெகுவாய் 1—மாதம் முதல் 3—மாதம் வரையில் உயிரோடிருக்கும். பின்னும் நெடுநாள் ஜீவித்தாலும் ஜீவிக்கும். விஷ ஜுரமும், ரத்தக்கட்டுக் காய்ச்சலைப்பற்றிய வியாதிகளும், கால் கோமாரி, வாய் கோமாரியும் இந்துக்கள் தேசத்தில் சாதாரணமாய் எங்குமுண்டு.

### 131. விஷ ஜுரம்.

பக்கச்சூலே, வடமேற்குப் பஞ்சாப், சிந்து இத்தேசங்களி லும், பம்பாயில் சில பக்கங்களிலுமுள்ள மாடுகளுக்கு அடிக்கடி காண்பதுண்டு. இந்துதேசத்தின் மற்ற பாகங்களிலே கண்டதாகக் கேள்வியில்லை. இந்த வியாதிகளுக்கு ஒரே இனமாகிய ஜந்துக் களுக்குள் ஒரு ஜந்துவினிடத்திலிருந்து மற்றொரு ஜந்துவிற்கு நோய்த் தொத்திக்கொள்ளும் குணமிருப்பதுமல்லாமல், பிணி பிடித்த மாடுகளிடத்தில் தீனி முதலியவை கொடுக்க வந்திருந்த வன் பிணியில்லாத மாட்டினிடத்திற்குப் போவதனாலே அந்த மூலமாய் அந்த வியாதிகள் தொத்தலாம். அல்லது அந்த வியாதிகள் கண்டிருக்கும் மாடுகளுக்குச் சமீபத்திலிருக்கும் தீனி தண்ணீர் வழியாகவாவது தொத்திக்கொள்ளலாம்.

ஆகையால் வெகு ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். அப் படிப்பட்ட மாடுகள், கண்ட மாடு இருந்த கொட்டாயிலேயாவது தரையிலேயாவது தொத்துகிற குணம் பரவி இருக்கிறது. முக் கியமாய் விஷ ஜுரத்திலே கண்கள், வாய், மூக்கு, குடல் இவற்றி லிருந்து வடிந்த துர்நீரினாலும் காலமொறி வாய் கோமாரியிலே கால்களிலிருந்தும் வாய்களிலிருந்தும் வடிந்த துர்நீரினாலும் தொத்துகிற குணம் பரவி இருக்கிறதுமுண்டு.

வீடுகளில் பழகுகிற பிராணிகளானாலும் காட்டில் வாழ்கிற பிராணிகளானாலும் அசைவு போடுகிற பிராணிகளுக்கெல்லாம் விஷஜுரம் காண்பதுண்டு. ஆனால் மாடுகளுக்கு இது வெகுவாய்க்

காண்கிறது. சில சமயங்களில் ஆடுகளுக்கும் இந்த வியாதி வருகிறது. ஆனால் சாதாரணமாய் அவைகளுக்குச் சாந்தமாகவே வரும். ஆயினும் பிணி கண்டிருக்கும் பிராணிகளிடத்திலிருந்து பிணியில்லாத மாடுகளுக்கு ஆடுகள் மூலமாய் இந்த வியாதி தொத்திக்கொள்ளும் என்ற ஞாபகம் இருக்கவேண்டும். விஷஜ்வரமும், பக்கச் சூலையும் மனிதனுக்குத் தொத்தாது. ஆனால் ரத்தக்கட்டுக் காய்ச்சலானது அதைப்பற்றி யுண்டாகும் வேறு ரூபமான சில வியாதிகளில் பெரிய கட்டி ரூபமாய் மனிதனுக்குத் தொத்தி வந்ததாகக் காணப்படுகிறது. ஆகையால் ரத்தக்கட்டிக் காய்ச்சலைப்பற்றிய மண்ணீரில் ரத்தமடைப்பான் முதலிய வியாதிகளால் செத்துப்போன மாடுகளை மனிதர்கள் சோதித்துப் பார்க்கும்போது, அவர்கள் தங்கள் கைகளைக் கீறிக்கொள்ளாதபடியாகவாவது வியாதியின் சீழ் முதலிய நீர் ஓட்டம் ஒட்டாமலாவது வெகு ஜாக்கிரதையாய் இருக்கவேண்டும். கால் கோமாரி, வாய் கோமாரி கண்ட பசுக்களின் பாலைக் குடிப்பதனாலே வாய்ப்புண் முதலிய நோய் மனிதனுக்கு உண்டாயிருந்ததாக திருஷ்டாந்தம் கண்டிருக்கிறது.

இந்த வியாதிகள் இந்தியாவிலே எங்கும் எப்போதும் ஏறக்குறைய இருந்துகொண்டேயிருக்கிறது. முக்கியமாய் விஷ ஜ்வரமும், கால் கோமாரியும், வாய் கோமாரியும் விசேஷமாக உண்டு. அவைகள் ஒரு காலத்தில் இல்லாவிட்டாலும் மறுபடியும் தோன்றும்படியானவைகளே. ஆகையால் அந்த வியாதிகளைத் தோன்றாமல் தடுப்பதற்கும், அவைகள் மந்தைக்குள் உண்டானால், அல்லது அவைகளைப் பரவவொட்டாமல் தடுப்பதற்கும் எப்போதும் முன் ஜாக்கிரதை வேண்டும். ஆடு மாடுகளை வைத்துக்கொண்டிருப்பவர்கள் ஜாக்கிரதையாய்ச் செய்யவேண்டிய தென்னவென்றால், ஒன்று மாடுகளையாவது ஆடுகளையாவது சந்தையில் வாங்கிவந்தால், மாடுகளும், ஆடுகளும் பல திக்குகளிலிருந்து வருகிறபடியால், எந்த திக்கிலாவது விஷ ஜ்வரமாகிலும், கால் கோமாரி, வாய் கோமாரியுமாகிலும், அவ்விரண்டு வியாதிகளுமாகிலும், அதற்கு முன்னமே பரவியாவது, அப்போது அப்போது பரவிக்கொண்டாவதிருக்கலாமாகையாலும், அவைகளைச் சந்தையில் தொத்து வியாதி வாடைப்பட்டு இருப்பதாகவே எண்ணி, எப்போதும் வேண்டிய ஜாக்கிரதையைச் செய்யவேண்டும்.

2—ஆவது, ஆடுகளையாவது மாடுகளையாவது ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குக் கொண்டுபோனால் வழியிலே அவை

களை மற்ற மாடுகளோடாவது ஆடுகளோடாவது கலக்கவொட்டக் கூடாது. மேலும் யாதொரு சத்திரத்திலாவது, அதற்குச் சமீபத்திலாவது இராக்காலத்தில் அவைகளை வைத்திருக்கக் கூடாது. ஏனென்றால் நோய்கண்ட ஆடுகளாவது மாடுகளாவது சத்திரத்தில் முன்னமேயாகிலும் அப்போதாகிலும் தங்கியிருக்கலாமாதலாலே அவ்விடத்தில் தொத்து வியாதி ஒட்டிக்கொண்டிருக்கும். குளிர்ந்த வேளையில் அவைகளை ஓட்டிக்கொண்டு போகவேண்டும். உஷ்ணகாலத்தில் அவசியம் அப்படிச் செய்யவேண்டியது. ஒரு நாள் முழுவதும் 10, 12 மயிலுக்கு அதிகமாக அவைகளை ஓட்டக்கூடாது. அவைகளுக்கு அடிக்கடி தண்ணீர் காட்டி நல்ல தீனி போடவேண்டியது.

3–ஆவது, ஆடுகளையாகிலும் மாடுகளையாகிலும் சந்தையிலாவது மற்றெங்காவது ஒருவன் விலைக்கு வாங்கிக்கொண்டு வந்தால், வீட்டுக்கு வந்தவுடனே அவைகளைத் தனியே வைத்திருக்கவேண்டுமேயல்லாமல், மேய்கிற இடத்திலாவது தண்ணீர் காட்டுகிற காலத்திலாவது மற்றெப்போதாவது கம்பத்தைச் சேர்ந்த முன்னைய மாடுகளோடு கலக்கவொட்டக் கூடாது. அவைகளுக்கு வியாதி தொத்தி இருக்கிறதோ இல்லையோ என்று நிச்சயமாய்த் தெரிந்து கொள்ளும் பொருட்டு, குறைந்தது 1–மாதம் அல்லது $1\frac{1}{2}$–மாதம் வரையில் அவைகளைத் தனியே கட்டவேண்டும். அந்தக் காலம் வரையில் புதிதாய்க்கொண்ட மாடுகளைக் காலையிலும் மாலையிலும் ஜாக்கிரதையாய்ப் பார்வையிடவேண்டும். மேற்கண்ட வியாதிகளிலே ஏதாவது அதற்குள் காணப்பட்டால், நோய்கண்ட பிராணிகளை உடனே வேறுபடுத்தவேண்டியதுமல்லாமல், மற்றவைகளைச் சிறு சிறு கூட்டமாகப் பிரித்து, ஒவ்வொரு கூட்டத்தையும், தூர தூரமாய்க் கொட்டிலில் கட்டவேண்டும். 1–மாதம் அல்லது $1\frac{1}{2}$–மாதம் வரையில் அவைகளுக்குள் வியாதி காணாமலிருந்தால் அவைகளைச் சுகமாய் மற்ற மாடுகளோடு சேர்த்து மேய்க்கலாம்; கட்டலாம்.

4–ஆவது, மாடுகள் பயணம் போகும்போதாவது ஒரு துக்கடியிலிருந்து மற்றொரு துக்கடிக்கு அவைகளைக் கொண்டுபோகும் போதாவது அவைகளுக்கு வியாதி தொத்திக்கொள்ளலாம். ஆகையால் அவைகள் வீடு வந்து சேர்ந்த உடனே அவைகளை ஜாக்கிரதையாய்ப் பார்வையிடவேண்டியது. தொத்து வியாதி கண்டிருக்கிற துக்கடி வழியாய் அவைகள் போயிருந்தால் சிறிது காலம் வரையில் அவைகளைத் தனியே கட்டவேண்டும். 20-ஆவது 21–ஆவது விதிகளைப் பார்க்கவும்.

5-ஆவது, தொத்தும்படியான வியாதியானது ஆடு மாடுகளுக்குள் காணப்பட்டால், நோய்கண்ட பிராணியை சௌக்கியமாய் இருக்கும் பிராணிகளைவிட்டு உடனே அவசியம் வேறு படுத்த வேண்டும். எல்லாப் பிராணிகளையும் ஜாக்கிரதையாய்ப் பார்வையிட்டு எதற்காவது வியாதிகண்டிருப்பதாக (சொற்பகுதி) தெரியவந்தால் அதை வேறிடத்தில் தனியே கட்டவேணடும்.

6-ஆவது, பிணியில்லாத மாடுகளை இடம் பிடிக்கும்படியான அவ்வளவு சிறிய கூட்டம் கூட்டமாகப் பிரித்துப் பிணியுள்ள மாடுகளின் காற்று வாடை படாதபடி ஒவ்வொரு கூட்டத்தையும் அடிக்கடி பார்வையிட்டு யாதொரு பிராணி சொற்ப வியாதியுடன் இருக்கிறதாகத் தெறிகிறதோ அதை உடனே அப்புறப்படுத்த வேண்டும். இப்படி விடாமல் செய்வதனுல் இரண்டொரு கூட்டங்களுக்கு மாத்திரமே சில நாட்களில் வியாதி நின்றுவிடும். வியாதியாய் இருக்கிற பிராணியை உடனே வேரிடத்திற்கு அப்புறப்படுத்துவதனுலே மந்தை முழுதும் வியாதி பாவாமல் சீக்கிரத்தில் நின்றுபோய்விடும். ஒவ்வொரு கூட்ட மாடுகளையும் தனியே வைத்த பின்பாவது, அந்த அந்தக் கூட்டத்தில் கடைசியாய்ப் பிணிகண்ட மாட்டை அப்புறப்படுத்திய பிறகாவது 1-மாதம் அல்லது $1\frac{1}{2}$-மாதம் மற்ற மாடுகளுடன் அதைச் சேர்க்கக் கூடாது. தனியே வைத்திருக்கவேண்டும். 20-ஆவது 21-ஆவது விதிகளைப் பார்க்கவும்.

7-ஆவது, பிணிகண்டமாடுகளை வைக்கும்இடம் தனியே இருக்க வேண்டுமல்லாமல் அதற்குப் பலமானஅடைப்பும் அடைத்திருக்க வேண்டும். வியாதியுள்ள மாடுகளையும் அதற்கு உபகாரஞ் செய்கிறவர்களையும் அந்த இடத்தைவிட்டுப் போகவொட்டக் கூடாது. உபசாரஞ் செய்கிறவர்களுக்கும் மாடுகளுக்கும் ஆகாரமுந் தண்ணீரும் கொண்டுபோய்க்கொடுக்கலாமேயல்லாமல், பிணியுள்ள மாடுகள் இருக்கும் இடத்திலிருந்து தீனி, தண்ணீர், குப்பை, துணி முதலிய எதையும் எடுத்துக்கொண்டு போகக்கூடாது. நாய்களை அவ்விடத்திற்குப் போகவரவொட்டக் கூடாது. அவை போக்குவாத்தாயிருந்தால் ஒருவேளை அவை மூலமாய்ப் பிணி இல்லாத மாடுகள் இருக்கிற இடத்திற்கு வியாதி தொத்திக் கொள்ளும்.

8-ஆவது, பிணி மாட்டுத் தொட்டிக்குள் சேருகிற உலர்ந்த செத்தை முதலியவைகளை அந்தத் தொட்டிக்குள்ளாகவே சுட்டெரித்துப் போடவேண்டும். ஈரச்சாணி முதலிய மலங்களை அப்போதைக்கப்போது கிடையை விட்டெடுத்து, தொட்டிக்குள்ளாகவே குழிவெட்டிப் புதைக்கவேண்டும். இந்தக் குழிகள்

6–அடி ஆழத்துக்கு அதிகமாமவே இருக்கவேண்டும். அந்தக் குழிகள் பூமி மட்டத்துக்கு 2-அடி ஆழத்துக்குள்ளாகவே அந்த ரச செத்தை, சாணி முதலியவைகளைத் துத்து, அந்த 2-அடிக்கு சுண்ணும்பையும் புதிதாய் நல்ல மண்ணையும் கொண்டுவந்து போட்டு மூடவேண்டியது.

9-ஆவது, அந்தத் தொட்டியின் கிடைகள், சுவர்கள் முதலியவைகளையும், தரையையும் நன்றாய் அடிக்கடி பெருக்கிக் கழுவி சுத்தி செய்யவேண்டும். அப்படிச் சுத்தி செய்யுந்தோறும் தொத்து நிவிர்த்திக்காக மருந்துகளையாவது சுண்ணும்பையாவது சாம்பலையாவது கூட உலர்ந்த மண்ணையாவது சுத்தி செய்த உடனே தரையின்மேல் அதிகமாய்த் தெளிப்பதுமல்லாமல், கதவு தூண் முதலிய மரங்களையும் சுவர்களையும் முன்னே கழுவிப் பின்பு சுண்ணும்பு அடிக்கவேண்டும்.

10-ஆவது, பிணி மாடுகளிருக்கும் தொட்டிக்கு நன்றாய்க் காற்று வர வழியிருக்கவேண்டும். தினந்தோறும் அந்தத் தொட்டியில் 1–மணிநேரமாவது பின்னும் அதிகமாகவாவது கந்தகப் புகை போடவேண்டும். போடும்போது கதவுகளையும் ஜன்னல்களையும் மூடி காற்றுப் போகும் வழிகளை மாத்திரம் சிறிது திறந்து வைக்கவும்.

11-ஆவது, கொசு, ஈக்கள் அதிகமாய் மாடுகளைத் தொந்தரவு செய்யும் காலங்களில் காற்றுவாட்டமாய்த் தொட்டியின் கதவுகளுக்கு எதிரிலே அதிகமாய்ச் செத்தைகளை எப்போதும் கொளுத்துவது நல்லது.

12-ஆவது, நோய்கொண்டிருக்கும் மாடுகளை ஜாக்கிரதையாய்ச் சுத்திசெய்து வைத்துக்கொண்டு, ஆகாரமாக தேட்டையான அரிசிக் கஞ்சி வார்த்துக்கொண்டு, புதிதான பச்சைப் புல் போட்டு வரவேண்டும். பிணியில்லாத மாடுகளுக்கும் மெதுவானதும், சாணியை இளகச் செய்வதுமாகிய தீனியைப் போட்டுவரவேண்டும். ஏனென்றால் சாணியை இளகச்செய்கிற தீனி தின்னும் மாடுகளைவிட கெட்டியான உலர்ந்த தீனி தின்னும் மாடுகளுக்கு அதிக மும்முறமாய் வியாதி காணும்.

13-ஆவது, ஆடு மாடுகளுக்குள் இந்தத் தொத்து வியாதிகள் பரவி இருக்கும்போது, பிணிகண்ட மந்தைக்குள் வியாதியொழிந்த பின்பு 1–மாதம் அல்லது 1½–மாதம் வரையில் அந்தப் பிணி கண்ட மந்தையைப் பிணியில்லாத மந்தைகளோடு வைத்திருக்கக் கூடாது; மேய்க்கவுங் கூடாது. 19-ஆவது 20–ஆவது பிரிவுகளைப் பார்க்கவும்.

14-ஆவது, சொல்லப்படுகிற பிராணிகளைப் பிணிகண்ட பிராணிகளிருந்த இடத்தைவிட்டு அப்புறங் கொண்டுபோவதற்கு முன்னமே, வெந்நீரை விட்டு, சோப்புப் போட்டுத் தேய்த்து, நன்றாய்க் கழுவவேண்டும். கறித் திராவகம் கிடைக்குமானால் 2-படி வெந்நீருக்குக் காலாழாக்குத் திராவகம் விழுக்காடு விட்டுக் கலந்து கழுவினால் நல்லது.

15-ஆவது, விஷஜுரம், ரத்தக்கட்டுக் காய்ச்சல் இவற்றைப் பற்றிய வியாதிகள் பக்கச்சூலை, கால்கோமாரி, வாய்கோமாரி இந்த வியாதிகளால் செத்துப்போகும் ஆடுமாடுகளைக் குறைந்தது 4-அடி ஆழத்துக்குள் புதைத்து, தித்துப்போடவேண்டும்.

16-ஆவது, இந்தத் தொத்து வியாதி கண்டு செத்துப் போகும் மாடுகளின் தோல்களை நன்றாய்க் கிறி கொத்தி சவத்தோடுகூடபுதைத்துவிடவேண்டும். அல்லது உப்பிலாவது சுண்ணாம்பிலாவது வேறே தொத்து நிவாரண மருந்திலாவது ஊறப் போட்டு, கிரமமாய்த் தொத்து நிவிர்த்தி பண்ணவேண்டும்.

17-ஆவது, தொத்துவியாதி கண்ட மாடுகளிருந்த கொட்டாய்களின் தரையின் மேல்மட்டத்தையும் மண்ணையும் வெட்டி எடுத்துக்கொண்டுபோய் வேறிடத்தில் புதைக்கவேண்டும். அல்லது உப்பிலாவது அடி மண்ணை, நன்றாய்க் கொத்திப் புரட்டி மேலே புது மண்ணை இட்டு தரையை மெழுகவேண்டும். செங்கல் தள வரிசைகளையும் கருங்கல் தள வரிசைகளையும் பெயர்த்தெடுத்து, கழுவி, சுண்ணாம்பினாலாவது, கறித் திராவகத்தினாலாவது தொத்து வியாதி வாடையைப் போக்கவேண்டும்.

18-ஆவது, தொத்து வியாதிகள் கண்ட பிராணிகளைக் கட்டிப் போட்டும், இருந்த வண்டி, ஏர்க்கால், நுகத்தடி, வீரி முதலானவற்றின் பழந் துணிகளையும் உள்ளே அடைத்திருப்பதையும் எடுத்துக் கொளுத்தவேண்டும்.

19-ஆவது, விஷஜுரம், ரத்தக்கட்டுக்காய்ச்சலைப்பற்றிய வியாதிகள் கால்கோமாரி, வாய்கோமாரி இவைகள் 28-நாள்வரை ஒட்டிக்கொண்டு இருக்குமென்ற நம்பிக்கையுண்டு. ஆகையினால் இந்த வியாதிகளின் தொத்து வாடை பட்டிருக்குமென்று எண்ணப்பட்ட பிராணியை, பிரத்தியேகமாய் வைத்திருக்க வேண்டிய காலம் 1-மாதமென்று குறித்திருக்கிறது.

## வியாதி இருக்கப்பட்ட நாள்.

20-ஆவது, பக்கச்சூலை 2-வார முதல் 6-வாரம் வரை தொத்திக்கொண்டே யிருக்கும். ஆனால் சகஜமாய்ச் சுமார் 40—நாள் வரையிலிருப்பதாகக் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது.

ஆகையால் மாடுகள் இந்த வியாதியின் தொத்துவாடைக் குட்பட்டிருக்குமாகில் 45—நாள்வரையில் அவைகளைப் பிரத்தியேகமாய் வைத்திருக்கவேண்டும்.

குறிப்பு:—மாடுகளுக்குக்காணும் சொறியும் ஆடுகளுக்குக்காணும் சொறியும் தொத்துகிறது. ஆனால் அவைகளைக் கொல்லாது. ஆயினும் மந்தைக்குள் இந்த நோய் கண்டால், நோயில்லாதப் பிராணிகளை விட்டுப் பிரித்து ஓட்டிக்கொண்டுபோய் அந்த நோயைப் பாவவொட்டாமல் அவைகளுக்கு வைத்தியம்செய்து சொஸ்தப்படுத்தவும். இல்லாவிட்டால் சொறி பிடித்த மாடும் ஆடும் கொழுத்துப் புஷ்டியாகாது. ஆடுகளுக்குக் காணும் பெரும் தொத்து நோயாகிய கோமாரி, வைசூரி இந்து தேசத்திலுள்ள மந்தைகளுக்கு ஆடு மாடு பெருவாரிநோய் கழிசனீர்கள் காணவில்லை. ஐரோப்பாவிலே பல இடங்களிலும் 100-க்கு 10-முதல் 80-வரை ஆடுகளுக்கு இந்த நோய் காணும். அந்தநோய் கண்ட பிராணிகளைத்தொத்து வியாதிகளைப்போல வேறே வைத்து வைத்தியம் செய்யவேண்டும்.

## மூக்கடைப்பானும், சிகிச்சையும்.

தலை வழியாய்ச் சுவாசதாரையின் ஜவ்வுத் தோலிலிருந்து சளி மிகுதியாய் ஒழுகும். இந்த வியாதி பார்ப்பதற்கு அற்பமானதா யிருந்தபோதிலும் அது கண்டபின் வெகுவாய் அதையொட்டி வேறு வியாதிகளுண்டாகின்றன.

குறிகள்:—மூக்கிலிருந்து சளி மிகுதியா யுண்டாவதோடுகூட சொற்பக் காய்ச்சலுங் காணும்.

சிகிச்சை:—குளிர்காற்றுவது ஈரமாவது படவொட்டாமல் மாட்டைக் கொஞ்சம் பத்திரமாய் வைத்திருப்பது நல்லது. பொட்டிலுப்பு வேளைக்கு இரண்டு திராம், சுமார் அரையே மூன்று வீசம் ரூபாயெடை விழுக்காடு ஒரு நாளைக்கு இரண்டு தடவை தீனியில் கலந்து கொடுக்கலாம்.

## 133. நெஞ்சடைப்பான் வியாதி.

குணம்:—அதிகமாய் ஓட்டுவதனாலும், குளிர்காற்று, மழை இவற்றில் அடிபடுவதனாலும் சாதாரணமாய் உண்டாகும்.

குறிகள்:—ஒதிறல், திம்மென்றிருப்பது, காதுகள் மடங்கித் தொங்குதல், தலையிறக்கம், நாடி உதட்டியாய்ப் படபடவென்று அடித்துக்கொள்வது, கொம்புகளும் காதுகளும் சிலவேளை சூடாயும் சிலவேளை சில்லென்றும் மாறிமாறி யிருப்பதுமுண்டு. சாதாரணமாய், செருமல் கண்டிருக்கும். மேல் மூச்சு வாங்கும். கண் ரெப்பைகளின் உள் தோல் ரத்தங்கட்டி உப்பியிருக்கும். ஏதோ ஒவ்வொரு வேளையில் படுத்திருந்தாலும் சாதாரணமாய்ப் படுக்காது. கடைசியாய்ச் சாகுங்காலத்தில் சுவாசக்குழாய் கெட்டுப்போவதனாலே சுவாசம் அதிகமாய் நாறும்.

மருந்து:—அடியிற் கண்டிருக்கிற மருந்துண்டையை 4—மணி நேரத்திற்கு ஒருதரம் போடவேண்டும். கர்ப்பூரம், பொட்டிலுப்பு, முசாம்பாய், அபினி இவை வகை யொன்றுக்கு 2—திராம் சுமார் $\frac{11}{16}$—ரூபாயெடை எடுத்துக்கொண்டு, பொடி செய்து, போதுமான தேன்விட்டுப் பிசைந்து, மிருதுவான உண்டை செய்துக்கொள்ளவும். சாணி இளகி வெளியாகும்படி அந்த உண்டையில் பேதி மருந்து கொஞ்சமிருக்கிறது. ஆனால் அதிக பேதியாகவொட்டாமல் வெகு ஜாக்கிரதையாய்ப் பார்க்க வேண்டும். அதிக பேதியானால் முசாம்பரத்தைத் தள்ளிப் போடவேண்டும். மார்புக்கு இரண்டு பக்கங்களிலும் அடியிற் கண்டிருக்கிற தைலத்தைத் தேய்த்துக் கொப்பளிக்கச் செய்ய வேண்டும். சேர்வாளக்கொட்டையை அரைத்து 1—அவுன்சு, 2—நாழி ரூபாயெடை, தேங்காயெண்ணெய் 8—அவுன்ஸ், முக்காலாழாக்கு இவ்விரண்டையும் 1—மணி நேரம் கொதிக்கவைத்து, ஒவ்வொரு பக்கத்திலும் $\frac{1}{4}$—மணிநேரம் அழுத்தித் தேய்க்க வேண்டும்.

## 134. கோமாரியின் குறியும், சிகிச்சையும்.

இது, கால்கோமாரி, வாய்கோமாரி யென்று சர்தாரணமாய்ச் சொல்லப்படும். இஃது ஒருவகைத் தொத்துக் காய்ச்சல். சாதாரணமாய்த் தொம்மைவியாதி, நாக்கிலும் உதடுகளின் உட்பக்கங்களிலும் மேல் வாயிலும் குளம்பின் சந்துகளிலும் கொப்பளங்கள் உண்டாம்.

குறிகள்:—முதலில் பசி தீபனம் அடங்கிப்போம். வாய் மூக்கு வறளும். கண்ரெப்பைகளும் நாசியும் கொஞ்சம் சிவந்திருக்கும். நாடி-

கொஞ்சம் படபடவென் றடித்துக்கொள்ளும். உடம்பு சுடும். மாடு அசைவுப்போடாது. பின்பு காய்ச்சலுண்டாகி மேற்கண்ட குறிகள் வலுத்துவரும். நிற்கும்போது கால்களை அடிக்கடி தூக்கிக்கொண்டு பலமாய் உதறும். சில வேளைகளில் படுத்தால் எழுந்திருக்கவே மாட்டாது. வாயிலிருந்து தண்ணீர் வடிந்து கொண்டே யிருக்கும். அடிக்கடி உதடுகளைச் சப்பும். அல்லது தாடைகளைக் குதப்பும். சோதித்துப் பார்த்தால் வாயிலும் காலடிச் சந்துகளிலும் அநேக கொப்புளங்கள் தோன்றும். அந்தக் கொப்புளங்கள் பழுத்தபின்பு காய்ச்சல் வரவரத் தணியும். நாக்குக் கூச்சம் குறையக் குறைய பசி தீபனம் மறுபடி உண்டாகும். 7-நாள்முதல் 14-நாட்களுக்குள் வியாதி சொஸ்தமாகலாம். ஆனால், மாட்டை வேலையில் 7-நாளைக்குக் கட்டி யோட்டாதிருந்தால்தான் கால்புண்கள் ஆறும்.

சிகித்சை:—பிணி உண்டாகவொட்டாமல் தடுப்பது சாதாரணமாய்த் தொம்மை வியாதியாகத் தொத்துகிறபடியால் தொத்து ரோக வைத்தியத்தில் சொல்லி யிருக்கிறபடி ஆரோக்கியமாயிருக்கிற மாடுகளைப் பிரித்து தூரக் கொண்டுபோய் வைப்பதே முக்கியமான காரியம். சாதாரணமாய் அந்த வியாதிக்கு முழுவதும் மருந்து கொடாமலே இருக்கலாம். காய்ச்சல் பலமா யிருக்குமாகில் கர்ப்பூரம் 2-திராம் 7-நாழி ரூபாயெடை, பொட்டிலுப்பு 2-திராம் ½—ரூபாயெடை இவற்றை 1—நாளைக்கு மூன்று தடவை உள்ளுக்குக் கொடுக்கவேண்டும். கொப்புளங்களிலே வாய்ப்புண்ணையும் நோவா யிருக்குமாகையால் வழக்கப்படி உரப்பான உலர்ந்த தீனி தின்னமாட்டாது. ஆகையினாலே மாடு பலவீனப்பட்டுப்போம். அப்படி போகாதபடி பிசைந்த தவுடும் இளம் புல்லுமாகிய மெதுவான தீனியை வைக்கவேண்டும். இதைத் தின்னுவிட்டால் நாள்தோறும் இரண்டு மூன்றுபடி கஞ்சிவைத்து, அந்தக் கஞ்சியைக் கொட்டானல் மெதுவாகப் புரையேருமல் தொண்டைக்குள் கொட்டா வானகத்துக்குழாயை வைத்து வார்க்க வேண்டும். வாயிலும் கால்களிலும் கொப்புளங்களைக் குத்திக் கால் கொப்புளங்களைப் புழுக்கள் புழுக்க வொட்டாமல் நிரம்ப ஜாக்கிரதையோடு பார்த்து நன்றாய்க் கழுவி 3-அவுன்ஸ் கர்ப்பூரம், 2-பலம் தேங்காயெண்ணெய், 2—பயிண்டு உழக்கு இவற்றைக் கலந்து வைத்துக் கொண்டு தடவினால் கிருமிகள் பிடிக்கா. காய்ச்சல் முழுவதும் நீன்றுபோன பின்பு, சுத்த ஜலத்தில், ஒரு நாளைக்கு 5, 6-மணிநேரம் மாட்டை நிற்க வைப்பதனாலே கொஞ்ச குணம் உண்டாகலாம். புண்களின் மேல் சுண்ணாம்பு நீறு போட்டு அப்புகிற வழக்கம் நிரம்பவும் கெட்டது. அதினாலே வழண்டு போகிறபடியால் சொஸ்தப்படு

வதற்குத் தடையுண்டாகிறது. கூடிய மட்டில் படுத்திருக்க மாட்டிற்கு இஷ்டமுண்டாகும்படி உலர்ந்த வைக்கோலை அதிகமாகப் பரப்பி, மெத்தென்று படுக்கை போடவேண்டியது. தவிர, காய்ச்சலுள்ள பிராணிகளை நிரம்பவும் ஜாக்கிரதையோடு பொசுப்புத் தண்ணீர் முதலியன வைத்துப் பாதுகாக்க வேண்டியது, மாடு படைத்தவனுக்கிருக்க வேண்டியது முக்கியமானது தான்.

## 135. விஷ ஜ்வரம்: குறிகள்: சிகிச்சை.

இஃது ஒரு தொத்துக் காய்ச்சல். இந்த வியாதியில் விசேஷமாய் இலைகளும், புண்ணுமிருக்கும்.

கள் :—1-ஆவது, இது திருட்டு வியாதி. இதைக் கண்டிப்பதற்கு வெளியில் குறிகள் தோன்றுவதற்கு முன்னமே உள்ளேயே அதிகமாய் வலுக்கும். முதல் 3, 4-நாள் பசி தீபனம் கொஞ்சமாய் மட்டப்படும். ஆனால் தெரியாது. கிம்மென்றிருப்பதும், முறைப்பாய் மயிர் சிலிர்த்துக் கொண்டிருப்பதும், காது தொங்கிக் கொண்டிருப்பதும் முன்னெச்சரிக்கையான குறிகள். அதற்குப் பின் குளிர்ந்த வேளைகளிலே கழுத்திலும் பக்கத்திலும் நரம்புகளிலே ஒரு மாதிரியான விடாத இசிவும் நடுக்கமுமுண்டாகும். ஈறுகளிலும் உதடுகளின் உட்பக்கத்திலும் சிறு கொப்புளங்கள் காணும்.

2-ஆவது நிலைமையிலே பசி தீவனம் மடங்கிப் போம். மூக்கு, வாய் வரண்டுப்போம்; சளி தங்கும். உள்தோலில் இரத்தங் கட்டிக் கொண்டிருக்கும். மூக்கிலிருந்து சளியும் கண்களிலிருந்து பீளையும் வடியும். முதலில் சாதாரணமான பேதி ஆரம்பிக்கும். ஆனால் அது சீக்கிரத்தில் துர்கந்தமும் அழுகல் நாற்றத்தோடுங் கூடி மிகவும் தண்ணீராய் ஜீரணமாகாத தீனியும் சீதமும் கலந்து ஒருவிதமா யிருக்கும். இதனாலே இன்னதென்று இந்த வியாதியை அறிந்து கொள்ளலாம்.

3-ஆவது நிலைமையிலே மாடு வெகு துர்ப்பலப்பட்டுப் படுக்கையில் விழுந்து கிடக்கும். இரத்தங் கலந்து பேதியாகும். வெகுவாய் முக்கிக் கொண்டு அதிக நோவோடு கொஞ்சங் கொஞ்சமாய்ப் போகும். நாடி சீக்கிரமாய் அடித்துக்கொண்டாலும் அதிக ஈனப்பட்டுக் கைக்குத் தென்படாது. உடலும் கால்களும் சில்லிட்டுக் கண்கள் குழி விழுந்து மேல்மூச்சு வாங்கும்.

சிகிச்சை:—முன்னே வியாதி வரவொட்டாமல் தடுக்க வேண்டும். உடலில் வியாதி ஆரம்பித்தது முதல் சராசரி 4-நாள் கழிந்த பின்பு தான் சாமானியர்கள் ஏதாவது குறியைக் கண்டு பிடிப்பார்கள். இதனால் ஒரு மந்தையில் அநேக மாடுகளுக்கு இந்த வியாதி தொத்திக்கொண்டு அதைக் கண்டுபிடிப்பதற்கு முன்னமே மற்ற மாடுகளையும் தொடர்வதற்கு மூலமாயிருக்கிறது. அப்படிப்பட்ட வியாதி கண்டதாகக் திட்டமாய்த் தெரிந்தவுடனே நோவில்லாமலிக்கிற மாடுகளை அந்தக் கிராமத்துக்கு 300 கஜதூரத்தில் ஓரிடத்தில் 20, 20—மாடுகளாப் பிரித்து வைக்கவேண்டும். நோய் கண்ட மாடுகளை வைத்தியத்திற்காக ஓரிடத்தில் அடைத்து வைக்க வேண்டும். வியாதி முழுமையும் ஒழிந்த பின்பு 15-நாள் வரையில் மாடுகளை ஒன்றாய்ச் சேர்க்கக்கூடாது. குணமருந்து, இது பலவீனப் படுத்துகிற உட்காய்ச்சலான விஷஜுரமான தலாலும் அதோடுகூட துர்ப்பலப்படுத்தும். பேதி காண்கிறபடியினாலும், ஔஷதப் பிரயோகத்தில் ஜாக்கிரதையாயும் மிதமாயுமிருக்கவேண்டும். உடம்பின் பலம் குறையவொட்டாமல் காப்பாற்றிக்கொண்டு அனுகூலஞ் செய்வதே முக்கியம். முதலில் பேதியில்லாவிட்டால் காலையிலும் மாலையிலும் அடியில் கண்ட ஔஷதத்தை வார்க்கலாம். கர்ப்பூரம் 2-திராம், $\frac{11}{16}$-ரூபாயெடை பொட்லுப்பு, 2-திராம் $\frac{11}{16}$-ரூபாயெடை, ஊமத்தைவிதை ஒரு திராம், மேற்படியில் பாதி கிரியாத்துக் குச்சு நிலவேம்பு 2 திராம், கள்ளு சாராயத்திலே கர்ப்பூரத்தைக் கரைத்து, மற்றி சரக்குகளைத் தூள் செய்து, அதில் கலக்கிப் பின்பு 1—படி கஞ்சியை அதில் சேர்த்து, கொட்டாலால் மாட்டின் தொண்டைக்குள் சாக்கிரதையாக வார்க்கவேண்டியது.

2—ஆவது நிலைமையிலே பேதி ஆரம்பிக்கும்போது மலத்தைப்போக்குவதற்கு ஸ்வாபாவிமமாகவே அஃது உண்டாகிறபடியால் சடுதியில் அதை நிறுத்த யத்தனப்படுவது தகுதியல்ல. ஆனால் அதிகமாய் பேதியாகிவிடுகிற பக்ஷத்தில் பலவீனமுண்டாகி அதனுதே சொஸ்தமுண்டாவது துர்லாபமாதலால், சுமாராய் 24-மணிநேரம் பேதியாய்க் கொண்டிருந்த பின்பு, அடியில் கண்ட வஸ்துவை நன்றாகத் தூள்செய்து மேற்கண்ட மருந்தோடு சேர்க்கலாம். மாசிக்காய் 2-திராம், $\frac{11}{16}$—ரூபாயெடை, குணமாகிற குறிகள் காணப்பட்டவுடனே சாதாரணமாய் அதிதீவிரத்தில் சொஸ்த முண்டாய் விடுமாதலால் மருந்தைக் குறைத்தாவது போடவேண்டியது. கஞ்சி வார்த்துத் திடமுண்டாக்க வேண்டியதே தவிர, வேறொன்றுஞ் செய்ய வேண்டியதில்லை. அதிக துர்ப்பலமாக விருந்தால், பட்டைச் சாராயத்தை மேற்கூறிய அளவிற்குக் கஞ்சியிலே சேர்த்து வார்க்கலாம். இரைத்

தின்ன மாட்டுக்குக் கொஞ்சமாவது இஷ்டமுண்டானதாகத் தெரிய வந்தவுடனே அதற்குப் பச்சைப் புல், கேழ்வரகுத்தட்டை, கருப்பந்தழை அல்லது சோளத் தட்டை இவற்றைக் கொஞ்சம் கொஞ்சமாகப் போடவேண்டும். முக்கியமாய், மாடு பலமுண்டாக வேண்டிய ஹேதுவைச் சீக்கிரத்தில் தேடவேண்டும்.

### 136. ஜலபயரோகம் : குறிகள் : சிகிச்சை.

வெறிபிடித்த யாதொரு ஜந்துவினுடைய வாய் நீர் காயத்தில் ஊறுவதினாலே உண்டாகிற இசிவு வியாதி உடலில் விஷம் 1-வாரமுதல் 6-மாசகாலம் வரையில் தங்கிருந்து பின்பு விஷச் செய்கையாக வெளியாவதுண்டு.

குறிகள் :—விஷச்செய்கை வெளிப்படும் போதெல்லாம் ஏதோ ஒருவிதமான துடிதுடிப்புண்டாகும். ஆயினும் இது சுற்றுப் பக்கத்தில் நிசமாக இருந்தால் அதற்குத் தக்கபடி கொஞ்சம் மும்முரமாகவுமிருக்கும். தாகமெடுக்கும். ஆனல் தண்ணீர் வைத்தால் குடிக்க ஆவலாயிருந்த போதிலும் தொண்டை நரம்புகள் இழுத்துக் கொள்வதனாலே மாடு குடிக்காது. இந்த வெறியிலே ஓர் ஒழுங்கு இருக்கிறது. அதாவது மாடு, ஏதாகிலும் கிட்ட வருவதைப் பார்த்துக்கொண்டே சமீபத்திலே வருகிற வரையில் சும்மாயிருந்த பின்புதான் எதிர்க்கும். இந்தக் குறிகளினாலே கபால சூலை முதலிய வியாதிகளிலிருந்து இந்த வியாதியைப் பிசகாமல் தெரிந்து கொள்ளலாம்.

சிகித்சை:—வெறிபிடித்த ஜந்து கடித்தவுடனே அந்த இடத்தை அறுத்து எறிந்து, இரும்பைக் காய்ச்சிச் சுடவேண்டியது. அல்லது காரமிட்டாவது வேக அடிக்கவேண்டியது. அன்றியும் 6-மாதம் வரையில் வெகு ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொண்டே யிருக்க வேண்டும். இந்த வியாதி சொஸ்தப்படப் போகிறதில்லை. இந்த மாடு மற்ற மாடுகளைக் கடித்து அவைகளுக்கும் இந்த வியாதி யுண்டாகும். ஆகையால் இந்த ரோக மிருக்கிறதாக எப்போது தெறிய வருகிறதோ அப்போது உடனே அந்த மாட்டைக் கொன்றுபோட வேண்டியது.

## இதற்குமேல் மஞ்சள் காமாலை வியாதியைச் சொல்லும்.

இனிமேல் ரத்த மூத்திர வியாதியைச் சொல்லும்.

**137.** இரத்த மூத்திரமும், குறிகளும், சிகித்சையும்.

இந்த வியாதியின் வெவ்வேறு நிலைகளிலே இதைச் செங்நீரென்றும், கருநீரென்றும் சொல்வதுண்டு, இரத்தம் உண்டாவதில் சீர் கெட்டுப் போவதான இந்த வியாதி இரத்தத்தின் சிவப்பு நிறத்தைக் குண்டிக்காய்க் கிரகித்துக்கொண்டாலும் அது ரத்த கலசம் வெடித்துப் போகையில் பாய்கிற இரத்தத்தில் கட்டிப்போகிற மாதிரியாய் இந்த வியாதியில் கட்டிப்போகிறதில்லை. மழைக்காலத்திலே வளர்ந்த நீச்சு நாற்றமுள்ள மட்டில் புல்லைத் தின்பதனாலே அஃது உண்டாகிறது. சிலவேளை கொள்ளு அதிகமாய்த் தின்பதனாலும் உண்டாகும். உஷ்ணகாலத்தில் பிரத்யக்ஷமான யாதொரு முகாந்தரமில்லாமல் சில சமயங்களில் இந்த வியாதி சம்பவிக்கிறது. சில பிரதேசங்களிலே இன்னதென்று தெறிந்துகொள்ளக்கூடாத காரணத்தினாலே வெகுவாய் வருஷமுழுதும் இந்த வியாதி இருக்குங்கால் மற்றுஞ் சில இடங்களிலே இது காண்பதில்லை.

குறிகள்:—இதனாலே தேகத்துக்கு உபாதி கிடையாது. கொஞ்சம் காய்ச்சலா யிருக்கும். கண்ணிலும் வாயிலும் உட்தோலிலே கொஞ்சம் மஞ்சள் நிறத்தையும் காணலாம். இதனாலே ஈரலின் தொழில் மாறிப்போனதாகத் தெறியவரும். ஆயினும் மூத்திரத்தின் வர்ணந்தான் பிரதானக் குறி. அது முன்னே இளஞ் சிவப்பு நிறமாயிருந்து பின்பு கொஞ்சங் கருப்பான பழுப்பு நிறமாக மாறும்.

சிகித்சை:—மலத்தை தாராளமாய்ப் போக்குவதற்காக மூச்சாம்பாரம் 1-அவுன்ஸ் இரண்டேமூன்றுவீச ரூபாயெடை, இஞ்சி 2—திராம் அரையேமூன்றுவீச ரூபாய் எடை, கிறியாத்துக்குச்சி, நிலவேம்பு 2—திராம் இவற்றை முன்போல ஊறப்போட்டு அதற்குப் பின்பு நாளொன்றுக்கு 3—தடவைகள் பொட்டிலுப்பு 3—திராம் 1-ரூபாயெடை கொடுக்கவேண்டும். கடும் பத்தியம் மெத்த அனுகூலமாகும்.

**138.** மண்ணீரலில் ரத்தமடைப்பான் : குறிகள் : சிகித்சை.

மண்ணீரலில் அழல் தாங்குவதில்லை. மிகவும் சாதாரணமாய் அதில் ரத்தம் தோய்ந்து போவதனாலே உபாதை யுண்டாகிறது. ஆகையால் மண்ணீரலில் ரத்தம் தேங்கக் கட்டிப்போல்தான் இந்த

வியாதி இரத்தங்கெட்டு மாறிப்போகிறதினாலே காணுகிறது. இந்த வியாதிக்குக் காரணம் நினியிலே உண்டாகும் எரிக்காய்ச்சல், தொண்டையடைப்பான், இரத்த மூத்திரம் முதலிய வியாதிகளது போன்றது.

குறிகள்:—இந்த வியாதி சடுதியில் காணுகிறது. மாட்டுக்கு முதுகு வளைந்துகொள்ளும். அடி யெடுத்துவைக்க இஷ்டமிராது. போகும்படி கட்டாயஞ்செய்தால் பாரிச வாயுவு கண்டிருந்தாப் போல தள்ளாடிக்கொண்டுபோம். மூச்சுத் திணரும். அடிவயிறு நோவும். ஜவ்வுத் தோல்களிலே இரத்தங் கட்டிக்கொள்ளும். நாடி படபடப்பாய் அடித்துக்கொண்டு கம்பிபோலிருக்கும். கவலையோடு சுற்றுமுற்றும் பார்க்கும், மூத்திரம் இரத்த நிறமாய் இருக்கும். மாடு தீவிரமாய் மயக்கங்கண்டு சீக்கிரத்தில் செத்துப் போய்விடும்.

சிகித்சை:—இந்த வியாதி பரபரவென்று அதிகரித்துப் பெரும்பாலும் பிராணியைக் கொண்டுபோகிறதாதலால், சிகித்சை செய்ய யத்தனப்படுவது வீண். ஆயினும் பேதியாகும்படி செய்யவேண்டும். சிற்றாமணக்கெண்ணெய் $1\frac{1}{4}$-பயிண்டு ஆழாக்கு வார்க்கலாம். அதற்குப் பின் அந்த வியாதி தடுக்கப்போகிற வரையில் ஒவ்வொரு மணி நேரத்துக் கொருதரம் பொட்டிஉப்பு 4—திராம் ஒன்றே காலரைக்கால் ரூபாய் எடை, இஞ்சி 4—திராம் ஒன்றேகாலரைக்கால் ரூபாய் எடை, பட்டைச்சாராயம் 4—அவுன்சு, சாராயக்கடைத் திராம் ஒன்றேகால் இவற்றைச் சேர்த்து வார்க்கவேண்டியது.

### 139. தொண்டை அடைப்பான்: குறி: சிகித்சை.

இத்துடனே காய்ச்சல் காணுகிறது. மூச்சை அடைத்துக்கொண்டு செத்துப்போகும். இது தொத்து வியாதி. வேகமாய்ப் பரவும்.

குறிகள்:—1-ஆவது நிலைமை. இந்த வியாதி சடுதியில் வரும். பசி தீபனம் அடங்கிப்போம். மாடு அசைவு போடாது. காதுகளைத் தொங்க விடும். நாடி அதிகமாக அடிக்கும்.

2—ஆவது நிலைமை. தொண்டையைச் சுற்றிலும் வீங்கும். மூச்சு விடுவது கஷ்டம். தலை நிமிர்ந்தபடி இருக்கும். வாயிலிருந்து நுறை விழும். கவலையோடு சுற்றுமுற்றும் பார்க்கும். ஜவ்வுத் தோல்களில் இரத்தங் கட்டிக்கொண்டு இருண்ட நீல நிறமாயிருக்கும். நாடி சிறுக வேகமாயடிக்கும்.

குறிகள்:—3-ஆவது நிலைமை: பலக்கும். பார்வைக்கு அதிகவருத்தம் தென் படும். நாடி வெகுவாய் விழுந்துபோம். தொண்டை வீக்கம் மிகவும் அதிகரித்துக் கழுத்துக்கடியில் விழுந்துவிடும். அதிகச் சோர்வுண்டாம்.

சிகித்சை:—தடுப்பதே காரியம். நோயில்லாத மாடுகளை அப்புறப்படுத்தி வைப்பது முக்கியம். வியாதி பரவி இருக்குமாகில் இருப்பிடத்தையாவது மேய்ச்சலிடத்தையாவது தீனி வகையையாவது மாற்றுவது நல்லது. சொஸ்தம். தொண்டை தீவிரமாய் வீங்குவதைப்பற்றி வியாதி ஆரம்பத்திலேயே மருந்து கொடுக்க வேண்டும். இல்லாவிட்டால் விழுங்குவது சீக்கிரத்தில் கஷ்டமாய் விடுவதுமல்லாமல், மருந்து சுவாசக் குழாயில் இறங்கி மூச் சடைபட்டு அபாயமும் நேரிடலாம். பொட்டிலுப்பு 1-அவுன்சு இரண்டரையே மூன்றுவீச ரூபாயெடை, குராசாணி ஓமம் கதிராம் காலேயரைக்கால் ரூபாயெடை, கர்ப்பூரம் 2-திராம் அரையே மூன்றுவீச ரூபாயெடை, சிற்றாமணக்கெண்ணெய் ஆழாக்கு இவைகளைப் பொடித்து, 8-அவுன்சில் கலக்கி வார்க்கவும். பின் எண்ணெய்க்குப் பதிலாக நெய்யில் கலக்கி 4-மணி நேரத்திற் கொருதரம் வடிக்கவும். ஆனால் மூச்சு விடுவதற்கு குரல் வளையை அறுத்துத் திறந்தால் மாத்திரம் மூச்சு அடைபடாமல் வருமேயல்லாமல் வேறு வகையிலில்லை. ஆனால் இதைப் பழகினவன்தான் அறுக்கலாம்.

### 140. இரத்தக்கட்டுக் காய்ச்சல்: குறிகள்: சிகித்சை.

இஃது ஓரிடத்தில் தலரிநோய் என்று வழங்குகிறது.

தன்மை:—இஃது இரத்த வியாதி. குளிரான பிரதேசங்களிலே இது தோன்றுவிட்டாலும், இந்த தேசங்களிலே தோன்றுகிறது (குண)முண்டு. சாதாரணமாய் இடுப்பு, பின்சப்பை, முன் சப்பை அல்லது தொண்டைகளிலும் சில சமயங்களில் நாக்கிலும் தோலின் எந்தப் புரைக்குள்ளாவது சாதாரணமாய் அந்த வியாதியோடுகூட வீக்கமுங் காணும். அந்த வீக்கம் உப்பலாய் இருக்கும். கையினாலே அழுத்தினால் குருகுரு வென்று சப்திக்கும். அந்த வியாதி மற்றப் பிராணிகளுக்கு ஒட்டிக்கொள்ளத் தக்கதென்றே கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. மனிதருக்கு எட்டினால் பெரும் கட்டியாகும்.

காரணங்கள்:—சாரமற்ற புல்லையாவது, சப்பாரையாவது, கொஞ்சங் காலம் வரையில் மேய்ந்துக்கொண்டிருந்த மாடுகள் செழிப்பான மேய்ச்சலைத் தின்ன ஆரம்பிக்கும்போது, அவைகளுக்கு அடிக்கடி

இந்த வியாதி காணுகிறது. கன்றுகளுக்கு, பெரிய மாட்டை விட அதிகச் சீக்கிரத்தில் இரத்தம் ஊறுகிறபடியினாலே முக்கியமாய்க் கன்றுகளுக்கு இரத்த வியாதி காணுகிறது. இரத்தம் இருந்தால் போலிருந்து கொழுமைப்படுகிறதுமல்லாமல், கெட்டுப் போய் நரம்புகளிலிருந்து உடலைச் சேர்ந்த தளர்ச்சியான பாகங் களில் வந்துவிடுகிறது. அதிகமாய்ப் பருக்கிற பிராகணிகளுக்கு அதிகமாய் வியாதி பற்றிக்கொள்ளும். முதலில் கொஞ்சம் இளைத் திருந்து பின்பு சீக்கிரமாய்ப் பருக்கிற பிராணிகளுக்கு முக்கியமாய்ப் பற்றிக்கொள்ளுகிறது. பின்னும் இராக் காலத்தில் மாடுகள் வெட்டவெளியிலிருக்கிற காலங்களிலும், பகலில் அதிக வெயிலும் இரவில் குளிர்ச்சியுமாயிருக்கிற காலங்களில் இந்த வியாதி நிரம்பக் காணும். கிரேட் பிரட்டன் தேசத்தில் சீரான ஜல தாரையில்லாத சில பூமிகளில் அடிக்கடி இந்த வியாதி காணு கிறது. ஆனால் அந்த பூமிகளில் கிரமமான ஜலதாரைகள் ஏற் பட்டது முதல் இந்த வியாதி காண்பது அரிதாகிவிட்டது; காணுகிறதுமில்லை. ஐரோப்பாக் கண்டத்தில் சில பாகங்களிலே சீரில்லாத பூமிகளில் இந்த வியாதி சில ருதுக்களிலே அதிகமாக வாகிலும் குறைவாகவாகிலும் எப்போதுமுண்டு. இந்து தேசத் திலே கறுப்பு நிலங்களில் மேய்கிற மாடுகளுக்கு அடிக்கடி இந்த வியாதி அவசியமாய்க் காணுகிறது. மந்தையில் ஒரு கால்நடைக் குக் கண்டவுடனே மற்றவைகளுக்கும் காணுமென்பது நிச்சயம். ஏனெனில், அப்படிக் காண்பது தோன்றினால் மாத்திரமேயல் லாமல் நோய்கண்ட பிராணியை எவ்வளவு ஜாக்கிரதையாய்ப் போஷித்துக் காப்பாற்றி வந்தார்களோ, அப்படியே மற்ற மாடு களையும் செய்வதனாலேதானென்று சொல்லலாம்.

குறிகள்:—சாதாரணமாய் இருந்தாற் போலிருந்து அந்த வியாதி காணு கிறது. கொஞ்ச நேரத்துக்கு முன்னமே ஒன்றுமில்லாமல் சௌக்கியமாயிருந்த பிராணி பின்பு 2—மணி நேரத்துக் கெல்லாம் திம்மென்று முறைப்பாயிருக்கும். நடக்கிறது கஷ் டம். சில நிமிஷத்துக்கெல்லாம் உடலில் ஏதோ ஒரு பக்கத்தில் தோலுக்குள் வீக்கந் தெரியும். சாதாரணமாய் இடுப்பு, பின் சப்பை, முன்சப்பை அல்லது தொண்டை, நாக்கு இவைகளிலும் காணும். சில சமயங்களிலே மார்பிலாவது அடிவயிற்றிலாவது இந்த வியாதி தங்கிப்போகும். மூளையிலும் தங்கும். தோலுக் குள்ளிருக்கிற வீக்கத்தைப் பரிசோதிக்க விரல்களினாலே அழுத்தி னால் காற்றுப் புகுந்துகொண்டு ஊறுவது போல ஸ்பர்சமாகிக் கிரு கிரு வென்கிற சப்தமுண்டாகும். தீவிரமாய் ரத்தங் கெட் டுப் போவதனால் உண்டாகிற வாயுவைப் பற்றித்தான் இப்படிக் காணுகிறது. முக்கியமாய்த் தொண்டையிலும் நுரையீரலிலும்

இந்த வியாதி கண்டால் அப்போது மூச்சுத் திணரும். மூளையில் கண்டால் பிராணி உரக்கமாயிருக்கும். மண்ணீரலிலும், அடிவயிற்றிலும் மற்ற பாகங்களிலும் வியாதி சுற்றிக் கொண்டால் அடிவயிற்றிலும் நோவுண்டாகும்; மிகவும் கொஞ்ச காலத்தில் காலில் இந்த வியாதி கண்டால் அந்தப் பிராணி கஷ்டத்தோடு காலை இழுத்துக் கொண்டு மிகவும் சீக்கிரத்தில் நகர சக்தி யில்லாமல் போகும். இப்படி அப்படி அசையாமல் மரம் போல் நின்று விடும். வியாதி பாபரவென்று அதிகரிப்பதனாலும் அதிக சீக்கிரமாக வீக்கம் எழும்புவதனாலும் பிராணி நகரமாட்டாமலிருப்பதனாலும் பஞ்சாப் பிரதேசத்திலே இந்த வியாதி கண்டப் பிராணியை கடவுளே தன் கையால் கொட்டாப்புளியைக் கொண்டு கடாவிப் போட்டதாய்க் காணுகிறதென்று அந்த தேசத்தார் சொல்லுகிறபடியால் இந்த வியாதிக்கு அவர்கள் 'கோலி' என்கிற பெயர் இட்டார்கள். வர வர மேல்மூச்சு அதிகரிக்கும். பிராணிக்கு வேதனையாயிருக்கும். நாடி துர்ப்பலமாய்ப் படபடவென்று அடித்துக்கொள்ளும். பிராணியினுடைய பலம் சீக்கிரத்தில் குறைந்து போய்விடும். வெளிவீக்கம் சீக்கிரமாய் அதிகரிக்கும். பிராணி சில நாழியிலே செத்தும் போகும். இது 2-மணி முதல் 24-மணி நேரமிருக்கிறதுண்டு. சாதாரணமாய் 2-மணி முதல் 9-மணி நேரந்தான் இருக்கும்.

வைத்தியம்:—வீக்கம் பெரியதா யிருக்கும் போதாவது மூச்சுத் திணரும். அதனாலே நுரையீரலை நாம்பை விட்டு வெளிப்பட்ட இரத்தம் மிகவும் சுற்றிக் கொண்டதென்று தேரிய வரும் போதாவது வைத்தியம் உதவாது. ஏதாவது வீக்கம் காணுவதற்கு முன்னமே பிராணிக்கு நோய் கண்டது தெரிந்தால் அடியில் கண்டிருக்கிற மருந்தை கலக்கி உடனே வார்க்க வேண்டும். சோற்றுப்பு 2-பலம் 3-ஆழாக்கு மூசாம்பரம் 4—திராம், $1\frac{1}{4}$—ரூபாயெடை, கந்தகத்தூள் 2-அவுன்சு ஐந்து ரூபாயெடை சுக்குத்தூள், 1-அவுன்சு ஒரு ரூபாயெடை சர்க்கரைப்பாகு, 4—அவுன்சு, 1—ஆழாக்கு வெந்நீர் 2 புட்டி 1படி. இது பேதியாகிறதற்கு.

ஆட்டுக்கு இதில் ஆறிலொரு பங்கு வார்க்க வேண்டியது. அல்லது வேறொரு முறை. ஆளிவிதை வின்சிட் எண்ணெய் 1-பயிண்டு; உழக்கு கந்தகத்தூள், 4-அவுன்சு 1-ஆழாக்கு சுக்குத்தூள், அரை அவுன்சு $1\frac{1}{4}$—ரூபாயெடை. இதுவும் பேதியாகிறதற்குக் கொடுக்கலாம். ஒரு புட்டி, $\frac{1}{2}$—படி சூடான அரிசிக் கஞ்சியில் கலந்து வார்க்கவேண்டும். ஆட்டுக்கு இந்த அளவில் பாதி வார்க்கவேண்டும். மேல் கண்ட முறை மருந்திலே எதையாவது 8—அல்லது 10—மணிக்கொரு தரம்

பேதி யுண்டாகிற வரையில் வார்க்க வேண்டும். அதோடு கூட 1—அல்லது 2—மணி நேரத்துக்கொருதரம் 2-அவுன்சு ½—ஆழாக்கு பட்டைச் சாராயத்தையும் 2-திராம் ¾-ரூபா யெடை கர்ப்பூரத்தையும் உழக்குக் கஞ்சியில் நன்றாய்க் கலந்து வார்த்துக்கொண்டு வரவேண்டியது. சில பேர் இரத்தங் குத்தி வாங்கலாமென்கிறார்கள். அது சரியான வைத்தியமல்ல. ஆயினும் வியாதி கண்டவுடனேயே அப்படிச்செய்தால் செய்யலாம். ஆனால் அதிக சீக்கிரத்தில் இரத்தங் கெட்டு குழம்பிக் கறுப்பொடித் தால் போலாகி, குத்தி வாய் திறக்கிற நரம்பிலிருந்து ஓடாத படியினாலே பொருத்து அப்படிச் செய்வது சரியல்ல. பிராணியைக் கூப்பிட்டு இருக்கிற இடத்தில் வைத்திருந்து நல்ல சுத்த ஜலம் காட்ட வேண்டியது. அந்தத் தண்ணீரில் சேர்த்து உப்பைக் கலக்கலாம். மந்தையிலே இந்த வியாதி கண்டால் மற்ற மாட்டுக்கும் அது வரலாம். ஆகையால் பிரதி பிராணிக்கும் வயதிற்குத் தக்க அளவாக அடியில் கண்டிருக்கிற பேதி மருந்தை வார்ப்பது நல்லது. அதற்குக் காட்டும் தண்ணீரில் கொஞ்சம் சேர்த்து உப்பையும் பொட்டிலுப்பையும் கலக்கலாம். (Epsam Salt, Magself) பேதி உப்பு அல்லது சோற்றுப்பு 4-அவுன்சு 1 ஆழாக்கு கந்தகத்தூள், 3 அவுன்சு, ஆழாக்கு சுக்குத்தூள் ½-அவுன்சு, 1¼-ரூபாயெடை சர்க்கரைப் பாகு, 3-அவுன்சு ¾-ஆழாக்கு இவைகளையெல்லாம் 4-படி 2—படி வென்னீரில் நன்றாய்க் கலக்கிச் சில்லென்று ஆறவைத்து வார்க்க வேண்டியது. இந்த மருந்தளவு நல்ல வயதுள்ள பெரிய மாட்டுக்காதலால் சேங்கன்றுக்கும் கிடாரிக்கும் இதில் பாதியே போதும். ஆட்டுக்கு ஆறில் ஒரு பங்கு போதும். எல்லாப் பிராணிகளையும் கைத்தீனி கொடாமல் மேய்ச்சலுக்கு மாத்திரம் விட்டுக் களாறும்படி அடிக்கடி ஒட்டிக்கொண்டு இருக்க வேண்டும். அந்த அந்த மாட்டினுடைய ஆலேதாடியில் குறுக்கே ஊசியில் திரித்த கயிறுக் கோத்துக் குத்தி வாங்கி அதன் வழியாய்க் காராத்திரியைக் நுழைத்துவைப்பது நல்லது. வெறும் மேய்ச்சலோடு கூட இப்படி செய்திருப்பது வியாதியைத் தடுப்பதற்கு மெத்த அநுகூலம். அந்த மேய்ச்சலும் சுலபமாய் ஜீரணமாகும்படியாய் இருக்க வேண்டும். ஈக்கள் மொய்க்காதிருக்கவும், காராத்திரியின் குணம் அதிகமாகவும், காரத்திரி நுழைத்த விடத்திலும் அதற்குச் சுற்றுப்புறத்துத் தோல்மேலும் கர்ப்பூரம் 1-பங்கு, கற்பூரத்தைலம் ¼-பங்கு, நல்லெண்ணெய் 4-பங்கு இவைகளை நன்றாய் இழைத்து ஒரு நாளைக்கு 3, 4-தடவை தடவ வேண்டும். துர்மாம்சம் வளர்ந்தால் மயில் துத்தத்தைப் பொடிசெய்து போடவேண்டும். ஆடுமாடுகளுக்குக்கு காலிலுண்டாகும் ரணங்களுக்கு இந்த மருந்தைத் தடவினால் மெத்த குணமுண்டு. (உடலே அறுத்துப்

பரிசோதிப்பதினுல் காணப்படுவது.) இந்த நோயைப் பற்றிப் பல ரூப பேதமான வியாதிகளால் செத்துப்போகிற பிராணிகளின் உடலிலே முக்கியமாய் நலி பிடித்த பாகங்களிலே பெரிய கட்டி கட்டியாய் மங்கல் நிறமான ரத்தங் கட்டிக் கொண்டிருக்கும். வெப்பு நீரானது வெகுவாய்ப் பழுப்பு நீராய் இருக்கும். குழம்பு போல, தடிப்பாயிருக்கும். அதிலே கருப்பு இரத்தம் கட்டி கட்டியாய்க் கலந்திருக்கும். சுற்றுப் பக்கங்களிலிருக்கும் சதை வெகுவாய்க் கறுத்திருக்கும். அஃது அதிகமாகவாவது குறைவாக வாவது நைந்து போயிருப்பதினுலே பிய்த்தால் சுலபமாய்ப் பிய்ந்து போம். நுரையீரல் அதிகமாகவாவது குறைவாகவாவது எப் போதும் ரத்தக் கட்டிபோலிருக்கும். இரத்தங் கெட்ட வெப்பு நீர் குழம்பி இருதயத் தண்டையிலும், அதன் பையிலும் காணப்படும். வயிற்றின் டொங்கிலும் வெப்புநீர் கட்டி கட்டி யாய்க் குழம்பி வெகுவாய்த் தங்கி இருக்கும். செத்துப்போன உடனேயே இரத்தப் கெட்டுப் போவதனுலே உடலிலிருந்து நாற்றம் வீசும். செத்துப்போன பின்பு கொஞ்ச நாழியிலே உடல் தீவிரமாய் நொந்துபோக வாரம்பிக்கும். அப்படிப்பட்ட ஜந்துக்களின் உடல்களைப் பரிசோதனை செய்கிறவர்கள் தங்கள் கைளில் துர்நீர் முதலிய எதையும் படவொட்டாமல் ஜாக்கிரதை யாய் இருக்கவேண்டும். இல்லாவிட்டால் அதனுலே பலத்த கட்டி உண்டாகலாம். அஃது அபாயத்துக் கிடமான மிகவும் கொடிய வியாதி. வியாதி கண்ட பின்பு வைத்தியஞ் செய்வ தைக் காட்டிலும் வியாதியை வரவொட்டாமல் தடுப்பதே அதிக சுலபம். மேற் குறித்த காரணங்கள் மந்தைக்குச் சம்பவியாதபடி ஜாக்கிரதையாய்த் தடுப்பதனுலே வியாதி காணுவதே அரிதாகி விடும்.

ஆடுகளுக்கும் இந்த வியாதி வருகிறது. அதை கிரேட் பிரிட்டன் தேசத்தில் பிராக்ஸி என்று சொல்லுகிருர்கள். ஆடுகளுக்கு இந்த வியாதி கண்டால் அதற்கு மாட்டொப்புரவு தான். ஆனுல் மருந்து அளவில் குறைவாகவே இருக்க வேண்டியது. அதற்குத் தகுந்த அளவு அவ்வவ்விடத்தில் சொல்லி யிருப்பதைக் கண்டுகொள்ளவும்.

# II ஜீரண உறுப்புக்களின் வியாதிகள்.

## I. வாய், பற்கள் ஆகியவைகளின் வியாதிகள்.

### 1. வாயிலுண்டாகும் ரோகங்கள்.

குதிரை மாடு இவைகளின் பற்கள் அசைவு கொண்டு அகாலத்தில் விழுந்து போகத் துவங்கும்.

மருந்து :—இரண்டு நாள் காலை மாலை நல்லெண்ணெயையும் வெங்காரத்தையும் வெந்நீர் சேர்த்துப் பற்களைக் கழுவிச் சுத்தப் படுத்தி, ஆலம் விழுது, களுவப் பட்டை, களிப்பாக்கு, சீனக்காரம் இவைகளை அரைத்து ஜலத்தில் கலக்கி, பற்களில் பூசி வரவேண்டும்.

### 2. அழுக்குப்பிடித்து துர்கந்தம் உண்டானல்.

மருந்து:—கரியுப்பு, கரும் சீரகம், மிளகு, கஸ்தூரி, மஞ்சள், வசம்பு இவைகளைப் பொடி செய்து தண்ணீரில் போட்டுக் கொதிக்க வைத்து, சூட்டுடன் வாயை காலை மாலை சுத்திசெய்து வரவும்; குணமாகும்.

### 3. பற்களில் பூச்சி யரித்துச் சொத்தை இருந்தால்.

மருந்து:—கண்டம் கத்திரிப் பழத்தைக் கருகாமல் சுட்டுப் பாளையிலைச் சாற்றிலரைத்து, நல்லெண்ணெயில் கலந்து, பற்களில் பூசிவர குணமாகும்.

### 4. நாவு வீங்கித் தீனி தின்னவிட்டால், நாசியிலிருந்து இரத்தம் வருவதற்கு.

மருந்து:—கிரந்தி நாயகம், கரிவேப்பிலை, ஆவாரம்பட்டை இவைகளையரைத்து, ஆவின் பாலில் கலக்கி, நாக்கில் தடவி, வகைக்கு 2-தோலா பாலில் கலந்து உள்ளிற்கும் கொடுக்க, குணமாகும்.

### 5. நாவு தடித்து வீங்கி அடி நாக்கில் 2-பச்சை நரம்புகள் தோன்றித் தீனி தின்னமல் இருக்குமாகில்.

மருந்து:—அந்த நரம்புகளை ஊசியால் குத்தி இரத்தமெடுத்து உப்பும், புளியும் நாக்கில் தடவி, உள்ளிற்கு வெந்தயம், பசும்பால், பனைவெல்லம், நல்லெண்ணெய் இவைகளைச் சேர்த்துக் கொடுத்துவர, குணமாகும்.

### 6. நாக்கில் புண் புறப்பட்டு அதிலிருந்து நீரோடிக்கொண்டிருக்குமாகில்.

மருந்து:—உள்ளி, வெந்தயம், மயிர் மாணிக்க வேர் இவைகளைப் பாலில் அரைத்து, சிற்றாமணக்கெண்ணெயில் கலந்து, கொதிக்கவைத்து, நாவில் தடவி, இவைகளில் $\frac{1}{2}$-தோலா எடையை, பாலிலரைத்து $\frac{1}{16}$-நல்லெண்ணெயில் கலந்து உள்ளிற்குக் கொடுத்துவர, குணமாகும்.

### 7. வாய் முழுதும் புண்பட்டு நீர் வடிந்துகொண்டிருந்தால்.

மருந்து:—வெங்காரம், களிப்பாக்கு, காசிக்கட்டி, சீனக்காரம் இவற்றைப் பொடிசெய்து, தேனில் குழப்பி, வாயில் பூசி, பச்சைப்பயறு, பச்சரிசி இவற்றைக் கஞ்சி காய்ச்சி, அதில் (கதளி) வாழைப்பழம், சர்க்கரை, நெய் இவற்றைச் சேர்த்து உள்ளிற்குக் கொடுத்துவர குணமாகும்.

### 8. இரு கன்னங்களும், செவியும் வீங்கி வாயினால் நீரோடிக்கொண்டிருக்குமானால்.

மருந்து:—இலுப்பை இலைச்சாறும், நிம்ப எண்ணெயும், சுக்கும் சேர்த்து, சூடு காட்டி, வீக்கத்தில் பூச குணம்.

$\frac{1}{4}$-படி சிற்றாமணக்கெண்ணெயில் 3-ரூபாயெடை குமரிச் சோறும் 1-தோலா எடை கரும் சீரகமும் கட்டி விரேசனம் செய்துகொள்ளவும்.

பத்தியம்:—மருந்து கொடுக்கும் வரையில் வென்னீர் கொடுத்துவரவும். கொள்ளு முதலியவைகளைக் குறைத்து அதற்குப் பதில் பச்சரிசி, பச்சைப்பயறு இவற்றைக் கொடுத்துவர குணமாகும்.

### 9. பல் நோயின் குணம்.

மருந்து:—மருகரைப் பழத்தையும், செம்முள்ளி வேரையும் உலர்த்தி, பொடிசெய்து, மிளகு, மஞ்சள், குங்கிலியம் இவற்றைப் பொடி செய்து, செவியில் விடவும். சூடு இல்லை.

### 10. வாய்நோய்.

குணம்:—எப்போதும் எருகும். மயிர் சிலிர்க்கும். புல் மேயாது.
மருந்து:—கடுக்காய், திப்பிலி, பூண்டு இவற்றை அரைத்து, நாழி நெய்யில் குழப்பிப் போடவும். விலாவிலே  இது போல் சூடு போடவும்.

### 11. வாய்நோய்.

பக்குவம்:—நாவற்பட்டை, துளசியிலை இவை யிரண்டையுந் துவைத்துக் கொடுத்து, வாயிலுந் தலையிலும் முக்காணிச் சூடாகச் சுட சொஸ்தமாகும்.

### 12. கண்ணீரோடி வந்து கீழ் நாவின் பற் போலிருக்குமாகில் இட்டுநாளி என்று பெயர்.

பக்குவம்:—அதை முள்ளிட்டுக் கிள்ளிப் போட, சொஸ்தமாகும்.

### 13. மாட்டு வாயைக் கழுவுகிற கஷாயம்.

வருமாறு:—கடுக்காய் 5-பலம், வேப்பம் பட்டை 10-பலம், கருவேலம் பட்டை 10-பலம் இவைகளை யிடித்து, ஒருபானையில் போட்டு வேண்டிய ஜலம் விட்டுக் காய்ச்சிக் கொண்டு, வாயை நன்றாய் அலம்பவும். இஃது அனுபவம்.

---

## II. இரப்பை, குடல் சம்மந்தப்பட்ட உறுப்புக்களின் வியாதிகள்.

### 1. நீர்க்கடுப்பு நோய்.

குணம்:—செங்கல் போல் சிவந்து சாணமிடும்.

பக்குவம்:—உடனே கோதுமையை யரைத்து மோரில் கலந்து கொள்ளவும். குணமாகும்.

### 2. உட்டு நீராணி.

குணம்:—மாடு அருவருத்துப் போய் மேய்ச்சல் மேயும்.

பக்குவம்:—எள்ளை எடுத்து நேக வரைத்து, சிறு நீரில் கரைத்துக் கொடுத்து இரு பக்கங்களிலும் ✝ இந்த மாதிரி சுடவும். புல்லும், வைக்கோலும் நன்றாகப் பிடித்துத் தின்னும்.

### 3. கிருணி நோய்.

குணம்:—தீவனம் குதப்பித் தள்ளும்.

பக்குவம்:—பிரண்டைத் தண்டு, 1-படி உப்பு இவைகளை யிடித்துக் கவளம் போட, தீரும்.

### 4. கழிதல்.

பக்குவம்:—வரபலாம் வேர், கடப்பம் கொழுந்து, தென்னம் பாளை, கரிவேப் பிலை, உளுந்து மாவு, இவைகளை அரைத்து, 1—நாழி ஆவின் பாலில் கலந்து கொடுக்கவும். குணமாகும்.

### 5. சீத வெக்கை.

குணம்:—மேயாமல் நிற்கும். மத்தியானத்திற்குமேல் மேயும்.

பக்குவம்:—கர்ப்பூரவல்லி இலையை அரைத்து, நல்லெண்ணெயில் கலக்கிக் கொடுக்க குணமாகும்.

### 6. காய்ச்சல் நோய்.

குணம்:—எருக்கயிலைச் சாறு போலக் கழியும். உடம்பு இளைக்கும்.

பக்குவம்:—பிரண்டை, உப்பு இவைகளை யிடித்துக் கொடுக்க குணமாகும்.

### 7. நுரை நோய்.

குணம்:—வயிர் வீங்கும். வாயில் நீர் விழும்.

பக்குவம்:—எருக்கயிலைச் சாறும், நல்லெண்ணெயும் கலந்து கொடுக்க, குணமாகும்.

### 8. அரும்பிணி நோய்.

குணம்:—நாலு சந்தும் தளரும். உடல் வெதும்பிச் சாணி நாறும்.

பக்குவம்:— இலுப்பையிலை, பருத்திப் பட்டை, மிளகு, பூண்டு, வசம்பு, இவைகளை மெழுகுபோல் அரைத்து, ஆவின் மோரில் கரைத்துப் புகட்டவும். பின்பு நாலு காலிலும் சந்திலும்

O O O O இந்த மாதிரி சுடவும். குணமாகும்.

### 9. சர்க்கரை நோய்.

குணம்:—சாணி வறண்டிருக்கும். இரண்டு கண்ணும் உள்ளுக்கு விழுந்திருக்கும்.

பக்குவம்:—(மருந்து கிடையாது). விலாவில்

**ழ· யி·பி.** இந்த மாதிரி சுட குணமாகும்.

### 10. ஊதுவளி நோய்.

குணம்:—வயிறு வீங்கும். இரை எடுக்காது. தூங்கி நிற்கும்.

பக்குவம்:—வேண்டுமான பெருங்காயத்தைப் பூண்டுச் சாற்றை விட்டரைத்து, குழப்பி ஒரு பாண்டத்தில் எடுத்து, உடம்பு முழுவதும் பூசி, உரைந்துக்கொள்ளாதபடியும் படுத்துக் கொள்ளாத படியும் ஆளை வைத்துப் பார்க்கவேண்டும். உலர்ந்தபிறகு, கட்டுத்தரையில் கட்டி, போதுமான தீனி போடவும். நன்றாகப் பிடித்துத் தீனி தின்னும். தடவின கையை நக்கும்படி செய்யவும். குணமாகும்.

### 11. சூலை நோய்.

குணம்:—வயிறு வீங்கும். வாயில் நீரொழுகும். நாலுகாலும் நடுங்கும்.

பக்குவம்:—எருக்கிலைச் சாற்றையும் நல்ல எண்ணெயையும் கலந்து கொடுக்கவும். சுட வேண்டாம்.

### 12. குடல் நோய்.

குணம்:—பசளை கழுவின தண்ணீர் போல நீர் விடும்.

பக்குவம்:—முடக்கொற்றானிலை, உத்தாமணியிலை, கழுதாயிலை இவற்றை யிடித்து சாறு பிழிந்து உழக்கு வேப்பெண்ணெயையும் நாழிக்காடியையும் கலந்து கொடுக்கவும். குணம்.

### 13. அழல் வெக்கை.

குணம்:—முதுகில் அனல் பறக்கும். கண் சிவந்து வரும். கழியும்.

பக்குவம்:—வெதுப்படக்கிலைச் சாற்றை ஆழாக்கு எள்ளில் விட்டரைத்து, சேத மில்லாமல் எடுத்து, எருமைமோரில் கரைத்துப் புகட்டவும். சுட வேண்டியதில்லை குணமாகும்.

## 14. விஞ்சடி நோய்.

குணம்:—மூத்திரமும் சாணியும் நாறும். காதுகள் தொங்கி இருக்கும்.

பக்குவம்:—கிலுகிலுப்பையையும் திருத்தி மாவையும் இடித்துக் காடியில் கரைத்துப் புகட்டி, காலதாமதமில்லாமல் இரண்டு விலாவிலும் இக்க மாதிரி சுடவும்.

## 15. பந்தக்கால் நோய்.

குணம்:—வயிறு உப்பும்.

பக்குவம்—சிறு வழு உதலங்காயைச் சட்டியில் போட்டு, நன்றாக வறுத்து, உழக்கு விளக்கெண்ணெயில் கொட்டி, அத்துடன் ஒரு சிரங்கை உப்பைப் பொடிசெய்து கலக்கிக் கொடுத்து, இந்த மாதிரி சுட, குணமாகும்.

## 16. ஊற்றுக்கண் நோய்.

குணம்:—செறுமும். நெஞ்சடைக்கும். உதைத்துக் கொள்ளும்.

பக்குவம்:—(மருந்து கிடையாது). இரண்டு புறத்திலும் இந்த மாதிரி சுடவும். உடனே குணமாகும்.

## 17. ஊதுவளி நோய்.

குணம்:—வயிறு வீங்கும். அசையமாட்டாது.

பக்குவம்:—நீர்முள்ளிச்சாறு 1—உழக்கு, உப்பு 1—உழக்கு, காயம் 1-பலம் இவைகளை அரைத்து உடம்பெல்லாம் பூசவும். கையை நக்கக் கொடுக்கவும். குணமாகும்.

## 18. சீதாக்கிருணி.

குணம்:—கிடையாய்க் கிடக்கும். தண்ணீர் போல் நீர்விடும்.

பக்குவம்:—நாற்பாலையிலையை இடித்து, தனிச்சாறு பிழிந்து, ஆவின் பாலையும் நெய்யையும் கலந்து கொடுக்கவும்.

### 19. பெரு வெக்கை.

குணம்:—செங்கல் போல் சாணிபோடும்.

பக்குவம்:—பொன்னாங்கண்ணி, வல்லாரை, நீர்ப்பூலாயிலை, இவற்றை யறைத்து, ½-படி ஆவின் பாலில் கலந்து கொடுக்கவும். பிறகு இரண்டு விலாவிலும்

இந்த மாதிரி சுடவும். குணமாகும்.

வேறு விதம் பக்குவம்:—புற்று மண், பூண்டு, வசம்பு, இவற்றை அரைத்து மேலே பூசவும். சொஸ்தமாகும். (இதை உடனே செய்யவும்.) குணமாகும்.

### 20. பெரும் கொள்ளி நோய்.

குணம்:—வயிறு உப்பும். மூச்சுவிட்டுத் தொண்டை யடைக்கும்.

பக்குவம்:—குதிரைவாலி, நறுவலிப்பழம் இவற்றை யரைத்து ¼-படி சிறுநீரில் கரைத்துக் கொடுக்கவும்.

### 21. மூலம்.

குணம்— உள் காந்தல் போல் சாணமிடும்.

பக்குவம்:—பேய்க்கும்மட்டி விதையையும், கிளிஞ்சிச்சதையையும்அரைத்து, கழுநீரில் கரைத்துக் கொடுக்கவும். குணமாகும்.

### 22. வற வெக்கை.

குணம்:—ஆட்டுப் புழுக்கை போல் சாணி போடும்.

பக்குவம்:—ஏலம், லவங்கம், மதுரம், செங்கழுநீர்க்கோட்டம், செண்பகப்பூ இவைகளை எலுமிச்சம்பழச் சாற்றை விட்டரைத்து, ஆவின் பாலில் கலந்து 3-நாள் கொடுக்கவும்.

### 23. சீத வெக்கை.

குணம்:—மூக்கில் தண்ணீர்வடியும். கீல் வெடிக்கும். உடம்புசுடும். மேயாது.

பக்குவம்:—½-நாழி எள்ளை 1-நாழி ஆவின் பாலில் போட்டு ஊறவைத்து, அரைத்துக் கொடுக்கவும். குணமாகும்.

### 24. எந்நேரமும் கழிதல்.

பக்குவம்:—வேப்பம்பட்டை, வன்னியிலை, சிந்தித்தண்டு இவற்றை இடித்து, காடியில் சலந்து கொடுத்து 3-நாளைக்குப் பிறகு, எள்ளைப் பாலில் போட்டுக் கொடுக்கவும். குணமாகும்.

### 25. அணல்வி நோய்.

குணம்:—வயிறு வீங்கி, வாயினல் நீரோடிக்கொண்டு, நான்கு கால்களால் நடக்கும்.

பக்குவம்:—எருக்கிலைச்சாற்றையும், நல்லெண்ணெயையும் கலந்து கொடுத்து,

பக்கத்தில்  இந்த மாதிரியாகவும், வயிற்றில்

0000 இந்தமாதிரியாகவும் சூடு போடவும். குணமாகும்.

### 26. குடை நோய்.

குணம்:—விழுந்து எழுந்து வயிறு வீங்கும். வாயில் நீரோடியும், நாளுக்கு நாள் உலர்ந்தும் வரும்.

பக்குவம்:—உத்தாமணிச் சாற்றையும், உப்பையும் கலந்து கொடுத்து, இருபுறமும் இந்தமாதிரி சுடவும். குணமாகும்.

### 27. பலகணி விடுதுடை நோய்.

குணம்:—இரத்தமும் சாணமும் கலந்திட்டு, திகைத்து, தேங்கி இருக்கும்.

பக்குவம்:—நிலவேம்பை அரைத்து, காடியில் கலந்து கொடுத்து, இரண்டு பக்கத்திலும்  இந்தமாதிரி சுடவும். குணம்.

### 28. குறளை நோய்.

குணம்:—நா வெடித்தும், வாயினுலெடுத்தும், செருக வாந்தியிட்டும் இருக்கும்.

பக்குவம்:—கருப்புக் கட்டியைத் தின்னக் கொடுத்து, முன் காலிலும் பின் காலிலும்  இந்தமாதிரி சூடு போடவும். குணமாகும்.

### 29. அறுத்து மேயாமை.

குணம்:—வயிறு உப்பி நிற்கும்.

பக்குவம்:—உப்பையும், நுணாயிலைச் சாற்றையும் விளாவிவிட்டு அரைத்து முதுகில் பூசவும்.

### 30. பெருநோட்டி நோய்.

குணம்:—வாயில் நீர் பெருகும். வயிறு உப்பும். வயிறு உப்பிசம்கொண்டு சாணி நாறும். களிம்புபோலிருக்கும். பற்களைக் கடிக்கும்.

பக்குவம்:—வேப்பம்பட்டை, விளாம்பட்டை இவற்றை யிடித்து, அரிசியிற் கலந்து, தூளாக்கி, 3-நாள் கொடுக்கவும். இடது விலாவில்  இந்தமாதிரி சூடு போடவும். குணம்.

### 31. நொச்சைக்கண்.

குணம்:—தண்ணீர் குடிக்காமலும், மேயாமலும் இருந்து, வாய்த் துர்க்கந்தம் வீசியும், நீரோடியும் இருக்கும்.

பக்குவம்:—கள்ளி முக்காணியாக இட்டு, பதத்தில் சுட்டு, உரித்து, நுணா இலையும் போட்டு, காய்ச்சிக் கொடுத்து, தண்ணீர் காட்டாமல் கட்டிவைத்து, அந்தரத்தாமரை, நாவற்காய் இவற்றைப் பொடி பண்ணி, மோரிலாவது, நீராகாரத் தண்ணீரிலாவது கலந்து கொடுக்கவும். குணமாகும். இவைகளை வெகு கடிசாகப் பார்த்து மருந்து கொடுக்கவும். கைகண்ட முறை.

### 32. கோச்சைச் சந்நிரம்.

குணம்:—வயிறு ஊதியிருக்கும். அரைவாய் மேய்ச்சல் மேயும். செவிகள் தாழ்ந்திருக்கும்.

பக்குவம்:—நற்சீரகம், கரும் சீரகம், சுக்கு, ஏலம், வெங்காயம் இவற்றை சம எடை பொடி பொடி 7-மிளகு கூடவைத்து எல்லாவற்றையும் நன்றாகக் கலந்து, சிறு நீரில் கலக்கி, கண், செவி, நாசி இந்த மூன்று இடங்களிலும் நசியம் செய்து, பிறகு, உடனே விலாவில் ஈரலைப்பற்றி ▣ இந்தமாதிரி சுடவும். குணமாகும்.

### 33. வயிற்றில் புழு இருந்தால்.

பக்குவம்:—6-எலுமிச்சம்பழமும், விளாங்காயளவு புளியும், ஆமணக்கிலை இவைமூன்றையும் அரைத்து சேதமில்லாமல் உள்ளுக்குக்கொடுக்கவும். மலத்தால் புழு வெளியேறும். நோய் தீரும். தேகம் புஷ்டியாகும்.

### 34. பின்னடைப்பான்.

குணம்:—எருப் போடாது. போட்டாலும் விருட்டிபோல் உலர்ந்துவிழும். குளிரும்.

பக்குவம்:—சி(ஷ)சபூலம் துவைத்துப் பிழைந்து புகட்டவும். குணமாகும்.

### 35, உதைக்குடைப்பான்.

குணம்:—வயிறு வீங்கும். மயிர் சிலிர்த்து இருக்கும். தலையைத் தொங்கவிட்டு, தாழ்ந்து கொண்டிருக்கும். மேயாது. கண்மறைவாயிருக்கும்.

பக்குவம்:—வட்டத்துருத்தியிலை, நன்னாரியிலை, மிளகு, சங்கம்குப்பி, இவைகளை அரைத்து, ஆட்டு நெய்யில் கலந்து, 3-நாள் புகட்டவும். பிறகு புற்று மண் அரைத்து, முதுகில் பூசவும். குணமாகும்.

### 36. குடல் வியாதி.

குணம்:—வயிறு வீங்கும். நிற்க மாட்டாது. பதறி விட்டு நிற்கும். கண் குளிர்ந்திருக்கும்.

பக்குவம்:—அழுக்கை வேர், பூண்டு இவைகளைத் துவைத்து, நசியம் செய்து பிறகு விலாவில் ═ இந்த மாதிரி சூடு போடவும்.

## 37. ஊசில்நந்தி.

குணம்:—வயிறு வீங்கும். மயிர் புகை சூழ்ந்திருக்கும். தாளிட்டு நிற்கும். மேயாது. தன் சொரணை இராதிருக்கும்.

பக்குவம்:—எருப்பட்டை, மீறுறி, வெதுப்படக்கி, சங்கம்குப்பி இவற்றை இடித்துக் கொண்டு, மிளகு பொடி செய்து நெய்யில் கலந்து, உருண்டை செய்து, விழுங்கக் கொடுக்கவும். மேலுக்கு புற்று மண் அரைத்துப் பூசவும். + + + இந்த மாதிரி சுடவும். தீரும்.

## 38. உதிரவியாதி.

குணம்:—கால் மடிந்து கிடக்கும். வயிறு பொருமி நிற்கும். வாய் வீங்கும். சாணம் போடாது.

பக்குவம்:—தென்னம் பட்டை, பெரு மருந்து, பெருங்காயம் இவைகளைக் கற்றாழை மடல் சாற்றில் கொடுக்கவும். பிறகு இப்படி சுடவும். குணமாகும்.

## 39. பெருங்குடல்.

குணம்:—குன்றி நிற்கும். சாணி கெட்டியாகப்போடும். செவி அனல் பறியும். நடக்க மாட்டாது.

பக்குவம்:—வாழைப் பழம் நாயுருவி இவைகளைப் புல்லுடன் கூட்டிக் கொடுக்கவும். தீரும்.

## 40. சோகைக் கொன்றை.

குணம்:—வயிறு உப்பிசம் கொடுக்கும்.

பக்குவம்:—இலுப்பைக் கட்டி அல்லது புளி அல்லது சாணம் கரைத்து, உள்ளுறக் கொடுக்கவும். உடனே குணம்.

## 41. ஆண்டுப் பூச்சு கிருமிக்குப் பேதி மருந்து.

பக்குவம்:—தழுதாயிலையை, நாலு பெரும் பிடியாகக் கொண்டு வந்து, இடித்து,பெரிய எலுமிச்சங்கா யளவு மஞ்சள் விழுது கலந்து, விளக்கெண்ணெயில் புரட்டி, உருண்டை சேர்த்துக் கொடுக்கவும். பேதியாகும். மாடு புஷ்டியாகும்.

வேறு விதம்:—(நூதனமுறை) பக்குவம்:—வேழ யிலையை இடித்து உரித்த தேங்காய்ப் பிரமாணம் மாகாணி உப்புக் கலந்து, உள்ளுக்குக் கொடுக்கவும். அந்த க்ஷணத்தில் ஆண்டுப் பூச்சி யெல்லாம் கழிந்து போகும்.

## 42. மாந்தம்.

குணம்:—புல், வைக்கோல் முதலியவைகளைத் தின்னாமலும், மேயாமலும், தண்ணீர் குடியாமலும், மயங்கித் தியங்கி யிருக்கும்.

பக்குவம்:—ஒரு வாழைக்கட்டை, பச்சை மிளகாய் 2-பலம், காயம் ¼பலம், 10-சேனும் கொட்டை இவைகளைச் சேர்த்து அரைத்து, மூன்று சிறு தேங்காயளவு உருட்டிக் கொடுத்து, ஒரு சாமத்திற்கு மேல் வைக்கோலும், தண்ணீரும் கொடுத்து மறுநாள் காலையில் பச்சை யரிசியையும் பச்சைப் பயிற்றையும் கஞ்சிக் காய்ச்சிக் கொடுக்கவும். குணமாகும்:

## 43. வாந்தியினால் இரை எடுக்காம லிருந்தால்

பக்குவம்:—அளிந்த வாழைப்பழம், நெய், சர்க்கரை இவற்றைச் சேர்த்துப் பிசைந்து கொடுக்கவும்.

## 44. ஓயாமல் கழிதல்.

பக்குவம்:—கோவையிலையைப் பெருங் கொத்தாக எடுத்துக் கொடுக்க, கழிச்சல் நின்று, வழக்கப்படி சாணி போடும். மலம் கட்டிப் போகும்.

## 45. கழிச்சல்.

பக்குவம்:—வேப்பம்கொழுந்து, கிளுவைவேர், நீர்ப்புலாவேர்பட்டை, ஆவாரம்வேர்ப்பட்டை, விடத்தலாம்கொழுந்து, கருவைக் கொழுந்து, 2-கடுக்காய், 2-அல்லிக்காய் ¾-பலம் மஞ்சள், ¾-பலம் சீரகம், ¾-பலம் வெந்தயம் இவற்றைப் போட்டு, 1½-மாக்கால் தண்ணீர் விட்டுக் காய்ச்சி வைக்கவும். 3-நாள் பழங்கூளை வைக்கோல் போடவும்.

## 46. பெருமணத்து.

குணம்:—மாட்டிற்கு மத்தியானமும் சாயங்காலமும் வயிறு பொருமும். திட்டுத் திட்டென் றிருக்கும்.

பக்குவம்:—வெள்ளைக் கத்திரிக்காயைக் குடைந்து, 2-பலம் காயத்தை உள்ளே வைத்து, உமிக் காந்தலிலே புதைத்துக் கருகச் சுட்டு, அரைத்து, கவளம் போட்டு ½-படி வென்னீரில் அரைத்து, அம்மியைக் கழுவிப் புகட்டவும். குணமாகும்.

வேறுவிதம்: நசியம்:—பக்குவம்:—2-எருக்கிலம்பழுப்பு, மேனியிலை, வேளையிலை, தும்பையிலை, உத்தாமணியிலை, வனமாவிலை, கோழியவரையிலை, மஞ்சிக்கோரை, கிழங்கு, சுக்கு, பூண்டு, 10-பலம் மிளகு உப்பு இவைகளை நறுக்கிப் பொட்டணம் கட்டி, சிறுநீரிலரைத்து காதிலும் மூக்கிலும் கண்ணிலும் நசியம் செய்யவும்.

தீரும் வியாதிகள்;—

சிறுவிரட்டி, கோசமுட்டி, கொருவன், முன்னடைப்பான், பின்னடைப்பான், ஊதடைப்பான், வெறுயடைப்பான். நீரடைப்பான், நெரியன், சீதவெக்கை செங்கமாரி இதுகளுக்கெல்லாம் இந்த நசியம் செய்யவும். குணமாகும். (கைகண்டது).

## 47. கொருவன்.

குணம்:—வாய் நீர் வடியும். கால் பாவி நிற்கும். கால் பாவி மிதக்கும். மயிர் சிலிர்க்கும். முக்கல் காணும். உடம்பு நடுக்கம் காணும். இதற்கு முன் சொன்ன முறையைச் செய்யவும்.

## 48. கோய் நோக்காடு.

குணம்:—வியாதி தொடுத்த அன்றைக்கு நச்சு மேய்ச்சலாக மேயும். மாடு கருக்கல் காணும். மிரளும். மாடு நிலைகொண்டு நிற்காது. உள் பக்கமாக வாலையிரல் வீங்கும். வெளியே தெரியாது.

பக்குவம்:—10-பலம் ஓமம், 10-பலம் திப்பிலி, 10-பலம் உள்ளி, 10-பலம் மிளகு, 10-பலம் சுக்கு, மாவிலிங்க இலை, தும்பையிலை, மேனியிலை, கோழியவரையிலை, உத்தாமணியிலை, செங்கத்திரி இலை, சங்க இலை இவை வகைக்கு 1-படி வீதம் எடுத்து, துவைத்து, முன் சரக்குகளையும் இடித்து, கலந்து, மாட்டிற்குக் கவாளம் போடவும். உடனே 1-படி வெந்நீர் புகட்டவும். வியாதி உடனே குணமாகும்.

வேறுவிதம்: நசியம்:—பக்குவம்:—மேனியிலை, சாரண இலை; எருக்கம்பழுப்பு, வேளையிலை, உள்ளி, பூண்டு, 10-மிளகு, உப்பு இவற்றைக் கூட்டி துணியில் பொட்டணம் கட்டி, சிறுநீரில் தோய்த்து, காது, கண், இவைகளில் பிழியவும். முன்சொன்ன வியாதிகள் தீரும்.

## 49. விருட்டி.

குணம்:—எரு உலர்ந்திருக்கும். குரு உதைக்கும். மயிரிழை தோன்றுது.
பக்குவம்:—ஆடுதீண்டாப்பாளைமூலம், முத்துருக்கம் சமூலம் இவற்றைப் பழைய காடியில் துவைத்துக் கொண்டு கொடுக்கவும். குணம்.

## 50. உதிரி மாட்டிற்கு.

குணம்:—புத்தரம்சோற்றைக் காடியில் பிசைந்து 3-நாள் கொடுக்கவும். (எருகினல்) மாம்பட்டைச் சாற்றையும், பெரிமாவையும் காடியில் கலந்து, 3–நாள் கொடுக்கவும். கொடகிரங்தையைத் துவைத்துக், காடியில் ஊறப்போட்டு கொடுக்கவும்.

## 51. விருட்டி.

பக்குவம்:—செய்க்கொட்டான் பழம், நாய்க்கொட்டான் பழம், மருக்காரைப் பழம், காஞ்சுரைப் பழம், குமிழம் பழம், புங்கம் பழம் இந்த ஏழு வகைப் பழங்களையும் விதை நீக்கிச் சிறுநீரில் கரைத்து, கண், காது, நாசி இவைகளில் பிழியவும். வென்னீர் வைக்கவும். வயிறு உப்பிசமானல், பிரண்டையையும், அரையுப்பையும் சேர்த்துக் கொடுக்கவும். பழைய வைக்கோல் தீனி போடவும்.

## 52. வெருட்டி

பக்குவம்:—சுக்கு, மிளகு, உள்ளி, வசம்பு, காயம், கத்தரி, மஞ்சள், களிப்பாக்கு, உப்பு, சொறிஜமம், மேணிதைவேளை, ஆடுதின்னப்பாளை, மாவிலிங்கம், கோட்டான்வேர், சாயவேர், எருது தின்னப்பூடு, பிரண்டை, சாரணைவேர், கண்டங்கத்திரிவேர் இவைகளை யிடித்து, பெரும்விளங்காயளவு உள்ளுக்குக் கொடுக்கவும். இந்த மருந்து எடுத்துப் பிசைந்து, கொட்டாங்காயளவு எடுத்துப் போட்டு, பன்றி இரத்தம் விட்டு, உருண்டை செய்து, வைத்துக் கொண்டு, மாடு மொச்சுதனல் சக்கிலியன் தோல் குழி தண்ணீரில் கலந்து கொடுக்கவும்.

## 53. கழிச்சல்.

பக்குவம்:—மொந்தன் பூ அரைத்து நல்லெண்ணெயில் கரைத்துப் புகட்டவும்.

வேறுவிதம்:—மஞ்சள், வேப்பங் கொழுந்து இவற்றைக் காடியி லரைத்துக் கொடுக்கவும்.

வேறுவிதம்:—பச்சைப்பாளை, நெல்லிக்காய் இவற்றை ஆவின் பாலி லரைத்துக் கலந்து புகட்டவும்.

வேறுவிதம்:—குறின்மணியிலைகளைப் பசுவின் பாலிலரைத்து, விளங்காயளவு புகட்டவும்.

வேறுவிதம்: – குளப்பாலை ஆவின்பாலி லரைத்துப் புகட்டவும்.

வேறுவிதம்:—எள்ளை வெந்நீரி லரைத்துப் புகட்டவும்.

வேறுவிதம்:—வெங்காயம், பழம்பாசி, சீரகம் இவைகளைக் காடியி லரைத்துப் புகட்டவும்.

வேறுவிதம்:—வெங்காயம் நல்லெண்ணெய்களைப் பழம் சோற்றில் பிசைந்து கொடுக்கவும்.

வேறுவிதம்:—கடப்பன் கொழுந்து, கருவேப்பிலை, கடுக்காய், வறபூலாம்வேர் இவற்றை வெந்நீரி லரைத்துக் கொடுக்கவும். எவ்வித கழிச்சலும் தீரும்

குணம்:—குதிரைகளும், மாடுகளும் நீரும் சாணியும் கட்டுப் பட்டும் வயிறு ஊதியும் முட்டுப் பட்டும் வருத்தப்படும்.

மருந்து:—காயம், சுக்கு, கடுகு, ஓமம், திப்பிலி, மிளகு, பூண்டு, மிளகாய்ப் பழம், பொரித்த வெங்காரம் இவை வகைக்கு 2—தோலா வீதம் எடுத்து, சாராயம் விட்டரைத்து, உள்ளுக்குக் கொடுக்கச் சுகமாகும்.

வேறுவிதம்:—மணத்தக்காளியிலை, நாயருவியிலை, மிளகு, வெள்ளாட்டுப் புழுக்கை இவற்றை வகைக்கு 3-தோலா வீதம், சாராயத்தில் * நீலிச்சாற்றில் கலக்கிக் கொடுக்க குணமாகும்

குணம்:—அடிக்கடி நிலத்தில் புரண்டு . எழுந்திருக்கும். கால்களை அடித்தும், வயிற்றைப் பார்த்தும் சாணி போடாமலும் வயிறு ஊதியு மிருக்கும்.

மருந்து:—சுக்கு, காயம் இவற்றை 1—தோலா வீதம் அரைத்து, $\frac{1}{4}$—படி சிற்றாமணக் கெண்ணெயில் கலங்கிக் கொடுத்து, பிறகு, பங்கம் பாளையில் பிரண்டை, தூதுவளை, நிம்பப்பட்டை, கஸ்தூரிமஞ்சள், உப்பு, பூண்டு இவை வகைக்கு 2-தோலா வீதம் எடுத்து, அரைத்து $\frac{1}{2}$-படி ஜலத்தில் கலந்து காலையில் கொடுத்து வர, குணமாகும்.

குணம்:—அதிகமாக வலது காலைத் தூக்கிப் பூமியில் மடித்துக் கொண்டும், வயிற்றை அடிக்கடிப் பார்த்துக் கொண்டும் முட்டு தோய்வுப் பட்டும் வருத்தப் படும்.

மருந்து:—காட்டுச் சீரகம், கடுக்காய், திப்பிலி இவை வகைக்கு 3—தோலா வீதம் எடுத்து, பிரண்டைக் கொழுந்து 8-தோலா இவைகளைக் கலந்தரைத்து, வெந்நீரில் கலக்கி, காலை மாலை கொடுத்துவர, குணமாகும்.

குணம்:—விலா எலும்பின் கீழே கையினால் இடது பக்கத்தைத் தடவிப் பார்க்கும்போது இரப்பை உப்பியும், நோய் பட்டிருப்பதாகவும் தோற்றப்படும். மலம் கட்டுப் பட்டும் தலையைக் குனிந்து கொண்டும் அதிக வேதனையும் படும்.

மருந்து:—$\frac{1}{4}$-படி ஜலத்தில், 10-தோலா ஜீரகமும் நில வேம்புக் குச்சியும் போட்டு அவித்து, அத்துடன் $\frac{1}{16}$-படி நெய்யும், 8-தோலா கரிய பவிளமும் சேர்த்துக் கொடுக்க சுகமாகும்.

வேறுமருந்து:—10-தோலா கரியுப்பும், 20-தோலா பிரண்டைக்கொழுந்தும், 20-தோலா பழம்புளியும், சேர்த்தரைத்து வென்னீரில் கலக்கிக் கொடுக்க குணமாகும்.

குணம்:—கீழே விழுந்து மயிர் சிலிர்த்தும் திட்டுத் திட்டென்று முக்கியும் கால்கள் நடுங்கியும், நாக்குக் குளிர்த்தும், சாணி போடாமலும், கண்கள் சிவந்தும், குழியிரண்டும் கிடந்து வேதனைப்படும்.

மருந்து:—வெடியுப்பு, திராகைஷயுப்பு, ஓமம், பூண்டு, வசம்பு, சுக்கு, திப்பிலி இவை வகைக்கு 1-தோலாவீதம் எடுத்து முருங்கப்பட்டைச் சாற்றி லரைத்து, $\frac{1}{4}$-படி விளக்கெண்ணெயில் கலந்து கொடுக்க, குணமாகும்.

குணம்:—அதிகமாய் வாயு பறந்தும், அடிக்கடி சாணி போட்டும், வயிறுப்பியும், தின்ற இரை ஜீரணமாகாததுபோல் தோற்றப்படும்.

மருந்து:—திரிகடுகு, வசம்பு இவற்றை வகைக்கு 4-தோலா வீதம், 20-தோலா வெற்றிலையில் அரைத்து, வென்னீரில் * சாராயத்தில் கலக்கிக் கொடுக்க, குணமாகும்.

குணம்:—உடம்பில் கொதிப்புண்டாகி, தண்ணீர்போல் கழியும்.

மருந்து:—தென்னம்பாளை, அத்திப்பட்டை மாதுளம்பிஞ்சு, வெந்தயம், சீரகம் இவை வகைக்கு 10-தோலா வீதம் எடுத்து, ஆவின் பாலில் கலக்கிக் கொடுக்க, குணமாகும்.

குணம்:—சாணியுடன் இரத்தம் கலந்து கழியும்.

மருந்து:—அத்திப்பிஞ்சு, ஆவாரம்பூ பாசிப்பயிறு, சீரகம், விளாம்பிஞ்சு, இவை வகைக்கு 8-தோலா வீதம் எடுத்து, தயிரில் அரைத்துக் கலக்கிக் கொடுத்து வர, குணமாகும்.

குணம்:—இரத்தமாயும், சதை சதையாயும் கழியும்.

மருந்து:—மஞ்சள், பாசிப்பயிறு, எள்ளு, ஆவாரம்கொழுந்து, அத்திப் பட்டை இவைகளில் முன் சரக்குகள் நாலு வகைக்கு 6-தோலா வீதம் எடுத்து, 8-தோலா அத்திப்பட்டையை தாழை விழுதின் சாறு விட்டரைத்து, வெந்தயம் அவித்த தண்ணீரில் கலக்கிக் கொடுக்க, குணமாகும்.

குணம்:—மூலம் வெளியே புறப்பட்டு அதிக வாதைப்படும்.

மருந்து:—கஞ்சாவை வறுத்தரைத்து, பொறித்த வெங்காரப் பொடியும், சிற்றாமணக்கெண்ணெயும் கலந்து, மூலத்தில் பூசி, உள்ளிற்குத் தள்ளி வரவேண்டும்.

வேறு மருந்து:—குமரிச்சோற்றை வைத்து மூலத்தில் கட்டி உள்ளிற்குச் சீரகம், வேப்பிலை, கோவையிலை, ஷை தண்டு இவைகளைச் சிற்றா மணக்கெண்ணெயில் அரைத்து, தயிரில் கலந்து கொடுத்து வர, குணமாகும்.

குணம்:—மூலத்தில் முளையுண்டாகியும், அதிலிருந்து இரத்தமும் சீத மும் வரும்.

மருந்து:—முளையைக் காரத்தால் சுட்டு, களிக்கட்டி, பிறகு, வேப்பட்டம் பட்டை, சீனக்காரம், துத்தம், துருசு இவைகளை நிம்ப எண்ணெ யில் போட்டுக் காய்ச்சி, புண்ணிற்குப் போடவும். உள்ளிற்கு சுக்கு, மிளகு, 4-தோலா கருணைக் கிழங்கு, மணத்தக்காளிக்காய் 8-தோலா வீதம் எடுத்து சேர்த்தரைத்து கொஞ்சம் ஆமணக் கெண்ணெயையும் கலந்து கொடுத்து வர, குணம்.

குணம்:—வயிற்று நோய் முதலியவைகளிலிருந்தும், சாணியிலிருந்தும், வயிற்றில் புழு இருக்கிறதாகத் தெரிந்தால்,

மருந்து:—மாதுளம்வேர், பர்க்கு இவைற்றை 10-தோலா வீதம் எடுத்து, பாவற்காய்ச் சாற்றி லரைத்து, நாலுவேளை கொடுத்து, சிற்றா மணக்கெண்ணெயில் விரேசனம் செய்ய, குணமாகும்

வேறு மருந்து:—பாவற்காய், முருங்கைவேர் கடுக்காய், தான்றிக்காய், நெல்லி வற்றல், இவற்றை 4-தோலா வீதம் அரைத்து, சிற்றாமணக்கெண் ணெயில் கலக்கிக் கொடுக்க, குணமாகும்.

பத்தியம்:—விரைவில் ஜீரணிக்கக்கூடியதும், சுகபல நோக்கம் தெரிந்தும் கொள்ள முதலியவைகளைக் குறைத்துக் கொடுத்து, வெந்நீர் காட்டி வர, குணமாகும்.

குதிரை மாடுகள் இவைகளின் ஜீரணக்கருவிகள் பலம்கெட்டு, இரை சமிக்காது, தினியில் விருப்பற்று, மெலிந்துபோகுமாயின்,

மருந்து:—5-தோலா இஞ்சி, ஏலம், மிளகு, பூண்டு, ஜாதிக்காய், ஜாதிபத்திரி, கிராம்பு, வகைக்கு ஒன்றாகக் கலந்து, தேனும் நெய்யும் விட்டுப் பிசைந்து, கவாளமாக்கிக் கலந்து கொடுத்து வரவும். ஜீரணக் கருவிகள் பலப்பட்டுப் பசியுண்டாகிப் புஷ்டி யுண்டாகும்.

பத்தியம்:—சுகபலத்திற்குத் தக்கபடி இரைகளை ஜீரணக்கருவிகள் பலம் கண்டு, காலாகாலத்தில் கொடுத்து வர வேண்டும்.

## 54. ஓடு கிருணி.

குணம்:—அரிசி வறுத்தாற் போல, பேய்ச்சலாய் மேயும். உடம்பு இளைக்கும். இளைத்துப் போகும்

இதற்கு எள்ளை அரைத்து, சிறுநீரில் குழப்பிக் கொடுக்கவும். நெஞ்சிலே குறுக்கிட்டுச் சூடு போடவேண்டியது.

## 55. கிருணி நோய்.

குணம்:—........ம் குதப்பித் தள்ளும்.

இதற்கு மருந்து:—1-படி பிரண்டை, $\frac{1}{8}$-படி உப்பு இவற்றை யிடித்து, நாழி கழுநீரிலாவது காடியிலாவது கரைத்து ஊற்றவும். இதற்குச் சுடவேண்டியதில்லை.

## 56. கழியும் மாட்டிற்கு

மருந்து:—வறப்பூலாவேரும், கடப்பைக் கொழுந்தும், தென்னம்பாளையும், கறிவேப்பிலையும், உளுந்தும், அரைத்து, பசுவின் பாலில் கரைத்து, மாட்டிற்குப் புகட்டவும். இதற்குச் சூடு இல்லை.

## 57. நாரை நோய்.

குணம்:—இரண்டுகண்ணும் வீங்கும். மேயாது. நின்றாப்போலேகீழேவிழும்.

இதற்கு மருந்து:—இலுப்பைப்பிண்ணாக்கையும் மருக்காரைவேரையும் அரைத்துச் சிறுநீரில் போடவும்.

இவ்விதம்  சூடு போடவும்.

### 58. தலை நோய்

குணம்:—.........குளிர்ந்து போகும். வயிறு இரையும். சாணி நாறும்.

இதற்கு மருந்து:—வாழைக்கிழங்கையும், ஆலம்விழுதையும் சரி நிரையாக அரைத்து, காடியில் கரைத்துக் கொடுக்கவும்.

### 59. அரி பல்லி நோய்.

குணம்:—.........(நாலு காலும் வீங்கும்.) குடல் வெதும்பிச் சாணி நாறும்.

மருந்து:—இலுப்பையிலை, பருத்திப்பட்டை, மிளகு, வசம்பு, பூண்டு இவற்றை அரைத்து, மோரில் கலக்கி, மாட்டுக்குப் புகட்டவும். நாலு சந்து கட்டின சூடு போடவும்.



### 60. குலை நோய்.

குணம்:—வயிறு வீங்கும். வாயிலே நீர் விழும். நாலு காலும் நடுக்கும்

மருந்து:—எருக்கிலைச்சாறும் நல்லெண்ணெயையும் ஊற்றவும். இதற்குச் சூடு இல்லை.

### 61. ஆணிக் குன்ன நோய்.

குணம்:—வயிறு பொருமும். வீங்கும். இரைச்சல் கொடுக்கும். நீர்க்கும்.

மருந்து:—1-பலம் ஓமம், கத்தரிப்பிஞ்சு கல் இடித்துக் கவாளமாக உள்ளுக்குப் போடவும். சூடு இல்லை.

### 62. தலைப் பித்தம்

குணம்;—வெட்டி நிற்க மாரி பாயும். உடல் வற்றி வரும். பொய் மேய்ச்சலாய் மேயும்.

மருந்து:—ஆமணக்கெண்ணெய், உப்பு, நாயுருவிவேர், வசம்பு இவற்றையறைத்து, காடியில், கலக்கி ஊற்றவும். இதற்குச் சூடு இல்லை.

### 63. ஒதுவளி நோய்.

குணம்:—வயிறு வீங்கும். இரை எடுக்காது.

மருந்து:—உழக்கு வெள்ளைப்பூண்டுச் சாற்றில் பெருங்காயத்தைக் கரைத்து மேலெல்லாம் பூசவும். சூடு இல்லை. பூசணிக்கீற்று அரிந்து நக்கக் கொடுக்கவும்.

### 64. குடல் வாத நோய்.

குணம்:—பசலை கழுவின தண்ணீர்போல நீர் விழும்.

மருந்து:—கொற்றான், வேலிப்பருத்தி, தழுதாழை இவற்றை இடித்துச்சாறு பிழிந்து, வேப்பெண்ணெயை உழக்கு நாழிக்காடியில் கலந்து ஊற்றவும். (சூடு) ┼ ┼ ┼

### 65. காய்ச்சல் நோய்.

குணம்:—எருக்கிலைச்சாறு போல கழியும். சரீரம் இளைக்கும்.

மருந்து:—உப்பும் பிரண்டையும் இடித்துக் கவளமாக உள்ளுக்குப் போடவும். இதற்குச் சூடில்லை.

### 66. சாக்காடு நோய்.

குணம்:—சாணம் வரட்டி போல் இருக்கும். கண் குளிர்ந்து இருக்கும். இதற்கு மருந்து இல்லை. இடது விலாவிலே சூடு போடவும்.

ஞ ГН ம

L ๑

### 67. கருவடிகொண்ட மாடு.

குணம்:—உடல் வற்றி, குடல் உருக்கி வரும். காதும் வாயும் நாறும்.

மருந்து:—இலைத்தாமரை, அமுக்குரா இலை இவற்றை அரைத்து, பாலிலே கரைத்து ஊற்றவும். இரண்டு விலாவிலும்

இம்மாதிரி  சூடு போடவும்.

## 68. சீதக் குடல்.

குணம்:—மூக்காலே தண்ணீர் வடியும். தலை நடுங்கும். மயிர் இடைக்கிடை வலமாகும். இதற்கு



இம்மாதிரி சூடு போடவும்.

## 69. சத கடுப்பு.

குணம்:—மூக்குநீர் செங்கல் போல் சிவந்து வடியும். சிவந்து சாணம் கழியும். சாணம் நாறும். இதற்கு இரண்டு தட்டிலேயும்

 இம்மாதிரி சூடு போடவும்.

## 70. பந்தக்கால்.

குணம்:—வயிறு உப்பும்.

மருந்து:—செருவழுதலங்காயை அரைத்து, உழக்கு விளக்கெண்ணெய் $1\frac{1}{8}$-உப்பு இவற்றைப் போட்டுக் கரைத்துஊற்றவும்.
இதற்குச் சூடு இல்லை.

## 71. வயிறுஉப்பல்.

மருந்து:—வெடியுப்பு, கல்லுப்பு, இந்துப்பு, ஓமம், சுக்கு, கொம்மட்டிக்காய், பொன்முசுட்டைவேர், பெருங்காயம் இவை யெல்லாவற்றையும் சேர்த்து அரைத்துக் கொடுக்கவும். சூடு இல்லை,

## 72. சுழல்நோய்.

குணம்:—எப்போதும் கழியும். மயிர் சிலிர்த்திருக்கும். வயிறு உப்பும். மேயாது.

மருந்து:—கடுக்காய், திப்பிலி, வசம்பு இவற்றை அரைத்துப் போடவும். சூடு இல்லை.

## 73. மஞ்சள் நிறம்.

குணம்:—அடிக்கடி நீர் விடும்.

மருந்து:—பெருங்கற்றாழைச் சோற்றையும், கள்ளியிலைச்சாற்றையும் சரியாய்க் கலந்து கூட்டிக் கொடுக்கவும். சூடு இல்லை.

## 74. காய்ச்சல்.

குணம்:—எருக்கிலைச்சாறு போல் கழியும். இளைத்துப் போம்.

மருந்து:—பிரண்டையையும், உப்பையும் இடித்துக் கொடுக்கவும். சூடு இல்லை.

## 75. குதிரை நோய்.

குணம்:—வயிறு வீங்கும். நீர் வடியும்.

மருந்து:—எருக்கிலைச் சாற்றையும் நல்லெண்ணெயையும் கொடுக்கவும். சூடு இல்லை.

## 76. ஆனைக்குன்று.

குணம்:— இரண்டுபுறமும் வயிறு வீங்கி இருக்கும்.

மருந்து:—1-பலம் ஓமம், கத்தரிப் பிஞ்சு, கல்லுப்பு இவற்றை இடித்துக் கவளமாய்க் கொடுக்கவும். சூடு இல்லை.

## 77. முட்டைப்பண்.

குணம்:—கழியும். வாயெதிற்கும். வாயில் தண்ணீர் விழும்.

மருந்து:—கோமி இடித்துச் சாறு வாங்கி, எலுமிச்சம்பழம் புளி இவற்றைக் கூட்டிக் கொடுக்கவும். சூடு இல்லை.

### 78. நீர்க்கடுப்பு.

குணம்:—செங்கல் போல் சிவந்த சாணம் இடும்.

மருந்து:—கோதுமையையரைத்து மோரில் கலக்கிப் புகட்டவும். சூடு இல்லை.

### 79. தாள நோய்.

குணம்:—வயிறு உப்பும்.

மருந்து:—அழுக்குறுவேர், ஊமத்தன்வேர், பூண்டு, வசம்பு இவற்றை இடித்துக் காடியில் போடவும். இரண்டு விலாவிலும்



இம்மாதிரி சூடு போடவும்.

### 80. ஊதுவளி நோய்.

குணம்:—வயிறு வீங்கும். மேயாது.

மருந்து:—மருப்பூண்டுச் சாறு, உழுந்து, பெருங்காயம் இவற்றை அரைத்து உடம்பெல்லாம் பூசவும். பூசின கையை நக்கக் கொடுக்கவும். சூடு இல்லை.

### 81. தலை நோய்.

குணம்:— வயிறு வீங்கும். வாய் நீர் விழும். காலு காலும் நடுங்கும்.

மருந்து:—எருக்கிலைச்சாற்றை நல்லெண்ணெயுடன் கலந்து போடவும். இதற்குச் சூடு இல்லை.

### 82. குடல்வாத நோய்.

குணம்:—பசலை கழுவின தண்ணீர்போல் நீர் விடும்.

மருந்து:—கொற்றான்இலை, உத்தாமணியிலை, தழுதாயிலை இவற்றை யிடித்துச் சாறு பிழிந்து உழக்கு வேப்பெண்ணெயில் கலந்து போடவும். சூடு இல்லை.

### 83. சாண நோய்.

குணம்:—சிறுக்கலமும் சுற்றி வரும்.

மருந்து:—தவுமுருங்கை, சாட்டாணைவேர் இவற்றை இடித்துச் சிறு நீரில் புகட்டவும். சூடு இல்லை

### 84. சீதக்குடல்.

குணம்:—மூக்கிலே தண்ணீர் வடியும். தலை நடுங்கும். கால் சாரிக் கொள்ளும். மருந்து இல்லை. இடைக்கிடை வலமாக

இம்மாதிரி ○○○ ○○○ சுடவும்.

### 85 விஞ்சை நோய்.

குணம்:—சலமும் சாணமும் நாற்றமாய்க் கழியும். காது தொங்கி யிருக்கும்.

மருந்து:—கிலுகிலுப்பையையும் நிறிச்சமாவையும் இடித்து, காடியில் கரைத்துப் புகட்டவும்.



இம்மாதிரி பலகணிச் சூடு போடவும்.

### 86. செவிக் கள்ளன்.

குணம்:—வயிறு வீங்கும். வியர்க்கும். பொய் மேய்ச்சல் மேயும்.

மருந்து:—விழுதியிலையை அரைத்துக் காடியில் கலக்கிப் புகட்டவும். மூக்கில் இம்மாதிரி சுடவும்.

### 87. பிறமிய நோய்.

குணம்:—சாணம் போடாது. மேயாது. வயிறு உப்பும். நடக்கமாட்டாது.

இதற்கு கழுத்து நரம்பில் இம்மாதிரி சுடவும்.

### 88. சீத குலபத்தின நோய்.

குணம்:—மூக்கிலே தண்ணீர் வடியும். கால் சாரி கொள்ளும். இதற்கு

இடைக்கிடை வலமாக ○○○○ ○○○○ இம்மாதிரி சுடவும்.

கொம்போடே வந்த கோமாரியதன் வெக்கை, சீத வெக்கை தோன்றி எப்பேர்ப்பட்ட வியாதிகளெல்லாம் நாளேதிய புல்லோடுந் தண்ணீரோடும் போகப் போக சுவாகா.

வயிறு வீங்கி வாயினுல் நீரோடிக் கொண்டு நாலுகாலும் நடுங்குமாகில் அழல்வி நோய் என்று பெயர்.

பக்குவம்:—எருக்கிலைச் சாற்றை, நல்லெண்ணெயுடன் கலந்து கொடுத்து, பக்கத்தில் சூடு போட்டு, வயிற்றிலும் சாட்டையாகச் சுட, சொஸ்தமாகும்.

குணம்:—விழுந்து விழுந்து எழுந்து எழுந்து வயிறு வீங்கும். வாயினுல் நீரோடியும் நாளுக்கு நாள் உலர்ந்தும் வருமாகில் குடை வியாதி என்று பெயர்

பக்குவம்:—உத்தாமணிச் சாற்றையும் உப்பையும் கலந்து கொடுத்து, இரண்டு புறமும் சுட, சொஸ்தமாகும்.

குணம்:—இரத்தமும் சாணமு மிட்டுத் திகைத் தோங்கி யிருக்குமாகில் பலகணித்நோடை என்று பெயர்.

பக்குவம்:—நீலவேம்பை அரைத்து, காடியில் கலந்து கொடுத்து, இரண்டு பக்கத்திலும் பலகாணியாகச் சுட, சொஸ்தமாகும்.

குணம்:—வயிறு உப்பி நீர் விடுமாகில் அறுத்து மேயாமை என்று பெயர்.

பக்குவம்:—நுணாஇலைச்சாறு ஈரர்ழியுமரைத்து முதுகிற் பூச, சொஸ்தமாகும்.

குணம்:—எப்போதும் எருவும் சாணமும் கலந்திட்டுக் கொண்டும், மயிர் பொடித்தும், பொழுது மாற்றி வயறுப்பியும் மேயாமலும் இருக்குமாகில் வாய் நோய் என்று பெயர்.

## 89. நாய்த்தலை.

பக்குவம்:—நாகத்தாளி யிலையிற் சிற்றாமணக்கெண்ணெயை வார்த்தரைத்து, உள்ளங்காலில் அப்பிக்கொண்டு, நாய்த்தலை புறப்பட்டிருக்கிற இடத்தின் மேல் தேய்த்து வாலாலடிக்க, நின்றுபோகும்.

## 90. மந்தம்.

குணம்:—புல் முதலியவைகள் தின்னுமலும், மேயாமலும், தண்ணீர் குடிக்காமலும், மயங்கித் தியங்கி யிருக்கும்

பக்குவம்:—1-வாழைக்கட்டை, 5-பலம் பச்சை மிளகாய், $1\frac{1}{2}$-பலம் பிரண்டை, 1-பலம் கருஞ்சீரகம், 2-பலம் ஓமம், $\frac{1}{4}$-பலம் காயம், 10-சேராங்கொட்டை இவற்றையெல்லாம் ஒன்றாய்ச் சேர்த் தரைத்து, 3-சிறு தேங்காய்ப் பிரமாணம் உருண்டைசெய்து கொடுத்து, ஜாமத்துக்குமேல், வைக்கோலும் தண்ணீரும் கொடுத்து, மறுநாள் காலையில் பச்சரிசியையும் பச்சைப்பயற்றை யுங் கலந்து கஞ்சி காய்ச்சி வார்க்கவேண்டும்.

## 91. வாய்க்காந்தி.

குணம்:—இரை யெடாமல் மயங்கும்.

பக்குவம்:—அளிந்த வாழைப்பழம், நெய், சர்க்கரை இம்மூன்றையுங் கூட்டிப் பிசைந்து கொடுக்கச், சொஸ்தமாகும்.

## 92. மாட்டுக்கு விருட்டியின் உதிரிக்கும் விருட்டி மகிமை.

குணம்:—எரு உலர்ந்து இருக்கும். வயிறு உதைக்கும். இரை தின்னாது.

மருந்து:—ஆடுதீண்டாப்பாளை சமூலம், முத்துருக்கஞ்செவி சமூலம் இவற்றைப் பழங்காடியில் துவைத்துக்கொடுக்கவும். உதிரிமாட் டுக்குத்தான் சோறு எடுத்துவந்து, காடியில் பிசைந்து மூன்று நாள் கொடுக்கவும். எருகினால், மாம்பட்டைச்சாற்றையும் பொரிமாவையும் காடியில் கலந்து 3-நாள் கொடுக்கவும். கொட்டான்கிரந்தியைத் துவைத்துக் காடியிலூறப்போட்டுக் கொடுக்கவும். விருபடிக்கும் நெய்கொட்டான் பழம், நாயக்கொட் டான் பழம், மருக்காரம் பழம், காஞ்சுரைப் பழம், குமிழம் பழம், வக்கணத்திப் பழம், புங்கம் பழம் இந்த எழுவகைப் பழங்களையும் சத்தே சத்தே எடுத்து, சிறு நீரிலரைத்து, கண், காது, நாசி இவற் றில் பிழியவும். வெந்நீர் வைக்கவும். வயிறு உப்பிசமானால், பிரண்டையையும், அரப்பையையுங் கூட்டிக் கொடுக்கவும். பழைய வைக்கோல் போடவும்.

## 93. விருட்டி.

மருந்து:—சுக்கு, மிளகு, வசம்பு, உள்ளி, பெருங்காயம், கத்தரி மஞ்சள், களிப்பாக்கு, உப்புச்சொரி ஓமம், குப்பைமேனி, தைவேளை, ஆடு தின்னாப்பாளை, மாவிலங்கம், கொட்டான், வொசாய வேர், எருது தின்னாப் பூடு, பிரண்டை, சாணை வேர், கண்டங் கத்திரி வேர் இவற்றைக் கடைச் சரக்குகளோடு கூடப்போட்டு, இடித்து பெரு விளாங்காயளவு உள்ளுக்குக் கொடுக்கவும். இந்த மருந்திலே கொஞ்சம் எடுத்துப் பிசைந்துக் கொட்டைப் பாக்களவு எடுத்துப்

போட்டு, பன்றி ரத்தம்விட்டு உருண்டை திரட்டி வைத்துக் கொண்டு, மாடு மொர்சுதானால் சக்கிலியன் தோல் குளி தண்ணீர் கலந்து கொடுக்கவும்.

## 94. மாட்டுக் கழிச்சல்.

மருந்து:—வேப்பங் கொழுந்து, விடத்தலாங் கொழுந்து, மஞ்சள் $\frac{1}{8}$—பலம், கிளுவை வேர்ப்பட்டை, சருவக் கொழுந்து, சீரகம் $\frac{1}{8}$-பலம், நீர்ப் புலாம் வேர்ப்பட்டை, 2—கடுக்காய், $\frac{1}{8}$-பலம் வெங்காயம், ஆவாரம் வேர்ப்பட்டை 2-அல்லிக்காய்.

## 95. வயிறு உப்பிசம்.

குணம்:—உடம்பின் இடதுபக்கத்தில் அதிக வீக்கம் காணும். அதைக் கையினால் தட்டிப் பார்த்தால் 'டொங்' 'டொங்' என்று கேட்கும். மாடு வருத்தப்படும். அடிக்கடி எழுந்திருக்கிறதும் படுக்கிறதுமாய் அதிக அரட்டல் புரட்டலாய் இருக்கும். காலினாலே வயிற்றை அடித்துக் கொள்ளும். மூச்சு அதிதீவிரமாய் விடும்.

## 96. மந்தந்தினாலே இரப்பை வீக்கம்.

குணம்:—விலா வெலும்பின் கீழே இடது பக்கத்தைக் கையினால் அழுத்தினால், கைக்கு மெதுவாகத் தீனியினாலே இரைப்பை உப்பி இருப்பது தெரியும். விரல்கள் அழுந்தியது கொஞ்ச நேரம் அழுத்தியபடியே பள்ளமாக இருக்கும். ஸாதாரணமாய் அதிகத் தொந்திரவில்லை. அசைவு போடாது. நாடி மாத்திரம் கொஞ்சம் உதட்டியாயிருக்கும். மலபந்தமாக இருக்கும்

## 97. தீனி சிக்கல்.

குணம்:—தீனியினாலாவது, வாயுவினாலாவது மேற்சொல்லியபடி இரைப்பை வீங்குவதினால் உண்டாவதைவிட, இதனால் சாதாரணமாய் உடலில் அதிகத் தொந்திரவு உண்டாகி யிருக்கும். மூச்சு அவசரமாய் வருவதோடு கூட ஒருவித சொறு சொறுப்பு உண்டாகும். இந்த வியாதி காணும்போது மாட்டுக்குக் கொஞ்சமாய்க் கழிச்சலுண்டாகி, பின்பு சுத்தமாய் மலபந்தமாய்விடுகிறது. வியாதி மெதுவாயும் நூல்போலுமிருக்கிற கடுங் தாக முண்டாகிறது. சொறு சொறுப்பு ஒழிந்து மாடு கதறத் தொடங்கும்.

## 98. இரத்தக் கழிச்சல்.

குணம்:—இந்த வியாதி இருந்தாற் போலிருந்து உண்டாகும். சாதாரணமாய்க் கதகதப்புடனே நடுக்கங்காணும். சீதமும் இரத்தமும்

திரவு இராது. அசைவு போடாது. நாடி மாத்திரம் கொஞ்சம் உதட்டியாயிருக்கும். மலம் பந்தமாய்ப் போகும்.

சிகித்சை:—சாணி தாராளமாய்ப் போடுகிற வயைில் அடியில் கண்டிருக்கும் மருந்தை 6—மணி நேரத்திற் கொருதரம் வார்த்து, வயிற்றிலிருக்கிற கல்மஷத்தை வெளிப்படுத்தவேண்டும். சிற்றுமணக்கெண்ணெய் ½-பயிண்டு, ஆழாக்கு நெய் 1—பயிண்டு உழக்கு.

## 105. தீனிச்சிக்கல்: அதன் குறிகளும் மருந்தும்.

மலமடிப்பாயிருக்கிற மூன்றும் இரைப்பையானது அந்த மலமடிப்புகளிலே தீனி சிக்கிக்கொண்டு சில வேளைகளில் பந்தமாய் விடும். இது சாரமில்லாத மட்டத் தன்மையுள்ள கெட்ட தீனி தின்பதனு லுண்டாகும்.

குறிகள்:—தீனியினுலாவது வாயுவினுலாவது மேற் சொல்லிபடி இரைப்பை வீங்குவதனு லுண்டாவதைவிட இதனுல் சாதாரணமாய் உடலில் அதிகத் தொந்திரவு உண்டாகும். மூச்சு அதிகமாய் வருவதோடு கூட ஒரு வித கொறு கொறுப்பு உண்டாகும். இந்த வியாதி காணும்போது மாட்டுக்குக் கொஞ்சமாய்க் கழிச்சலுண்டாகி, பின்பு சுத்தமாய் மலபந்தமாய் விடும். வியாதி முற்ற முற்ற அந்த இரைப்பை கொதிப்பெடுத்து நாடி படபடப்பாய் அடிக்கும். அதைத் தொட்டுப் பார்ப்பதற்கு மெதுவாயும் நூல்போலுமிருக்கும். கடுந் தாக முண்டாகும். கொறு கொறுப்பு ஒழிந்து மாடு கதறத் தொடங்கும்.

சிகித்சை:—விரத மத்தியிலுண்டாகிற கழிச்சலை சட்டைபண்ணுமல் பலமான பேதி மருந்து வார்க்க வேண்டியது. மூசாம்பரம், திராம் 2-ரூபாயெடை, கொதிக்கிற வென்னீர் 1-பயிண்டு, உழக்கு கிறியாத்துக் குச்சு, நிலவேம்பு 1-அவுன்சு, $2\frac{11}{16}$-ரூபாயெடை, நெய் ½-பயிண்டு 3-ஆழாக்கு மூசாம்பரத்தைக் கொதிக்கும் தண்ணீரில் போட்டு, கரைய வைத்து, மற்ற சரக்குகளைக் கூடச் சேர்த்து, குளிர வைத்து வார்க்கவேண்டியது. இதனுலே தாராளமாய்ப் பேதியாகாவிட்டால், மேற்படி மருந்தை மறு நாளைக்கும் கொடுக்கலாம். நெய்யும் நில வேம்பும் 4-மணிக் கொருதரம் வார்க்க வேண்டியது. வயிறு கொதிப்பாயிருக்கிற தசையிலே ஊமத்தை விதை ½-திராம் $\frac{3}{16}$-ரூபாயெடை கஞ்சாரம் திராம், முன்போல் எடை இவைகளைக் கூடச் சேர்க்க வேண்டியது. இடது பக்கத்தில் அடி வயிற்றிலே கொப்புளம் எழும்புவதற்கான காரம் போடவேண்டியது. அடிக்கடி பீச்சாங்குழல் வைத்தடித்து மலத்தைப் போக்க வேண்டியது. பெரிய காரியமாகப் பார்க்க வேண்டியது.

### 106. கழிச்சல்: அதன் குறிகளும், சிகிச்சையும்.

எருதுக்கு இதுவே ஒரு வியாதியாகாமல் உள்ளிருக்கும் வேறொரு வியாதியைக் காட்டும்படியான குறியாக இருக்கிறது. அடிக்கடி பீச்சும். வயிற்றிலிருந்து விரோதமான கெட்ட வஸ்துக்களை வெளிப்படுத்துவதற்கு அது சுபாவத்திலே உண்டாகலாம். பெரும்பாலும் அதற்காகவே பேதியுண்டாகிறது. வைக்கோல் முதலிய உலர்ந்த தீனி தின்றுகொண்டிருக்கிற மாடு சடுதி புல் முதலிய பசுந்தீனி தின்பதனாலும், உஷ்ணமாயிருந்து உடனே குளிர்ச்சி உண்டாவதனாலும், இராக்காலத்தில் வெட்ட வெளியிலிருப்பதினாலும் சாதாரணமாய்க் கழிச்சலுண்டாகிறது.

சிகித்சை:—வயிற்றிலிருந்து விரோதமான வஸ்துக்களை வெளிப்படுத்துவதற்குக் கழிச்சலுண்டாயிருக்கும்போது பேதியைக் கட்டும்படி ஒன்றுஞ் செய்யக் கூடாது. வெகுவாய்க் கொஞ்சம் நாழியில் கழிச்சல் குறைந்துகொண்டே வந்து மலம் சுபாவம்போல் ஆகிவிடும். சடுதியில் பசுந் தீனி தின்பதனால் பேதி யுண்டாயிருந்தால் அந்தத் தீனியை நிறுத்தி கொஞ்சம் தவிடு வைக்க வேண்டும். அல்லது வைக்கோல் முதலிய உலர்ந்த தீனி போடவேண்டும். குளிர்ச்சியினாலும் ஈரத்தினாலும் உண்டாயிருந்தால், மாட்டை உடனே கூரைக்குள் கட்டி, சூடேறும்படி தேய்த்து, உஷ்ணமாயிருக்கும்படி கம்பளம் முதலியவைகளை மேலே போட்டு மூடி வைக்கவேண்டும்.

கழிச்சல் நிற்காமல் வலுத்து, கொஞ்சம் சுரங் கண்டால், அடியில் கண்டிருக்கிற மருந்தை 4-மணி நேரத்துக் கொருதரம் வார்க்க வேண்டும். அபின் 2-திராம் $\frac{11}{16}$-ரூபாயெடை, பட்டைச் சாராயம் திராம் $1\frac{1}{8}$, கஞ்சி 1-புட்டி, $\frac{1}{2}$-படி ரத்தப்பாளம் கரிய போளமென்று சொல்வதுண்டு.

### 107. இரத்தக் கழிச்சல்: குறியும், சிகித்சையும்.

குடல் அழலாகி இரத்தமும் சீதமுமாய்க் கழிதல்.

குறிகள்:—இந்த வியாதி இருந்தாற் போலிருந்து உண்டாகும். சாதாரணமாய்க் கத கதப்புடனே நடுக்கங் காணும். சீதமும் ரத்தமும் கலந்து சங்கடமாய்க் குழம்பாக துர்கந்தமாய்க் கழியும். கழியும் போது மாடு வெகு வருத்தப்படும். பின்பு கொஞ்ச நேரம் வரையிலும் முக்கிக்கொண்டே இருக்கும். அடிக்கடி அடி வயிற்றில் கடு நோய் உண்டாகி, தன் பக்கத்தை மாடு சுற்று முற்றும் பார்த்துக் கொண்டு நிற்கும். மூச்சு அதிக சீக்கிரமாக வரும். நாடி படபடத்து உதட்டியாய் அடிக்கும்.

கலந்து சங்கடமாய்க் குழம்பாகத் துர்கந்தமாகக் கழிவது கழியும். அப்போது மாடு மிக வருத்தப்படும். பின்பு கொஞ்சம் நேரம் வரையில் முக்கிக் கொண்டிருக்கும். அடிக்கடி வயிற்றிலே கடுநோய் உண்டாகி, தன் பக்கத்தை மாடு சுற்று முற்றும் பார்த்துக் கொண்டு, பற்களை 'நறநற' வென்று கடித்துக் கதறிக்கொண்டு முதுகை வளைத்துக்கொண்டு நிற்கும். மூச்சு அதிக சீக்கிரமாகவும் வரும். நாடி படபடத்து உதட்டியாய் அடிக்கும்.

### 99. வயிற்று வலி.

குணம்:—வேதனை விட்டு விட்டு நோவு காணும். காணும் போது, மாடு கொம்புகளையாவது பின்னங்கால்களையாவது வயிற்றில் அடித்துக் கொள்ளும். நோவு கண்டிருக்கையில் அடிக்கடி படுத்துப் புரண்டு மறுபடியும் எழுந்திருக்கும்.

### 100. குடல் எரிச்சல்.

குணம்:— இந்த வியாதியின் குறிகள் வெகுவாய் வயிற்று வலிக் குறிகள் போலவே இருக்கின்றன. ஆனால் நோயானது அந்த வியாதியில் இருப்பது போல அவ்வளவு கடுமையா யிராது. விட்டு விட்டு வாராமல் நிலையாய் இருக்கும். வரவர நோவு பலிக்கும். நடுக்கலோடுகூட காய்ச்சலும் காணும். கண் ரெப்பைகளின் உள்தோல் இரத்தம் கட்டி மிகவும் உப்பியிருக்கும். கொம்புகளும் காதுகளும், கால்களும் சில்லென்றிருக்கும். மூச்சு தீவிரமாய் வரும். நாடி படபடவென்று அடித்துக் கொள்ளும். அடிவயிற்றை அமுக்கினால் நோகும்.

### 101. மஞ்ச காமாலை.

குணம்:—திம்மென்றிருக்கும் மலபந்தம். பேதியானால் கொஞ்ச மஞ்சள் நிறமாகவாவது களிமண் நிறமாகவாவது இருக்கும். மேற்றோல் வாய், கண்ணீரப்பை இவற்றின் உட்தோல் போன்ற சகல உட்தோல்களும் மஞ்சள் பிளந்தாப்போலிருக்கும். மூத்திரம் கருத்து மஞ்சள் நிறமாய் நீர்ச்சுருக்குடனே கொஞ்சங் கொஞ்சமாக இறங்கும்.

### 102. ஈரல் எரிச்சல் அல்லது சூலை நோய்.

இதனுடைய குறிகள் மிகவும் பிரத்யேகமானவை களல்ல. மஞ்சட் காமாலையில் காணுவதாக முன்னமே சொல்லி இருக்கிற குறிகளோடுங் கூட கொஞ்சமிருக்கும். மூக்கு வரட்சி யுண்டா

கும். நாடி துடி துடிப்பாயிருக்கும். கொம்புகளின் அடியிலே சூடாயிருக்கும். வாய் வறண்டு அழலாயிருக்கும். வலது பக்கத்தில் அழுத்தினால் நோவு காணும்.

## 103. வயிறு உப்பசம்: குறியும், சிகித்சையும்.

குணம்:—தீனி புளிப்பேறுவதனு லுண்டாகும். வாயுவினாலே முதவிரைப்பையாவது, இரண்டாவது (சாந்திருப்பது) இரப்பையாவது சாரமற்ற உலர்ந்த புல் தின்று கொண்டே யிருந்து, சடுதியில் சத்துள்ள செழிப்பான பச்சைப்புல் தின்பதனாலாவது நெடு நேரம் பட்டினியாய் இருந்த பின்பு, அசைவு போட்டிருக்க வேண்டியது. அவசிய மில்லாத மிருதுவான தீனியை அதிகமாய்த் தின்பதனாலாவது மேற்படி வியாதி சாதாரணமா யுண்டாம்.

குறிகள்:—உடம்பின் இடது பக்கத்தில் அதிகம் வீங்கும். அதைக் கையினால் தொட்டுப் பார்த்தால் 'டொங்' 'டொங்' என்று கேட்கும். மாடு மிக வருத்தப்படும். அடிக்கடி எழுந்திருக்கிறதும் படுக்கிறதுமாய் அதிக அரட்டல் புரட்டலாய் இருக்கும். காலினாலே வயிற்றை அடித்துக் கொள்ளும். மூச்சும் அதி தீவிரமாய்விடும்.

சிகித்சை:— இந்த வாயுவைக் கண்டிக்கவாவது வெளிப்படுத்தவாவது வேண்டும். கண்டிப்பதற்கு வார்க்க வேண்டியது. 1—பலம் கடுகு, 13¼—பலம் நெய், 2—புட்டி 1-படி வென்னீர், 1-புட்டி ½-படி இந்த சிகித்சையிலே குணமில்லா விட்டால் வயிற்றைச் சிறுக(த் தீயில்) கீறி அந்தக் கீறலுக்குள்ளே ஒரு சிறு மூங்கிற்குழாயை நுழைத்து வயிற்றிலிருந்து வாயுவை வெளிப்படச் செய்யவேண்டும். கீற வேண்டிய இடம்—முதுகு எலும்புக்கு ஒரு சாணுக்குக் கீழாகக் கடைசி விலா எலும்புக்கும் பின்னங்கால் சப்பை எலும்புக்கும் மத்தியிலேதான்.

## 104. மந்தத்தினாலே இரப்பை வீக்கம்.

மேற்படி வியாதிக்கும் இதற்கும் வித்தியாசம் என்ன வென்றால், முன்னையது இரைப்பையில் வாயு அடைந்திருப்பது. இஃது இரைப்பையில் தீனி நிறைந்திருப்பது. ஆகையினாலே, இஃது அதிலும் கெட்டது என்று தெரிந்து கொள்ளவும்.

குறிகள்:—விலா எலும்பின் கீழே இடது பக்கத்தைக் கையினாலே அழுத்தினால் கைக்கு மெதுவாகத் தீனியினாலே இரப்பை உப்பி இருப்பது தெரியும். விரல்கள் அழுந்தினது கொஞ்ச நேரம் அழுந்தினபடியே பள்ளமாக இருக்கும். சாதாரணமாய் அதிகத் தொங்

திரவு இராது. அசைவு போடாது. நாடி மாத்திரம் கொஞ்சம் உதட்டியாயிருக்கும். மலம் பந்தமாய்ப் போகும்.

சிகித்சை:—சாணி தாராளமாய்ப் போடுகிற வயிைல் அடியில் கண்டிருக்கும் மருந்தை 6–மணி நேரத்திற் கொருதரம் வார்த்து, வயிற்றிலிருக்கிற கல்மஷத்தை வெளிப்படுத்தவேண்டும். சிற்றாமணக்கெண்ணெய் ½-பயிண்டு, ஆழாக்கு நெய் 1–பயிண்டு உழக்கு.

### 105. தீனிச்சிக்கல்: அதன் குறிகளும் மருந்தும்.

மலமடிப்பாயிருக்கிற மூன்றாம் இரைப்பையானது அந்த மலமடிப்புகளிலே தீனி சிக்கிக்கொண்டு சில வேளைகளில் பந்தமாய் விடும். இது சாரமில்லாத மட்டத் தன்மையுள்ள கெட்ட தீனி தின்பதனு லுண்டாகும்.

குறிகள்:—தீனியினுலாவது வாயுவினுலாவது மேற் சொல்லிபடி இரைப்பை வீங்குவதனு லுண்டாவதைவிட இதனுல் சாதாரணமாய் உடலில் அதிகத் தொந்திரவு உண்டாகும். மூச்சு அதிகமாய் வருவதோடு கூட ஒருவித கொறு கொறுப்பு உண்டாகும். இந்த வியாதி காணும்போது மாட்டுக்குக் கொஞ்சமாய்க் கழிச்சலுண்டாகி, பின்பு சுத்தமாய் மலபந்தமாய் விடும். வியாதி முற்ற முற்ற அந்த இரைப்பை கொதிப்பெடுத்து நாடி படபடப்பாய் அடிக்கும். அதைத் தொட்டுப் பார்ப்பதற்கு மெதுவாயும் நூல்போலுமிருக்கும். கடுந் தாக முண்டாகும். கொறு கொறுப்பு ஒழிந்து மாடு கதறத் தொடங்கும்.

சிகித்சை:—விரத மத்தியிலுண்டாகிற கழிச்சலை சட்டைபண்ணுமல் பலமான பேதி மருந்து வார்க்க வேண்டியது. மூசாம்பாம், திராம் 2-ரூபாயெடை, கொதிக்கிற வென்னீர் 1-பயிண்டு, உழக்கு கிறியாத்துக் குச்சு, நிலவேம்பு 1-அவுன்சு, $2\frac{11}{16}$-ரூபாயெடை, நெய் ½-பயிண்டு 3-ஆழாக்கு மூசாம்பாத்தைக் கொதிக்கும் தண்ணீரில் போட்டு, கரைய வைத்து, மற்ற சரக்குகளைக் கூடச் சேர்த்து, குளிர வைத்து வார்க்கவேண்டியது. இதனுலே தாராளமாய்ப் பேதியாகாவிட்டால், மேற்படி மருந்தை மறு நாளைக்கும் கொடுக்கலாம். நெய்யும் நில வேம்பும் 4-மணிக் கொருதரம் வார்க்க வேண்டியது. வயிறு கொதிப்பாயிருக்கிற தசையிலே ஊமத்தை விதை ½-திராம் $\frac{3}{16}$-ரூபாயெடை கஞ்சாசம் திராம், முன்போல் எடை இவைகளைக் கூடச் சேர்க்க வேண்டியது. இடது பக்கத்தில் அடி வயிற்றிலே கொப்புளம் எழும்புவதற்கான காரம் போடவேண்டியது. அடிக்கடி பீச்சாங்குழல் வைத்தடித்து மலத்தைப் போக்க வேண்டியது. பெரிய காரியமாகப் பார்க்க வேண்டியது.

### 106. கழிச்சல்: அதன் குறிகளும், சிகிச்சையும்.

எருதுக்கு இதுவே ஒரு வியாதியாகாமல் உள்ளிருக்கும் வேறொரு வியாதியைக் காட்டும்படியான குறியாக இருக்கிறது. அடிக்கடி பீச்சும். வயிற்றிலிருந்து விரோதமான கெட்ட வஸ்துக்களை வெளிப்படுத்துவதற்கு அது சுபாவத்திலே உண்டாகலாம். பெரும்பாலும் அதற்காகவே பேதியுண்டாகிறது. வைக்கோல் முதலிய உலர்ந்த தீனி தின்றுகொண்டிருக்கிற மாடு சடுதி புல் முதலிய பசுந்தீனி தின்பதனாலும், உஷ்ணமாயிருந்து உடனே குளிர்ச்சி உண்டாவதனாலும், இராக்காலத்தில் வெட்ட வெளியிலிருப்பதினாலும் சாதாரணமாய்க் கழிச்சலுண்டாகிறது.

சிகித்சை:—வயிற்றிலிருந்து விரோதமான வஸ்துக்களை வெளிப்படுத்துவதற்குக் கழிச்சலுண்டாயிருக்கும்போது பேதியைக் கட்டும்படி ஒன்றுஞ் செய்யக் கூடாது. வெகுவாய்க் கொஞ்சம் நாழியில் கழிச்சல் குறைந்துகொண்டே வந்து மலம் சுபாவம்போல் ஆகிவிடும். சடுதியில் பசுந் தீனி தின்பதனால் பேதி யுண்டாயிருந்தால் அந்தத் தீனியை நிறுத்தி கொஞ்சம் தவிடு வைக்க வேண்டும். அல்லது வைக்கோல் முதலிய உலர்ந்த தீனி போடவேண்டும். குளிர்ச்சியினாலும் ஈரத்தினாலும் உண்டாயிருந்தால், மாட்டை உடனே கூரைக்குள் கட்டி, சூடெழும்ப, தேய்த்து, உஷ்ணமாயிருக்கும்படி கம்பளம் முதலியவைகளை மேலே போட்டு மூடி வைக்கவேண்டும்.

கழிச்சல் நிற்காமல் வலுத்து, கொஞ்சம் சுரங் கண்டால், அடியில் கண்டிருக்கிற மருந்தை 4-மணி நேரத்துக் கொருதரம் வார்க்க வேண்டும். அபின் 2-கிராம் $\frac{11}{16}$-ரூபாயெடை, பட்டைச் சாராயம் கிராம் $1\frac{1}{8}$, கஞ்சி 1-புட்டி, $\frac{1}{2}$-படி ரத்தப்பாளம் கரிய போளமென்று சொல்வதுண்டு.

### 107. இரத்தக் கழிச்சல்: குறியும், சிகித்சையும்.

குடல் அழலாகி இரத்தமும் சீதமுமாய்க் கழிதல்.

குறிகள்:—இந்த வியாதி இருந்தாற் போலிருந்து உண்டாகும். சாதாரணமாய்க் கத கதப்புடனே நடுக்கங் காணும். சீதமும் ரத்தமும் கலந்து சங்கடமாய்க் குழம்பாக துர்க்கந்தமாய்க் கழியும். கழியும் போது மாடு வெகு வருத்தப்படும். பின்பு கொஞ்ச நேரம் வரையிலும் முக்கிக்கொண்டே இருக்கும். அடிக்கடி அடி வயிற்றில் கடு நோய் உண்டாகி, தன் பக்கத்தை மாடு சுற்று முற்றும் பார்த்துக் கொண்டு நிற்கும். மூச்சு அதிக சீக்கிரமாக வரும். நாடி படபடத்து உதட்டியாய் அடிக்கும்.

சிகித்சை:—குடலிலிருக்கிற கல்மஷத்தினால் நமநமப்பு உண்டாவதனாலே மலம் இளகி இருந்த போதிலும், பேதி மருந்து வார்ப்பது உத்தமம். இதற்காகத் தகுதியான மருந்தாவது:—சிற்றாமணக்கெண்ணெய் 1–பயிண்டு உழக்கு, அபினி $\frac{1}{2}$-திராம் $\frac{3}{16}$—ரூபாயெடை, இதை விடாமல் 2, 3–நாள் காலையில் வார்க்கவும். இதுவுமல்லாமல், ஒவ்வொரு நாளைக்கும் 3-தரம் அடியில் கண்டிருக்கும் மருந்தை வார்க்கவும். 8-அவுன்சு $\frac{3}{4}$-ஆழாக்கு, அபினி 1-திராம், $\frac{3}{8}$-ரூபாயெடை, வால்மிளகு 1-அவுன்சு $2\frac{11}{16}$-ரூபாயெடை அடிவயிற்றுக்குச் சூடான ஒத்தடம் போடவேண்டும். ஒவ்வொரு தடவைக்கு 3-காலன் 6-படித் தண்ணீர் விழுக்காடு 1-நாளைக்கு 3, 4-தடவை வெத வெத வென்றிருக்கிற வென்னீரைப் பீச்சாங் குழலினால் ஆசனத்துக்குள் பீச்சுவதினாலே அதிக குணமுண்டாகும். மாட்டுக்குத் தீனி வெகு ஜாக்கிரதையாய்ப் பார்க்கவேண்டியது. பிசைந்த தவிடும் கஞ்சியும் பசையான புல்லுந்தான் கொடுக்கவேண்டும்.

### 108. வயிற்றுவலி: குறியும், சிகித்சையும்.

வெறும் இசிவினாலே மாத்திரம் இருந்திருந்து மாட்டுக்கு வயிற்றுவலி காணுகிறதில்லை. சாதாரணமாய் வாயு உப்புசத்தினாலே நோவு உண்டாகிறது.

குறிகள்:— வேதனை விட்டு விட்டு நோவு காணுகிறது. காணும்போது, மாடு, கொம்புகளினாலாவது பின்னங் கால்களினாலாவது, வயிற்றை அடித்துக் கொள்ளும். நோவு கண்டிருக்கையில் அடிக்கடி படுத்துப் புரண்டு மறுபடி எழுந்திருக்கும்.

சிகித்சை:—அடியில் கண்டிருக்கிற மருந்து வார்க்க வேண்டியது. அவசியமானால் $\frac{1}{2}$-மணி நேரத்திற்குப் பிறகு மறுபடி 1-திராம் வார்க்கவேணும். சிற்றாமணக்கெண்ணெய் 1-பயிண்டு உழக்கு, அபினி 2-திராம் $\frac{3}{16}$-ரூபாயெடை சுக்கு 4-திராம் $1\frac{3}{8}$-ரூபாயெடை பெருங்காயம் 2-திராம் $\frac{11}{16}$-ரூபாயெடை.

### 109. குடலெரிச்சல்: குறியும், சிகித்சையும்.

உடம்பு சூடான பின்பு குளிரிலும் ஈரத்திலும் அடிபடுவதனாலே இந்த வியாதி உண்டாகிறது. மேலும் மேற் சொன்ன வயிற்றுவலியைத் தீர்க்காவிட்டாலும் குடல் எரிச்சல் காணும்.

குறிகள்:—இந்த வியாதியின் குறிகள் வெகுவாய் வயிற்றுக் குறிகள் போலவே இருக்கிறது. நோவும் அந்த வியாதியிலிருப்பது

போலவே இருக்கும். அவ்வளவு கருமையாகவும் இராது. விட்டு விட்டும் வாராமல் நிலையா யிருக்கும். வர வர நோவு வலுக்கும். நடுக்கலோடுகூட காய்ச்சலும் காணும். கண் ரெப்பைகளின் உள் தோல் இரத்தங் கட்டி மிகவும் உப்பி யிருக்கும். கொம்புகளும் காதுகளும் கால்களும் சில்லென்றிருக்கும். மூச்சு, தீவிரமாய் வரும். நாடி படபட்வென்று அடித்துக் கொள்ளும். அடி வயிற்றை அமுக்கினால் நோவும்.

சிகித்சை:—நோயையும் குடலெரிச்சலையும் தணிப்பதே முக்கியம். அபினி 2-திராம், $\frac{11}{16}$-ரூபாயெடை, நெய் $\frac{1}{2}$-பயிண்டு ஆழாக்கு வெதுவெதுப்பான வென்னீரை அடிக்கடி பீச்சாங்குழலினால் ஆசனத்துள் அடிக்கவும். கொதிக்கிற நீரில் கம்பளியை நனைத்துப் பிழிந்து அடி வயிற்றில் ஒத்த வேண்டியது.

## 110. எரி காய்ச்சல்: குறிகளும், சிகித்சையும்.

இது உபயோகத்தினாலே உடல் சேதமாகிற அளவுக்குத் தக்கபடி அதை வளர்க்கிற சத்துக்கள் சேராமல் அதிகமாக இரத்தத்தில் சேர்ந்து அதன் குணத்தை மாற்றுகிறதனால் உண்டாகும். இது ரத்த சம்பந்தமான வியாதியாகும். இங்கு மங்குமாகக் கிடக்கிற சக்தியில்லாத உலர்ந்த பூண்டைத் தின்று கொண்டே இருந்து, மழை காலத்தின் ஆரம்பத்தில் செழிப்பான சாரமுள்ள புதுப் பச்சைப் புல்லை ஒருமிக்கத் தின்பதனாலும், உஷ்ணம் சடுதியில் அதிகமாகக் குறைந்து போவதனாலும் வியர்வையும் நின்று போய், உடலின் உட்கூறுகளில், இரத்தம் அதிகமாய்ச் சேருவதனாலும் இந்த வியாதி உண்டாகும். இந்தக் காரணங்களினாலே இந்த வியாதி பாவி இருக்கும்போது சிலர் இதைத் தொத்து வியாதி என்று நினைக்கிறார்கள். ஆனால் இது தொத்து வியாதியல்ல.

குறிகள்:—சாதாரணமாய் இந்த வியாதி இராக் காலத்தில் காணுகிற படியால் அதைப் பெரும்பாலும் கண்டு பிடிக்கிறதில்லை. அதிகாலையில் மாடு திம்மென்றிருக்கும். ஒன்றும் தின்னாது. தாகம் அதிகமாக இருக்கும். அசைவு போடுவதில்லை. மூக்கு, வாய் வரண்டு, மூச்சு வேகமாய் வரும். கண்கள் ஆவல் கொண்டு இருக்கும். நாடி உதட்டியாய்ச் சீக்கிரமாக அடித்துக் கொள்ளும். அடியெடுத்து வைக்க மாட்டிற்கு இஷ்டமிராது. நடந்து போகும்படி பலவந்தம் செய்தால் அதிகமாக நொண்டும். நொண்டுகிற அவயவம் சாதாரணமாய் வீங்கி யிருக்கும். சில வேளைகளில் முன் சப்பையிலாவது இடுப்பிலாவது முதுகில் நெடுக முன் பக்கமாவது வீங்கி இருக்கும். கணுக்கால் வரையிலும் கால் முழுவதி

லுமாவது சூடாயிருக்கும். அதிகமாக நோவும். அழுத்துகிற இடத்திலே நெறு நெறுவென்று இருக்கும். அந்த வியாதி, அதிக சீக்கிரத்தில் அதிகரித்து, சில நாழிகையில் மாடு குன்றி செத்துப் போகிறது. கால்களும் அழலாயிருந்த பாகங்களுங்கூட சில்லிட்டு நாடி அதிக சீக்கிரமாய் அடித்துக் கொண்டு கைக்குத் தென்படாது. சீக்கிரத்தில் உணர்ச்சி போய் விடும்.

சிகித்சை:—முதலில் வியாதி வர வொட்டாமல் பார்த்துக்கொள்வதே முக்கியம். மழைக்காலத்தில் இருந்தாற்போலிருந்து இளம்புல் விழும்போதாவது பச்சைப்புல் போடாமல் மிதமாய் வைக்கோலாவது வேறே யுலர்ந்த தீனியாவது போடவேண்டும். வியாதி அதிக வேகமாய் வலுக்கிறபடியினாலே முதலிலேயே பார்க்காவிட்டால் மருந்து சிறிதும் உபயோகப்படாது. வீக்கத்தைக் கத்தியினாலே கீறலாம். அதிலிருந்து மிதமாய் ரத்தம் வடிந்தால் அவ்வளவும் நல்லதுதான். செவ்வையாகப் பேதியாக வேண்டியது. அதற்காகச் சிற்றாமணக்கெண்ணெய் 1-பயிண்டு உழக்கு வார்க்க வேண்டும். அதற்குப் பின், குணந்தெரிகிற வரையில் ஒவ்வொரு மணி நேரத்திற்கு இஞ்சி $\frac{1}{4}$-பலம்2 $\frac{7}{16}$-பலம் பொட்டிலுப்பு 1-அவுன்ஸ் $\frac{3}{16}$-ரூபாயெடை கஞ்சி 1-புட்டி $\frac{1}{2}$-படி இவைகளைச் சேர்த்து முன் சொல்லியபடி வார்க்கவேண்டும். கோமாரி நோய்க்குப் பெருவாரிக் காய்ச்சல் என்று சில தேசங்களிலும் ஜில்லாக்களிலும் (சொல்லி) வழங்கி வருகின்றது.

### 111. மஞ்சட்காமாலை: குறிகளும், சிகித்சையும்.

ஆரோக்கியமா யிருக்கையில் தீனி ஜீரணமாகும்படி உதவி செய்யும் பொருட்டு ஈரலிலிருந்து குடல்களுக்குள் பாய்கிற பித்த நீரானது இந்த வியாதியிலே உடல் முழுவதும் ஊறிப் போகிறது.

குறிகள்:—திம்மென்றிருப்பதும் மலபந்தமுமாம். பேதியானால் கொஞ்சம் மஞ்சள் நிறமாகவாவது களிமண் நிறமாவாவது இருக்கும். மேல் தோல் செப்பை இவற்றின் உட்தோல் போன்ற சகல உள்தோல்களும் மஞ்சள் பிளந்தாற் போல் இருக்கும். மூத்திரம் கருநிற மஞ்சள் நிறமாய் நீர்ச் சுருக்குடனே கொஞ்சங் கொஞ்சமாக இறங்கும்.

சிகித்சை:—பெரும்பாலும் மலத்தைத் தாராளமாய்ப் போக்குவதைவிட வேறொன்றுஞ் செய்ய வேண்டிய அவசியமில்லை. அதற்காக, மூசாம்பரம் 4–திராம் $1\frac{3}{8}$–ரூபாயெடை, கிறியாத்துக்குச்சு, நிலவேம்பு 4–திராம் $1\frac{3}{8}$–ரூபாயெடை இவற்றை, பேதி பலமாயிராவிட்டால், ஒரு வாரம் வரையில் ஒரு நாள் விட்டு ஒரு நாள் போட வேண்டும். பேதி பலமாயிருந்தால், மருந்தைக் குறைக்கவும்.

### 112. ஈரல் எரிச்சல் அல்லது சூலை நோய்: குறிகளும், சிகித்சையும்.

இது சாதாரணமாய்த் தீர்க்க ரோகமாகவாவது கடு நோயில் கொஞ்ச பிரமாணமாகவாவது சம்பவிக்கிறது. அதனுட்குறிகள் மிகவும் பிரத்தியேகமானவை அல்ல. மஞ்சட் காமாலையில் காண்பதாக முன்னமே சொல்லி யிருக்கிற குறிகளோடுங் கூட, கொஞ்சம் காய்ச்சலு மிருக்கும். மூக்கு வறட்சி யுண்டாகும். நாடி துடி துடிப்பா யிருக்கும். கொம்புகளி னடியிலே சூடாய் இருக்கும். வாய் வறண்டு அழலாயிருக்கும். வலது பக்கத்தில் அழுத்தினால் நோவு காணும்.

சை:—மலம் தாராளமாய்ப் போகும் வரையில் $2\frac{11}{16}$-ரூபாயெடை முதல் 4-திராம் $1\frac{3}{8}$-ரூபாயெடை வரையில் மூசாம்பரத்தை நாளொன்றுக்கு 2, 3-தடவை போடவேண்டும். கர்ப்பூரம் 2-திராம் $\frac{11}{16}$-ரூபாயெடை, பொட்டிலுப்பு 2-திராம் $\frac{11}{16}$-ரூபாயெடை, ஜெனஷியன்வேர் 2-திராம் $\frac{11}{16}$-ரூபாயெடை இவற்றை தூள் செய்து கஞ்சியில் கலந்து கத்துக் குழாயில் வைத்து ஜாக்கிரதையாகப் போடவேண்டும்.

### 113. அடைத்துக் கொள்ளல்: குறியும், சிகித்சையும்.

ம்:—விழுங்க மாட்டாமலாவது விழுங்குவது கஷ்டமாகவாவது இருப்பது காணலாம். களிம்பு முதலிய அப்படிப்பட்ட கெட்டியான பெரிய துண்டுகள் தொண்டைக் கடியிலாவது வாயிலிருந்து தீனிப்பைக்கு இரை செல்லுகிற வழியாகிய தொண்டை இரைக் குழலின் யாதொரு பக்கத்திலாவது அடைத்துக் கொள்வதனால் இந்தச் சங்கட முண்டாகலாம். சில வேளைகளில் தோல் துண்டு, இரும்புத் துண்டு, ஆணி, கூரான முள், கூரான கெட்டி மரத்துண்டு ஆகிய இப்படிப் பட்டவைகளை மாடுகள் விழுங்குங்கால், அவைகள் தொண்டை இரைக் குழலில் அடைத்துக் கொள்ளும். அவைகள் மிகவும் கெட்டியா யிருக்குமாகில் கூரான முனை அல்லது ஓரத்தினால் அந்தக் குழலின் உள்தோலைக் கீறிப் போடலாம்.

ள்:—வாய்க்கடியிலாவது தொண்டைக்கடியிலாவது அடைத்துக் கொண்டிருந்தால் அந்த ஜந்து இருமிக் கொண்டு சொள்ளு ஒழுகும். தண்ணீர் குடித்தால் அந்தத் தண்ணீர் மூக்கு வழியாய் வெளியில் வந்து விடும். தொண்டை இரைக்குழலில் அடைத்துக் கொண்டிருந்தால் 2, 3-மிடறு தண்ணீர் குடித்து அந்த இரைக் குழலில் அடைத்துக் கொண்டிருக்கிற வரையில் நிறம்பின பின்பு அந்தத் தண்ணீர் வாயினாலும் மூக்கினாலும் வெளிப்பட்டு விடும். அந்த மாடு மிகவும் உறக்கமாயிருக்கும். அதனுடைய முகக் குறியினா

லேயே நோய் இருக்கிறதாகத் தெரியும். கழுத்தின் தசை நரம்புகளில் இசிவு காணப்படும். அடைத்துக் கொண்டிருக்கிற வஸ்துவைத் தீனிப் பைக்குள் போகும்படி செய்வதற்காவது, வாயினுல் கக்கி விடுவதற்காவது அந்த ஜந்து பிரயத்தனப் படுவதனுலே இப்படி யெல்லாம் உண்டாகிறது. கொஞ்ச நேரத்தில் வயிறு உப்புசம் காணுகிறது. சீக்கிரத்தில் அந்த ஜந்துவிற்கு நிவாரணம் செய்யாவிட்டால் வயிற்றின் இடது பக்கம் அதிகமாக உப்பிப் போகும். தொண்டையில் அடைத்துக் கொண்டிருந்தால் வாய்க்கு அடிவரையில் கையைப் போட்டால் அது தட்டுப்படும். வாயின் அடி முதல் மார்புக்குள்ளாக இரைப்பையில் அடைத்துக் கொண்டிருக்குமாகில் தொண்டையைக் கையினுல் தடவி ஜாக்கிரதையாய்ப் பரிசோதனை செய்தால், அடைத்துக் கொண்டிருக்கிற இடத்திலே வீக்க மிருக்கு மாதலால், வெளிப் பக்கத்தில் அது தட்டுப்படும். மார்புக் கப்பால் செல்லுகிற இரைக் குழலினிடமாய் அடைத்துக் கொண்டிருந்தால் அப்போது வாய்க் கடியிலாவது தொண்டையிலே, எங்கேயாவது இல்லை என்பது நிச்சயம். அந்த ஜந்து தண்ணீர் குடிக்கும் போது தொண்டையின்கீழ் நோய் இரைக் குழலுக்குள் தடை யொன்று மில்லாமல் தண்ணீர் செல்வது தெரியும். ஆனுல் 2, 3-மிணறு குடித்த பின்பு வர வர தொண்டைப் பக்கமாய் இரைக்குழலில் தண்ணீர் நிரம்பும். கடைசியில் தொண்டையோடு இரைக்குழல் கூடுகிற இடம் வரையில் பூர்த்தியாய் நிறைவதன் பேரில் தண்ணீர் வாந்தியாய் விடும்.

வைத்தியம்:—ஆழாக்கு லின்சிட் ஆளிவிதை எண்ணெயைச் சுடவைத்துக் கொண்டு, $\frac{1}{2}$-ஆழாக்குப் பட்டைச்சாராயம் கலந்து நன்ருய்க் குலுக்கி வெகு சாக்கிரதையோடு கொஞ்சங் கொஞ்சமாய் வார்க்க வேண்டியது. அஃது இரைக் குழலுக்கும், அடைத்துக் கொண்டிருக்கிற ஆகாரம் அல்லது வேறே வஸ்துவிற்கும் வழ வழப்புக் கொடுக்கும். மேலும், இரைக்குழலைத் தூண்டி விட்டு அடைத்துக் கொண்டிருக்கிறதை நெகழ்ந்தித் தள்ளும். வார்க்கிற மருந்து ஒரு முறையாவது பல முறையாவது வாந்தியாய் போகலாம். ஆனுல் நிறுத்தாமல் ஒவ்வொரு தடவைக்கும் கொஞ்சங் கொஞ்சமாக அடிக்கடி வார்க்க வேண்டும். தொண்டைக் கடியிலே அடைத்துக் கொண்டிருந்தால் அதைக் கையினு லெடுத்துப் போட வேண்டும். இரைக்குழலில் தொண்டைப் பக்கமாய் அடைத்துக் கொண்டிருந்தால், எண்ணெயையும் சாராயத்தையும் கலந்து வார்த்த பின்பு, தொண்டையில் கண்டு பிடிக்கப்பட்ட வீக்கத்தைச் சுற்றிலும் விரல்களினுல் அழுத்த வேண்டும். விடாமல் அப்படி அடிக்கடிங் செய்வதால் அடைத்துக் கொண்டிருக்கிற விடத்து சாதாரணமாய் நகர்ந்துப் போகும். ஜந்துவிற்கும் சங்க

டம் நிவிர்த்தியாகும். மார்புக்குள் இரைக்குழலில் அடைத்துக் கொண்டிப்பதாய்க் குறிகளினால் தெரியவந்தால், எண்ணெயையும் சாராயத்தையும் கலந்து அடிக்கடி விடாமல் வார்த்தும் பிரயோசனப் படாமல்போனால், அப்போது சுமார் 6-அடி நீளமுள்ள ரப்பரினால் செய்யப்பட்ட ஊத்துளைக்குழலை, தயாராயிருக்குமாகில், அதை வாய்க்குள் இரைக்குழலின் வழியாக அடைபட்டிருக்கிற இடம் வரையில் விட்டுக் கொஞ்சம் மெதுவாக அழுத்தினால் அடைத்துக் கொண்டிருக்கிற வஸ்துவை சாதாரணமாய் இரைப்பைக்கு நேராக நகர்த்தும். அப்படிப்பட்ட சரியான குழல் அகப்படாவிட்டால் அப்போது சுமார் ஆள்காட்டிவிரல் பருமன் நல்ல பிரம்பு கொண்டு வந்து, அதன் முனையில் பஞ்சு அல்லது சணல் நாரைச் சுற்றி, துணியால் மூடி, சுமார் ஒரு கோழிமுட்டை பருமனுக்கு மெதுவான பந்தாகப் பத்திரமாய்க் கட்டி, எண்ணெயில் நன்றாய்த் தோய்த்து, பின்பு அதை வாய் வழியாக இரைக்குழலுக்குள் விட்டு அடைத்துக் கொண்டிருக்கிற வஸ்துவின்மேல் மெதுவாய் அழுத்தலாம். மேற் சொன்னபடி செய்கிற வரையில் வேறொருவன் ஜந்துவின் வாயைத் திறந்து பிடித்துக் கொண்டேயிருக்க வேண்டும். அடைத்துக் கொண்டிருக்கிற வஸ்துவினாலாவது சிகித்சை செய்கிறவன் குழலை அதிக விசையாய் அழுத்துவதனாலாவது பிரம்பின் முனையில் பந்தைக் கிரமமாய்க் கட்டாமையினாலாவது ஒவ்வொரு சமயத்தில் இரைக்குழல் அறுபட்டாகிலும் கிழிந்தாகிலும் (ஒவ்வொரு சமயத்தில்) போகிறதுமுண்டு. இவ்விதமாய் இரைக்குழல் நிரந்தரமாய் கெட்டுப் போலாம். அப்படியாகிற விஷயத்தில் ஏதாவது அடிக்கடி அடைத்துக் கொள்ளும்படி நேரிடும். அப்படி நேரிடும் போதெல்லாம் இரைக்குழலில் அடைத்துக் கொள்ளுகிற பாகமானது சில நாளைக்குப் பலவீனமா யிருக்கும். ஆகையால் கஞ்சியை அல்லது நொய் கொட்டிய மாவை தண்ணீரில் கலந்த வஸ்துவாகிய மெதுவான தீனியை மாத்திரம் 3, 4-நாளைக்கு வைக்க வேண்டும். பின்பு, இளம் பச்சைப்புல் போட வேண்டும். இரைக் குழலில் தொண்டைப் பக்கமாய் அடைத்துக் கொண்டிருந்தால் சங்கடமான சமயங்களில் அந்தப் பாகத்தை மாட்டு வைத்தியர்கள் கத்தியினால் அறுக்கிறார்கள்.

# III. சுவாசாசயம், இரத்தவோட்டம் சம்பந்தப்பட்ட வியாதிகள்.

## 1. மூக்கு சம்பந்தமான வியாதிகள்.

### 1. குறட்டை விடுதல்.

பக்குவம்:—மாட்டைப் பதனமாகத் தரையில் தள்ளி, எருமுட்டை நெருப்புக் கும்பியில் எருக்கம் கழியைச் செருகி வைத்து, எடுத்துச் சுடச் சுட, மூக்கில் இரண்டு துவாரத்திலும் விட்டுத் திருப்பின பிறகு, ஆவின் பாலையும் இலுப்பைப் பிண்ணாக்கையும் கலந்து, கரைத்து, கொதிக்க வைத்து, விசேஷமாக ஞாயிற்றுக் கிழமையில் வார்க்கவும். அந்தபடி 2, 3–வாரம் வார்க்கவும். குணமாகும். குறட்டை இருந்த விடம் சொல்லாமல் ஓடும் (கைகண்டமுறை)

### 2. காற்றுடி நோய்.

குணம்:—குறட்டை யிடும்.

பக்குவம்:—மேனிச்சாறும் சுக்கும் உரைத்து நசியம் செய்து  இந்த

மாதிரி சுடவும். குணமாகும்.

### 3. புலிமூக்குப் பற்றின மாடு.

குணம்:—மூக்கு அடைக்கும். வீங்கும். வாயில் அழலை விழும். அழுரி நாறும்.

பக்குவம்:—மாவிலிங்க இலையைச் சிறுநீரில் அரைத்துக் கலக்கி நசியம் செய்யவும். தாளியிலை, விழுதியிலை, இலந்தைத் தோல், இவைகளை யரைத்து, நாலுகாலிலும் பூசவும். தலையைக் கட்டி

 இந்த மாதிரி சுடவும். குணம்.

**4. நாசியிலிருந்ததிகமாக இரத்தமோடிக்கொண்டும் அதிக அலுப்படைந்து மிருப்பதற்கு.**

மருந்து:—முகத்தை அடிக்கடி குளிர்ந்தஜலத்தால் கழுவி, சீனக்காரத்தையும் ஆட்டுப் புழுக்கையும் தூள்செய்து நசியமிட்டு வர, குணமாகும்.

**5. குறட்டை நோய்.**

குணம்:—வாய் நீர் வடிந்து நிற்கும். கருப்புக் கட்டிக் கொடுக்கவும். நாலுகாலிலேயும் புல்லடி சூடு போடவும்.

**6 காற்றடி நோய்.**

குணம்:—குறட்டை விடும்.

பக்குவம்:—குப்பைமேனிச் சாற்றையும், சுக்கையும் நசியம்பண்ணி, தெள்ளிலை பாப்பரய்ச் சுட, சொஸ்தமாகும்.

**7. குறளை நோய்.**

குணம்:—மானவடிவெடுத்தும், வாயிலெடுத்தும், செருக்க வந்தியிட்டுயிருக்கும்.

பக்குவம்:—கருப்பங்கட்டியைக் தின்னக் கொடுத்து, முன்னங் காலிலும் பின்னங்காலிலும் முள்ளடியாகச் சுட, சொஸ்தமாகும்.

---

## 2. நுரையீரல் இருதயம் மற்ற மார்புக்கூட்டில் இருக்கும் அவயங்களின் வியாதிகள்.

**1. மாடு செருமினல்.**

பக்குவம்:—எருக்கிலை, அழிஞ்சியிலை, பேய்க்கும்பட்டியிலை, வேப்பிலை இவைகளைத் துவைத்து, சாறுஎடுத்து, வேப்பெண்ணெய் விட்டுக்கொதிக்வைத்து, தலையில் பூசவும். மாட்டின் வியாதியெல்லாம் தெறிக்கும்.

நாவிலிருந்து வரும் நீர் அதிக இழக்கமாய்த் தண்ணீர்போல் ஓடியும், அடிக்கடி இருமிக்கொண்டும், தீனியில் விருப்பமில்லாமல் அலுப்புகொண்டும் நிற்பதற்கு:—

மருந்து:— திப்பிலி, மிளகு, கடுகு ரோகிணி, காட்டுச்சீரகம், பூண்டு, பூவரசம்பட்டை இவற்றை வகைக்கு 3-தோலா வீதம் கஞ்சி விட்டரைத்து, உருட்டி, காலை மாலை உள்ளுக்குக் கொடுத்து, வென்னீர் காட்டி வர, சுகமாகும்.

நாசியிலிருந்து வரும் சளி அதிக இறுக்கமாயும் வெண்மையாகவும் நாற்ற முடையதாகவும் தீனியில் விருப்பமற்றும் இருப்பதற்கு:—

மருந்து:—வங்காள மஞ்சள், கரிமஞ்சள், திப்பிலி, கோஷ்டம், பூண்டு, ஓமம் இவற்றை வகைக்கு 2-தோலா வீதம் எடுத்து பொரித்த வெங்காரம், பொரித்த படிகாரம், இவற்றை 1-தோலா வீதம் 8-தோலா கொச்சியிலை இவற்றுடன் சேர்த்து அரைத்து தேன் விட்டுப் பிசைந்து, உருட்டி, காலை மாலை கொடுத்து, வென்னீர் காட்டி வர, சுகமாகும்.

நாசியிலிருந்து ஓடும் நீர் அதிக தடித்ததாயும் மஞ்சள் நிற முடைதாயும் அதிகமா யோடியும் நாற்றமுடையதாயும் இருப்பதற்கு:—

மருந்து:—ஓமம், கடுகு, கடுகுரோகிணி, மிளகு, வசம்பு, மஞ்சள், மாசக்காய், கோஷ்டம், வெட்பாலையரிசி இவற்றை வகைக்கு 2-தோலா வீதம் காயம், பொரித்தவெங்காரம் $\frac{1}{2}$-தோலா இவைகளை முருங்கைப்பட்டைச் சாற்றை விட்டரைத்து, கவாளமாக இரண்டு வேளையும் கொடுத்து வர, குணமாகும்.

நாசியிலிருந்து ஓடும் நீர் தடித்ததாயும் சிவப்பு நிறமுடையதாயும் தீனியில் விருப்பமில்லாது மயிர் சிலிர்த்துக் கொண்டும் நிற்பதற்கு:—

மருந்து:—வெற்றிலை, நிம்பக்கொழுந்து, மிளகு, ஓமம், கடுகுரோகிணி, கடுக்காய், மஞ்சள் இவற்றை வகைக்கு 3-தோலா வீதம் வென்னீர் விட்டரைத்து, கவளமாக்கி, இரண்டு வேளையும் கொடுத்து வர, குணமாகும்.

## 2. ஈரல், ரத்தாசயம், முதலிய நெஞ்சைப் பற்றி இருக்கும் கருவிகளி லுண்டாகும் ரோகங்கள்.

குதிரைகள் மாடுகளின் நெஞ்சுப் பக்கத்தைக் கையினலமிழ்த்தும் போது வலியுண்டாகும். வாய் மூக்கு உலர்ந்தும், தேகத்தில் சூடுண்டாகியும் மூச்சுவிட வாதைப்பட்டும், இரை தின்னாது சாணி செவ்வையாகப் போடாமல் இருக்கும்.

மருந்து:—கத்தக்காம்பு, கரியபவளம், அப்பளாக்காரம், கோஷ்டம், வாலுளுவையரிசி, படிக்காரம், பனைவெல்லம் இவற்றை 2-தோலா வீதம் எடுத்து, காயம், அபின் இவற்றையும் வகைக்கு $\frac{1}{2}$-தோலா எடுத்து சாராயம் விட்டரைத்து, கவளமாக்கி, காலை மாலை பாலில் கலக்கிக் கொடுத்துவர, குணமாகும்.

குணம்.—வருத்தப்பட்டு மூச்சுவிட்டுக்கொண்டும், செருமிக்கொண்டு, வாயால் நீரோடியும், கழுத்து வீங்கியும், கண்கள் சிவந்தும் அதிக உபத்திரப்படும்.

மருந்து:—வீக்கத்திற்கு ஊமத்தன் இலைச்சாற்றில் புற்றுமண், மஞ்சள் இவற்றை யரைத்துக் கெர்திக்க வைத்து, பூசி, உள்ளுக்கு கர்ப்பூரம், ஓமம், சீரகம், மஞ்சள், அப்பளாக்காரம், பொரித்த படிக்காரம், இவற்றை வகைக்கு 2-தோலா வீதம் அரைத்து, $\frac{1}{16}$-படி சிற்றுமணக்கெண்ணெயில் கலந்து, காலை மாலை கொடுக்க, குணமாகும்.

குணம்:—குரலடைத்துத் தீனி தின்னாது. வாயை அடிக்கடி திறந்து கொண்டும் வாயினால் நீரோடிக் கொண்டும் இருக்கும்.

மருந்து:—மிளகு, திப்பிலி, பூண்டு, தயிர், வேளையிலை, மேனியிலை, வெள்ளருகு இவற்றை வகைக்கு 2-தோலாவீதம்எடுத்து, காயம், வசம்பு இவற்றையும் $\frac{1}{2}$-தோலா வீதம் சாராயம் விட்டரைத்து, கவளமாக்கி, காலை மாலையில் கொடுத்து வர, சுகமாகும்.

கழுத்தில் குளிர் படாமல் கம்பளி போட்டுக் கட்டிவைக்க வேண்டும்.

குணம்:—கண், மூக்கு இவைகளில் நீர் வடிந்து கொண்டும், மூச்சு விடும் போது 'கர் புர்' என்று இழுத்துக் கொண்டும், தீனி விருப்பமாகத் தின்னுமலு மிருக்கும்.

மருந்து:—கோவையிலை, திப்பிலி, சீரகம், பூண்டு இவற்றை வகைக்கு 3-தோலா வீதம் அரைத்து, காலையில் வெந்நீரிலும், மாலையில் $\frac{1}{4}$-பாட்டில் சாராயத்திலும் கலக்கிக் கொடுத்து வர, குணமாகும்.

குணம்:—இடைவிடாது செருமிக் கொண்டும், சலம் மஞ்சள் நிறமாக விட்டுக் கொண்டும், கண்களிலிருந்து நீரோடியும், தீனியில் விருப்பமில்லாமலும் தூங்கி நிற்கும்.

மருந்து:—சுக்கு, திப்பிலி, சீரகம், மிளகு இவற்றை வகைக்கு 3-தோலா வீதம் அரைத்து, 2-முட்டை சேர்த்து, $\frac{1}{4}$-படி நெருஞ்சிச் சாற்றில் கலக்கி, காலையில் கொடுத்து வர, குணமாகும்.

குணம்:—கொள், புல் முதலிய தீனி தின்னாது. தண்ணீர் குடிக்கும் போதும், நெஞ்சிலே பொருக்க வேலை செய்யும் போதும் கம்மிக் கொண்டிருக்கும்.

மருந்து:—கோஷ்டம், மிளகு, பூண்டு இவற்றை வகைக்கு 2-தோலா வீதம் எடுத்து, மூங்கிலிலைச்சாறு 1—படியோடு சாராயம் விட்டரைத்து, கவளமாக்கி, மூன்று வேளையும் கொடுத்து, வென்னீர் காட்டி வர, சுகமாகும். தீனியுடன் மூங்கிலிலையைக் கலந்து கொடுத்துவர, குணமாகும்.

குணம்:—செருமிக் கொண்டும், விக்கலும் நெஞ்சடைப்பும் உண்டாகி நாசியிலிருந்தும் நீர் வடிந்தும் மூச்சு விட வாதைப்பட்டிக் கொண்டுமிருக்கும்.

மருந்து:—திப்பிலி, சீரகம் இவற்றை தூள் செய்து, தேனில் குழப்பி வைத்துக் கொண்டு, அடிக்கடி நாவில் தடவி வர, சுகமாகும்

அல்லது

சுக்கு, மிளகு, திப்பிலி, சீரகம் இவை வகைக்கு 3-தோலா வீதம் எடுத்து கருவேப்பிலே, அத்திக்காய் இவற்றையும் 4-தோலா வீதம் எடுத்துச் சேர்த்து அரைத்து, * சாராயத்தில் கலக்கி உள்ளிற்குக் கொடுக்க, குணமாகும்.

குணம்:—கழுத்தைச் சுற்றி வீங்கியும், மூச்சுவிடமுடியாமலும், தீனி தின்ன இயலாமலும், வாதைப்பட்டு மயிர் சிலிர்த்து சோம்பியும் நிற்கும்.

மருந்து:—மஞ்சள், வேப்பிலே, இலுப்பைக் கட்டி இவைகளைச் சிறுநீர் விட்டரைத்து, வீக்கத்தில் பூசி, கருஞ்சீரகம், கடுக்காய், இயங்கமிலே, எருக்கிலைப்பழுப்பு இவற்றை வகைக்கு 3-தோலா வீதம் அரைத்து, பச்சரிசிக் கஞ்சியில் கலந்து, காலே மாலே உள்ளுக்குக் கொடுத்து வர, குணமாகும்.

குணம்:—நெஞ்சு வீங்கியும், வாயிலிருந்து நீர் வடிந்தும், செருமிக் கொண்டும், சுவாசம் துர்நாற்ற முடையதாயும் இருக்கும்.

மருந்து:—ஊமத்த இலேச் சாற்றில் வேப்பெண்ணெயைக் கூட்டி, வேர்க்கொம்பு, சூடம் இவைகளைப் பொடி செய்து, கொதிக்க வைத்து, நெஞ்சு வீக்கத்தில் பூசி, உளுந்து, முந்திரிவற்றல், மிளகு, வேர்க்கொம்பு, வெந்தயம், சூடம், ஜாதிக்காய் இவற்றைக் க்த்திரிக்காய்ச் சாறு விட்டரைத்து, கவளமாக்கி, காலே மாலே கொடுத்து, வென்னீர் காட்டி வர, குணமாகும்.

குணம்:—நெஞ்சு கோழைப்பட்டு தும்மிக்கொண்டு நோய் (வி காரர்) இளைக்கிறுப் போல இளைத்துக் கொண்டும், மயிர் சிலிர்த்துக் கொண்டும், முட்டுத் தோய்வு பட்டு நாளடைவில் தீனியில் விருப்பமில்லாமலும் இருக்கும்.

மருந்து:—நொச்சியிலைச்சாறு, கும்மட்டிக்காய்ச்சாறு, சிறுநீர் இவைகளை $\frac{1}{4}$-படி வீதம் எடுத்து, அதில் 1-தோலா வீதம் சுக்கு, திப்பிலி, மிளகு, வசம்பு இவைகளைச் சூரணம் செய்து கலந்து, விடியற்காலையில் 3-மணியளவிற்குக் கொடுத்து வர, சுகமாகும். ஊமத்தயிலை ரசமும் வேப்பங் கொட்டையும் எரித்து அந்தப் புகையை நாசியில் பிடிக்கச் செய்யவும். குணமாகும்.

பச்சையரிசி, பயறு, கடலை, உளுந்து இவைகளை அவித்த தண்ணீர் மாத்திரம் கொடுத்து புல்லும் கொடுத்து வரவேண்டும். குளிர்படியாத வண்ணம் வேண்டியவைகளை யெல்லாம் செய்ய வேண்டும்.

## 3. செருமல் நோய்.

குணம்:—குப்பைமேனியிலை, வெள்ளைப்பூண்டு, வசம்பு, வென்னீர் இவற்றை வார்த்தரைத்து, மூக்கிலே நசியம் செய்யவும். தலையிலே புள்ளடியாக + + + இப்படி சூடு போடவும்.

## 4. நெஞ்சறளி.

குணம்:—எந்நேரமும் செருமும். மூக்கிலே நீர் வடியும்.

மருந்து:—நிலப்பனைப்பட்டைச் சாற்றைக் காய்ச்சி, மண்டையிலும், காது சந்துகளிலும் வேது பிடிக்கவும். கழுத்தில் இரண்டு புறமும் = = இப்படி சூடு போடவும்.

## 5. ஊற்றுக்கண்ணி.

குணம்:—செருமும். நெஞ்சடைக்கும். காலை சதைத்துக் கொள்ளும்.

இதற்கு மருந்து:—இல்லை. இடது புறம்



இப்படி சூடு போடவும்.

## 6. செருமல் நோய்.

மருந்து:—குப்பைமேனியிலை, வெள்ளைப்பூண்டு, வசம்பு இவற்றை வெந்நீரிலரைத்து, நசியம் பண்ணவும்.

தலையில்  இப்படி புள்ளடிச் சூடு போடவும்.

## 7. நெஞ்சாரல்.

குணம்:—எந்நேரமும் செருமும். தும்மும். மூக்கில் தண்ணீர் வடியும்.

மருந்து:—நெய்யையும் பனைமட்டைச் சாற்றையும் காய்ச்சி வேது பிடிக்கவும்.

கழுத்தில் இரண்டு புறமும் | | | | இப்படி சூடு போடவும்.

## 8. செருமல்.

மருந்து:—எருக்கிலை, அளிஞ்சியிலை, பேய்க்கும்மட்டியிலை, வேப்பிலை இவற்றை நன்றாய்த் துவைத்து, சாறு வாங்கி, வேப்பெண்ணெய் விட்டுக் கொதிக்க வைத்து, தலையிலிடவும். மாட்டு வியாதி சகலமும் தெரிக்கும்.

## 9. இரத்தக் கலசை எரிச்சல்: குறியும், சுகித்சையும்.

இந்த வியாதி நெஞ்சடைப்பான் சம்பந்தமாக உண்டாவதேயல்லாமல் மற்றபடி உண்டாவது மிகவும் அரிது.

குறிகள்:—மிகுந்த கவலையோடு மாடு சுற்று முற்றும் பார்க்கும். துர்ப்பலமாய்ப் பொறுத்துப் பொறுத்து நாடியடித்துக் கொள்ளும். தவடையில் நாடியடித்துக் கொள்வது தெரியாது. ஆனால் இரத்த கலசத்திற்கு மேலாக மார்பின் இடது பக்கத்திலே நாடி துடியாயும் பலமாயும் அடித்துக் கொள்ளும். அடி பரிஷ்காரமாய்த் தெரியும்.

சிகித்சை:—இதற்காக இரத்தக் கலசத்தின் செய்கையைக் குறைக்கும்படியான மருந்துகளைக்கொடுக்க, பின் கண்டிருக்கிற மருந்தை 4-மணி நேரத்திற் கொருதரம் கொடுக்கவும். கர்ப்பூரம் 2-திராம், $\frac{3}{16}$-ரூபாயெடை பொட்டிலுப்பு $2\frac{11}{16}$-திராம் எடை. மார்பின் இடது பக்கத்தில் கொப்பளிக்கத் தைலம் தடவவும்.

### 10. ஆடுகளுக்குப் படை: அட்டைப்பூச்சி.

தள.........நுரையீரலில் அட்டைப் பூச்சி பிடிப்பதனாலே இந்த வியாதி உண்டாகிறது. பள்ள நிலங்களிலும், சதுப்பு நிலங்களிலும் மேய்ப்பதனாலே ஆடுகளுக்கு இந்த நோய் காணுகிறது. சீராய்த் தண்ணீர் ஓடாத நிலங்களிலே மேய்கிற ஆடுகளுக்கு இப்படை உண்டாகிறது.

குறிகள்:—இது திருட்டு வியாதி. உள்ளேயே பதுங்கி யிருக்கும். நாளுக்கு நாள் ஆடு இளைத்துப்போகும். இடுப்பிலும் சப்பைகளிலும் கையால் அழுத்தினால் தோலுக்குள் 'கிறு கிறு' வென்கிற சத்தம் தட்டுப் படும். முதலிலே தோல் வட்டமாய் மிகவும் வெளுத்துப் போகும். மயிர் தளர்ந்து பிடித்திழுத்தால் சுலபமாய் வந்து விடும். கொஞ்ச காலத்திற்குப் பின்பு, தோல் நிறம்மாறி வட்டை வட்டையாய் மங்கலான மஞ்சள் நிறம் வெளிப்படும். தாடையின் கீழ் வீக்கங்காணும். பின்பு முதுகு வீங்கும். கண்கள் பள பளப்பு வாங்கிப் போகும். வெள்ளை விழி மஞ்சள் நிறமாகும். முதுகு கொஞ்சம் வளைந்து, வயிறு பருத்துப்போகும். ஆட்டுக்குத் தாகம் அதிகரிக்கும். சாதாரணமாய்த் தீனி அதிகமாய்த் தின்னும். தின்னும் போது ஆத்திரமாய் அடித்துக் கொள்ளும். அடிக்கடி இருமும். சில வேளைகளில் நுரையீரலிலே அட்டைப் பூச்சியல்லாமல் ஒருவித திமிர்ப் பூச்சி பிடிப்பதனால் இருமல் காணுகிறதுண்டு. சீக்கிரத்திலாவது பொறுத்தாவது பேதி கண்டு நாளுக்கு நாள் அதிகப்படும். ஆடு வரவர பலஹீனப்பட்டு மலிந்து செத்துப் போம்.

வைத்தியம்:—ஆட்டு மந்தையில் இந்த வியாதி காணும்போது முதலிலே செய்யவேண்டிய தென்னவென்றால், தண்ணீர் நிற்காமல் ஓடிப்

போய் மதாளித்துக் கவிச்சு நாற்றமடிக்கிற புல்லாவது சேற்றுப் புல்லாவது வளராத மேட்டு நிலங்களுக்கு ஆடுகளை ஓட்டிக் கொண்டுபோய் வைக்கவேண்டும். இந்தப் பிணி கண்ட ஆட்டை, தரை உலர்ந்து மேலே கூரை மூடி யிருக்கிற இடத்தில் வைக்க வேண்டும். பின்பு, சோற்றுப்பு $1\frac{1}{2}$-திராம் அரை ரூபாயெடை, தூள் செய்த அன்னபேதி 1-ஸ்குரு பில் $\frac{1}{8}$-ரூபாயெடை இவற்றைக் கலந்து பொடிசெய்து ஒரு நாளைக்கு ஒரு தரமாவது இரண்டு தரமாவது உள்ளுக்குப் போடவேண்டும். ஆகாரம் உடலை வளர்க்கத் தக்கதாய், உலர்ந்து, தித்திப்புள்ள பண்டமா யிருக்கவேண்டும்.

ஆகையால் மேட்டு நிலத்தில் வளர்ந்ததாகிய உலர்ந்தப் புல், தானியம், பிண்ணாக்கு, அரிசிக்கஞ்சி இப்படிப்பட்டவைதான் தகுந்தது. அதோடுகூட கொஞ்சம் உப்பும் சேர்க்கவேண்டும். இந்த வியாதியினாலே செத்துப்போன ஆட்டைச் சோதித்துப் பார்த்தால், கண்டச் சதைகள் கரைந்துபோயிருக்கும். தோல் மஞ்சள் நிறமாயிருக்கும். வயிற்றில் நீர் கொண்டிருக்கும். நுரையீரல் நொந்திருக்கும். பிச்சுப் பையிலும் சில வேளைகளில் நாலாவது தீனிப்பையிலும், முதல் படையிலும் அட்டைப் பூச்சிகள் இருக்கும். இரத்த நரம்புகளில் இரத்தம் வெகு சொற்பமா யிருக்கும். அந்த இரத்தமும் நீர்த்து வெளுத்து இருக்கும்.

குறிப்பு:—இந்த வியாதி காணுகிறதாகத் தெரிய வருகிற நிலங்களிலே தண்ணீர்ப் போக்கு உண்டாக்கி, சுண்ணாம்பு, சாம்பல், உப்பு இவைகளைப் போடவேண்டும்.

# VI. ஜனனேந்திரிய-மூத்திர சம்பந்தமான வியாதிகள்.

### 1. கன்று கொள்ளாத பசுவிற்கு.

பக்குவம்:—அண்டங் காகத்தின் கண்மணியும், பன்றி மோதின கிழங்கும் ஒருவருக்கும் தெறியாமல் கொண்டுவந்து, அரைத்து நசியம் செய்யவும். கன்று கொள்ளும்.

வேறுவிதம்:—பக்குவம்:—குன்றிமணியிலை, கருவேப்பிலை இவற்றை வென்னீர் விட்டரைத்து, புல்லில் தடவிக் கொடுக்கவும். கன்று கொள்ளும்.

வேறுவிதம்—பக்குவம்:—குன்றிமணியிலை, உத்தாமணியிலை மேனியிலை இவற்றை வகைக்கு $\frac{1}{2}$-படி சாறு வீதம் எடுத்து, மோர் * காடி இவற்றோடு கலந்து கொடுத்த பின்பு, மணத்தக்காளி, முள்ளி, வசம்பு இவற்றைச் சேர்த்து, அரைத்து, நசியம் செய்ய, கன்று கொள்ளும்.

### 2. கன்று இறந்துவிட்டால் வேறு கன்றுகொள்ள.

பக்குவம்:—சேவல் கூவுகின்ற நேரத்தில், பசுவைக் கொண்டுபோய் வண்ணான் துறைக்கல்லின் கீழ் இருக்கும் மண் எடுத்து, பசுவின்மேல் உறைத்து, தெளிந்து, குளிப்பாட்டி, கைவிலக்கமான பெண்ணின் முந்தானையால் பசுவின் வாயைத் துடைக்கவும். வேறு கன்று கொள்ளும்.

### 3. கன்னி கடேரி அளித்துப் பொலிய.

பக்குவம்:—பொன்னுவாரையிலையை காடியில் அரைத்து, பருத்தியிலைச் சாற்றில் கலந்து கொடுத்து, 10-நாழி வரையில் தண்ணீர் காட்டாமல் நிறுத்தவும். பொலிவுக்கு இணங்கும்.

### 4. காளைக்கு அடங்காத பசு.

பக்குவம்:—உப்பு, மஞ்சள், பேய்மிரட்டியிலை இவைகளை அரைத்து, தேங்காயளவு சேதமில்லாமல் கொடுத்து, 10-நாழிகை வரையில் தண்ணீர் காட்டாமல் நிறுத்தவும். காளைக்கு அடங்கும்.

### 5. பாலில்லாமை.

பக்குவம்:—மனிதர் தலையோட்டைப் பொன்னாங்கணிச் சாறு விட்டரைத்து, பச்சைப்புல்லில் வைத்துச் சுருட்டி, உள்ளுக்குக் கொடுக்கவும். விசேஷமாகப் பாலுண்டாகும்.

### 6 மலடு.

பக்குவம்:—பாதாளமூலி, கோரைக் கிழங்கு இவற்றை அரைத்து, $\frac{1}{4}$—படி உப்பில் கலந்து கொடுத்து, 10—நாழி வரை தண்ணீர் காட்டாமல் கட்டி வைக்கவும். மலடு நீங்கிச் சினைபிடிக்கும்.

### 7. கன்றுபோடாமை.

குணம்:—நாக்கு வாங்கும். முதுகு மினுமினுப்பாக இருக்கும்.

பக்குவம்:—கழற்பருப்பும், அப்பைக்கிழங்கும், தூதுவளைவேரும், சமஎடை எடுத்து அரைத்து, கோமயத்தில் குழம்பிக் கொடுக்க, கன்று ஈன்று சுகமாகும்.

### 8. பால் கறக்காமை.

பக்குவம்:—சித்திரை நக்ஷத்திரத்தில் வாகைமேல் புல்லுருவிக் கொண்டு வந்து, ஆவின் பால் விட்டரைத்துப் புகட்டவும். பால் அதிகமுண்டாகும்.

### 9. நஞ்சு நிறுணி.

குணம்:—அடிக்கடி நீர் விடும்.

பக்குவம்:—மோரையும் கற்றாழைச்சாற்றையும் கலந்து கொடுக்க, குணமாகும்.

### 10. கர்ப்பச் சிலந்தி.

குணம்;—நற்றிரையே பற்றி நிற்கும். கடைவாயில் நீர் ஓடிக்கொண்டிருக்கும். கண் சிவந்திருக்கும்.

பக்குவம்:—3-ஆழாக்கு எள்ளை மோருடன் கலந்து 3-நாள் கொடுக்கவும்.

### 11—15. கருப்பை, சலப்பை, முதலியவைகளாலுண்டாகும் ரோகங்கள்.

குணம்:—குதிரை, மாடு இவைகளின் ஜலதாரை வழியாக இரத்தம் வெளிப்படும். அந்த இரத்தம் மற்ற அவயங்களிலிருந்து வரும். இரத்தம் போல கெ(தி)ட்டியாய் உறையாததாயும் காணப்படும்.

மருந்து:—பரங்கிப்பட்டை, குங்குலியம், மதுரம், கோஷ்டம், தேவதாரம், செங்கழுநீர்த்தண்டு, துளசியிலை, அகத்தியிலை இவற்றை வகைக்கு 3-தோலா வீதம் முட்டைக்கரு விட்டரைத்து, நல்லெண்ணெயில் கொடுத்து வர, குணமாகும்.

குணம்:—ஜலதாரை வழியாகச் சளியும் சீழும் கலந்த ஒருவித நீர்க்கசியும் உடம்பு மெலிந்தும் பொரு(ந்)த்துகளில் வீக்கமும் காணும்

மருந்து:—இலுப்பையிலை, சந்தனம், விலாமிச்சவேர், தாழைவிழுது, வெள்ளருகு, மதுரம் இவைற்றை 4-தோலா வீதம் பாலில் அரைத்து உள்ளுக்குக் கொடுக்க, குணமாகும்.

குணம்:—ஜலதாரை வழியாகக் கழியும். சீழும், சளியும் இரத்த நிறமுமுள்ளதாக இருக்கும்.

மருந்து:—பரங்கிப்பட்டை, வெள்ளைக் குங்குலியம், சர்க்கரை இவற்றை 6-தோலா வீத மரைத்து, ஓரிதழ் தாமரைச் சாற்றில் கலந்து கொடுக்க, குணமாகும்.

வேறுமருந்து:—மாந்துளிர், மாதுளம்பிஞ்சு, ஆலம்விழுது, மாம்பருப்பு, வெடியுப்பு இவைற்றை 3-தோலா வீதம் பசுவின்பாலில் கலக்கிக் கொடுக்க, குணமாகும்.

குணம்:—அடிக்கடி நீர் விட்டுக் கொண்டும் தீனியில் விருப்பமில்லாமலும் இருக்கும்.

மருந்து:—செங்கழுநீர்த்தண்டு, நெல்லிக்காய், எலுமிச்சவேர், தோடங்காய்த்தோல் இவற்றை 8-தோலா வீதம் அரைத்து வென்னீரில் கலந்து கொடுக்க, குணமாகும்.

குணம்:—நீரடைத்து, வாதைப்பட்டு, ஜலதாரை வீங்கி இருக்கும்.

மருந்து:—வெடியுப்பு, நவிவெங்காயம், எலுமிச்சம்பழக்கோது, பனைவெல்லம் இவற்றை 6-தோலா வீதம் பால்விட்டரைத்து, செவ்விளநீரில் கலக்கிக் கொடுக்க, குணமாகும்.

## ஷை வீக்கத்திற்கு.

மருந்து:—மூங்கிலிலை, ஆடாதோடைஇலை இவற்றின் சாற்றில், காயம் போட்டு, காய்ச்சிப் பூசிவர, குணமாகும்.

### 16. குதிரை, மாடு இவை ஈனுவதற்கு விஸ்லங்கப்பட்டு வாதைப்படுதல்.

மருந்து:—வெங்காரம், கருவேற்பட்டை, லவங்கப்பட்டை, வேப்பிலை இவற்றை 8-தோலா வீதம் சேர்த்து அரைத்து வென்னீரில் கலக்கிக் கொடுக்க, குணமாகும்.

வேறுவிதம்:—மருந்து:—பிரண்டைவேரும், குறிஞ்சான்வேரும், சம எடை எடுத்து, வென்னீர் விட்டரைத்து, வயிற்றில் பூசினாலும் சுகமாகக் கன்று ஈனும்.

### 17. கன்று வயிற்றில் இறந்து போதல்.

மருந்து:—காயம் 4-தோலா, 8-தோலா இந்துப்பு, 8-தோலா வெங்காரம் இவற்றை வென்னீரில் கலக்கிக் கொடுக்க, லகுவாக ஈனும்.

வேறுவிதம் மருந்து:—நிலக்குமிழ்ப்பட்டை உத்தாமணிவேர் இவற்றை 4-தோலாவீதம் சேர்த்தரைத்துக் கொடுக்கவும். கன்று வெளியே விழும்.

### 18. ஈன்றபின் இளங்கொடி போடாமல் இருந்தால்.

மருந்து:—மூங்கிலிலை, முருங்கையிலை, வேப்பிலை, எள்ளிலை, கடுக்காய், பனைவெல்லம் இவற்றை 4-தோலா வீதம் சேர்த்தரைத்து வென்னீரில் கலக்கிக் கொடுக்க, கொடிபோட்டு, குணமாகும்.

### 19. குதிரை, மாடு இவற்றின் கன்றுகள் இறந்துபோனால் பால் வற்றவைக்க.

மருந்து:—துவரம்பருப்பை, வெற்றிலைச் சாற்றிலரைத்துக் கொதிக்க வைத்து முலையில் பூசிவர, பால் வற்றிப்போம்.

### 20. பால் அதிகமாகச் சுரக்கவேண்டியிருந்தால்.

மருந்து:—சிற்றாமணக்கிலையை வெண்ணெயில் சேர்த்தரைத்து முலையில் பூசிவர, பால் சுரக்கும்.

வேறுவிதம்:— மருந்து:—உள்ளுக்குப் பேயத்திக்காய்* 3-தோலா, மனிதர் மண்டையோடு இவற்றைப் பொன்னாங்காணிச்சாற்றில் அரைத்து, புல்லில் வைத்துக் கொடுத்து வர, அதிகப்பால் சுரக்கும்.

### 21. ஆண் குதிரை, காளை இவைகளைப் பெண் குதிரை, பெண் மாடு மேல் இச்சைப்படச் செய்தல்.

மருந்து:—முந்திரி வற்றல், கோஷ்டம், மிளகு, மஞ்சள், கசூர்க்காய், குக்கில், வெல்லம் இவற்றை வகைக்கு 4-தோலா, காயம் $\frac{1}{2}$-தோலா இவை

களை முட்டை விட்டரைத்து, கவளமாக்கி, காலை மாலை கொடுத்து வர, இச்சை யுண்டாகும்.

## 22. பெண் குதிரை, * மாடு இவற்றை ஆண் குதிரை, ஆண் மாடு இவற்றில் இச்சைப்படச் செய்தல்.

மருந்து:—மஞ்சள், கடுகுரோகிணி, கருவேற்ப்பட்டை, எள் இவற்றை வகைக்கு 5-தோலாகாயம், $\frac{1}{2}$-தோலா இவற்றை அரைத்து, கத்திரிக்காய்க்குள் வைத்து, அளவாக வதக்கி, கத்தரிக்காயுடன் காலை மாலை உள்ளுக்குக் கொடுக்க, இச்சையுண்டாகி, ஆண் மேலிச்சையேற்படும்.

## 23. அதிக மெலிந்தும், இந்திரியத்தை அதிகமாகக் கழிந்தும் வருவதாகக் காணப்பட்டால்.

மருந்து:—வாழைக்கிழங்கு, எலுமிச்சங் கொட்டை, கத்தரிக்காம்பு, 6-தோலா வெள்ளெருக்கன்பூ 1-தோலா இவைகளை யரைத்து, ஆவின் பாலில் கலக்கி, தினம் ஒருவேளை வீதம் கொடுத்து வர, குணமாகும்.

## 24. நீர் கொதித்துக் கொண்டும், சொட்டுச் சொட்டாக விட்டுக் கொண்டும், கல்லடைப்பு, எரிவு, கடுப்பு முதலிய குணங்கள் கண்டால்.

மருந்து:—நெருஞ்சிச் சாற்றில், விளாம் பிசின், ஓமம், கல்கண்டு, மாதுளம் பிஞ்சு இவற்றை வகைக்கு 6-தோலா வீதம் அரைத்துக் கொடுக்க குணம்.

## 25. நீர் தடிப்பாயும், மாவு கரைத்தது போலவும் உடம்பு கொதிப்பேற்பட்டு இருந்தால்.

மருந்து:—எலுமிச்சம்பழத்தோல், திராட்சையுப்பு, சர்க்கரை, ஓமம் இவற்றை 8-தோலா வீதம் அரைத்து, வெந்நீரில் கலந்து, கொடுக்க, குணமாகும்.

பத்தியம்:—வயிற்றில் புளிப்பு ஏற்படாத விதம் தீனிகொடுத்தும், சாணி செவ்வையாகப் போடாம லிருந்தால் கொள் கடலை முதலியவற்றைக் குறைத்துக் கொடுக்க, வேண்டியது.

## 26. அண்ட ரோகங்கள்.

குணம்:—குதிரை மாடு இவற்றின் ஒருபக்கத்து அண்டம் வீங்கியும் அடிக்கடி நிலத்தில் புரண்டும், விலாவை இழுத்துக்கொண்டும் உபத்திரவப் படும்.

மருந்து:—கொடுவேலி மூலம், கடுகுரோகிணி, காயம், பரங்கிப்பட்டை, அசமோதகம் இவற்றை 3-தோலா வீதம் மேனியிலைச் சாற்றில்லரைத்து, கவளமாக்கி, காலை மாலை கொடுத்த வர, குணமாகும். வீக்கதின் மேல் மேற்படி சாற்றைக் கொதிக்கவைத்துப் பூசவும்.

27. அண்டம் இரண்டும் வீங்கியும் நிற்கமுடியாமலும் அதிக வாதைப்பட்டு உபத்திரவப்பட்டால்.

மருந்து:--அத்திப்பட்டை, முருங்கைப்பட்டை, ஆமணக்குப்பட்டை, மிளகு, வசம்பு, இதற்றை 3-தோலா வீத மரைத்து, கவளமாக்கி, காலையில் உள்ளுக்குக் கொடுத்து வெந்நீர் காட்டியும், விளக்கெண்ணெயில் காயம், தக்காளியிலைச்சாறு, மஞ்சள் இவைகளை அரைத்துக் கொதிக்க வைத்து அண்டத்தில் பூசி வர, குணமாகும்.

28. அண்டத்தில் நீரிறங்கிப் பருத்து நடக்க முடியாமலிருந்ததால்.

மருந்து:—ஆமணக்கின் தளிரைப் புகையிலையுடன் சேர்த்து அவித்து, ஒத்தடமிட்டு இவைகளுடன் காவிக் கல்லையும் சேர்த்து, வெந்நீர் விட்டரைத்து, அண்டத்தில் பூச, குணமாகும்.

29. விதையை மேலுக் கிழுத்துக்கொண்டு அதிக வாதையுடன் நிற்காமல் வருத்தப்பட்டால்.

மருந்து:—கொற்றான் சாறு, விளக்கெண்ணெய் இவற்றை வகைக்கு 1-படி எடுத்து, அதில் இந்துப்பு, தேவதாரம், கழற்சிப் பருப்பு, காயம், திப்பிலி, கடுகுரோகிணி, சதகுப்பை, சித்தரத்தை, சிவதைவேர் இவற்றை வைத்துக்கொண்டு, காலை மாலைகளில் 8%-வீதம் உள்ளுக்குக் கொடுத்துவர, குணமாகும்.

30. அண்டத்தில் குடலிறங்கி நிற்கமுடியாமலும் நடக்கமுடியாமலும் உபத்திரவப்பட்டால்.

மருந்து:—மஞ்சள், குக்கில், மிளகு, கருஞ்சீரகம், வெங்காரம் இவைகளை வகைக்கு 4-தோலா வீதம் அரைத்து, கவளமாக்கி, காலை மாலை கொடுத்துவர, குணமாம்.

31. மலடு.

மருந்து —பாதாளமூலிகையைம், உப்பையும் கூட்டிப்போடவும். 10-நாழிகை வரையில் தண்ணீர் காட்டாமலிருக்கவும். பிறகு, தண்ணீர் காட்டவும். இதற்குச் சூடு இல்லை.

32. மாடு பால் சுரக்க.

மருந்து:—சித்திரை நக்ஷத்திரத்தில், வாகைமேல் புல்லுருவிக்கொண்டு வந்து, பசுவின் பாலில் அரைத்து, ஊற்றவும். இதற்குச் சூடு இல்லை,

### 33. பாலில்லாமை.

மருந்து:—மனிதர் தலையோட்டைப் பொன்னாங்காணிச் சாற்றை விட்டறைத்து, புல்லிலே தடவிக் கொடுக்கவும். சூடு இல்லை.

### 34. மலடு.

மருந்து:—பாதாளமுள்ளி, ஆடுதீண்டாப்பாளை, கோரைக்கிழங்கு இவற்றை அரைத்து, உப்பு $\frac{1}{4}$-படி கூட்டி, உள்ளுக்குப் போடவும். 10-நாழி வரை தண்ணீர் குடிக்காமல் கட்டவும். இதற்குச் சூடு இல்லை.

### 35. அடிக்கடி நீர் விடுமாகில் நஞ்சு நீராழி யென்று பெயர்.

பக்குவம்:—மோரையுங் கற்றாழைச் சாறையும், கள்ளிச் சாற்றையுங் கலந்து கொடுக்க, சொஸ்தமாகும்.

### 36. பசுவிற்குப் பால்.

பக்குவம்:—பேயத்திக்காயை இடித்து, புல்லுடன் தின்னக்கொடுக்க, முலை சுரக்கும்.

### 37. கன்று கொள்ளாத மாடு.

மருந்து:—கற்றாழைவேரை யரைத்துக் கண்ணிலிடவும். நாசியிலுங் காதிலும் பிழிந்து நசியமிட்டு வீட்டிலே கட்டி, செத்தையும் புல்லும் போடவும்.

### 38. கன்று கொள்ளாத மாடு.

மருந்து:—மின்மினிப் புழுவைப் புல்லினுள் வைத்து உள்ளுக்குக் கொடுக்க, கன்றுகொள்ளும்.



# V. நரம்பு சம்பந்தமான வியாதிகள்.

### 1. குதிரைக்குண்டாகும் வலிப்பு.

குணம்:—கால் நில்லாது, விழுந்து கிடக்கும். தள்ளாடி நாலு காலும் உத
றிக் கிடக்கும்.

பக்குவம்:—மருந்து கிடையாது. தலையில் ⊔ இந்த மாதிரி

யும் முதுகில் •—|—|—• இந்த மாதிரியும் சுடவும்.

2-மணி நேரத்தில் குணமாகும்.

### 2. சாண் நோய்.

குணம்:—சுற்றிச் சுற்றி வரும்.

பக்குவம்:—தவசு முருங்கை, காட்டாணைவேர் இவற்றை அரைத்து சி
நீரில் கலந்து கொடுக்க, குணமாகும்.

### 3. வலிப்பு நோய்.

குணம்:—நாலு காலும் வீங்கும்.

பக்குவம்:—வழுதியிலைச் சாற்றையும் மோரையும் கலந்து கொடுத்து,

O——O இந்த மாதிரி சுட குணமாகும்.

### 4. வலிப்பு.

குணம்:—கழுத்துக் கோணி வலிக்கும். கன்னங்கள் பிதுங்கும்.

பக்குவம்:—மேனி, பெய்த்தும்பை இவற்றைத் தனித்தனியே சாறு பிழிந்து

நசியம் பண்ணவும். பின் முதுகைக் கட்டி ═══ இந்த
மாதிரி சுடவும். குணமாகும்.

## 5. நரம்புத் தசை, வலிப்பு முதலிய ரோகங்கள்.

குதிரை, மாடு இவை, சடுதியாகக் கீழே விழுந்து நாலு காலை யும் இழுத்துக் கொண்டு உடம்பை வில்போல் வளைத்துக் கிடந்து வலிக்கும்.

மருந்து:—கடுகு, கடுகுரோகிணி, திப்பிலி, மிளகு, ஓமம், கர்ப்பூரவல்லி, மஞ்சள், சுக்கு, காயம் இவற்றை வகைக்கு 3-தோலா வீதம் அரைத்து, சாராயத்தில் கலக்கிக் கொடுக்க, குணமாகும்.

6. குணம்:—சீக்கிரமாகக் கால்கள் நடுக்கம் கொண்டும் பதறிக் கீழே விழுந்து நாக்கைச் சுருட்டி உள்ளுக்கு இழுத்து, கால் உதறி அடித்துக்கொள்ளும்.

மருந்து:—கடுக்காய், காயம், கருஞ்சீரகம், கரியபவிளம், கோஷ்டம், வாயு விளங்கம் இவற்றை வகைக்கு 2–தோலா வீதம் $\frac{1}{4}$-படி விளக் கெண்ணெயில் கலந்து கொத்து வா, குணமாகும்.

வேறுவித மருந்து:—முடிதும்பையிலை, இயங்கமிலை, ஆவாரம் வேர்ப்பட்டை, கர்ப்பூரவல்லி இவை 4–தோலா வீதமும் காயம், கரியபவிளம், கருஞ்சீரகம் 2தோலா வீதம் ஒன்றாகக் கூட்டி, அரைத்து, வென் னீரில் கலக்கிக் கொடுத்து வா, குணமாகும்.

7. குணம்:—உடம்பைத் திருகி முறுக்கிக்கொண்டு கீழே விழுந்து கண்கள் புரண்டு சிவந்து வயிறு ஊதி, சாணிபோடாமல் வாதைப்பட்டால்:-

மருந்து:—வரகு வைக்கோலினுல் வாட்டிப் பிழிந்த கொடிக்கள்ளிச்சாறு $\frac{1}{4}$-படி, நல்லெண்ணெய் $\frac{1}{8}$-படி இவைகளைச் சேர்த்துக் கொடுக்க, குணமாகும்.

வேறுவித மருந்து:—பிரண்டைக் கொழுந்து, பழம்புளி, உப்பு இவைகளை வென்னீர் * சாராயத்தில் கலக்கிக் கொடுக்க, குணமாகும்.

8. குணம்:—காலை இழுத்துக்கொண்டு நடக்க முடியாமலும், படுத்தால் எழுந்திருக்க முடியாமலும் சிறுகச் சிறுக நீர் விட்டுக் கொண்டிருந் தால்:—

மருந்து:—வாதமுடக்கியிலை, ஊமத்தையிலை, பேய்க்கும்மட்டியிலை, இயங்க யிலை இவற்றை வென்னீர் விட்டரைத்து, கொதிக்க வைத்து, கால்களுக்குப் பூசி பிறகு, இயங்கப்வேர், தூதுவளைவேர், மிள கருணைவேர், உள்ளி, மதுரம், வால்மிளகு இவற்றை 4-தோலா வீதம் $\frac{1}{4}$-படி சிற்றாமணக் கெண்ணெயில் சேர்த்தரைத்து, கலக்கிக் கொடுத்து வா, குணமாகும்.

9. குணம்:—முதுகு பாரிசத்தை இழுத்துக்கொண்டு இடுப்பு முறிந்தாற் போல் நொண்டியும் நிற்க வாதைப்படும், பின்னங்கால்களை இழுத்துக் கொண்டும் நடந்தால்:—

மருந்து:—$\frac{1}{4}$-படி சிற்றாமணக்கெண்ணெயில் 1-தோலா வீதம் கடுக்காய், கருஞ்சீரகம், கடுகுரோகிணி இவற்றைக் கூட்டிக் கொடுத்து, விரேசனம் செய்து, ஊமத்தையிலை, நொச்சியிலை, தேங்காய்ப் பிண்ணாக்கு இவைகளை அவித்து ஒத்தடம் கொடுத்து, நொச்யிலைச்சாறு, ஊமத்தையிலைச்சாறு இவைகளில் காயம், இலுப்பைக்கட்டி, சூடம் இவற்றைப் போட்டு, கொதிக்கவைத்து, முதுகு பாரிசத்தில் பூசி வர வேண்டும்.

உள்ளுக்கு இரண்டு உடும்பை உரித்து, குடல்நீக்கி நெய்யில் அரைப் பக்குவமாக வதக்கி, அத்துடன் வெந்தயம், குக்கில், ஆளிவிரை, மஞ்சள், மதுரம், பூண்டு, வெங்காரம், உளுந்து, கடலை, பயறு இவற்றை வகைக்கு முன் இறைச்சி எடைக்குச் சமமாகச் சேர்த்தரைத்து வைத்துக்கொண்டு, வேளைக்கு ஒரு சிறு தோடாங்காயளவு கவளமாக்கி, காலை மாலை கொடுத்து வர, குணமாகும்.

10. குணம்:—சவாரியிலையிலிருந்து வந்தவுடன், கீழேவிழுந்து, கண்களைச் சொருகி, வாயால் நுரைதள்ளி, வலிப்புக் காணுமாகில்:—

மருந்து:—மிளகு, திப்பிலி, வேர்க்கொம்பு, தும்பையிலை இவை 6-தோலா, காயம் 1-தோலா இவைகளைச் சிறுநீர் விட்டரைத்து, சாராயத்தில் கலக்கிக் கொடுக்க, குணமாகும். இதற்கு, முன் சொன்னது போல் விரேசனம் செய்யவும். குணமாகும்.

பத்தியம்:—கொள், கடலை முதலியவைகளைக் குறைத்து, புல்லும் வெந்நீரும் காட்டி வரவும்.

## 11. குறை நோய்.

குணம்:—வலிப்புத் தோன்றும். கண் சிவந்திருக்கும்.

மருந்து:—விளா இலையைத் துவைத்து கோமயத்தில் கலக்கி ஊற்றவும்.

இரண்டு விலாவிலும்   இந்த மாதிரி சுடவும்.

## 12. அழல் வியாதி.

குணம்:—மாடு சுழன்று சுழன்று விழும்.

பக்குவம்:—பசுமஞ்சட்சாற்றையும் வசம்பையும், மூன்நாழிக் கஞ்சியுடன் கலந்து கொடுக்க, சொஸ்தமாகும்.

## 13. வலிப்பு நோய்.

குணம்:—நாலு காலும் வீங்கியிருக்கும்.

பக்குவம்:—வழுதாயிலைச் சாற்றையும், மோரையும் கலந்து கொடுத்து, வலிப்புச்சூடாகச் சுட சொஸ்தமாகும்.

## 14. பாரிச வாய்வு.

குணம்:—மாடு நடக்கும்போது கால் பாவாது. பலம்செத்து, பின்னங் கால்களை மடக்கி இருக்கும். கீழ விழுந்து விடுகிறதும் மறுபடி எழுந்திருப்பதும் கஷ்டமாயிருக்கும். தள்ளாடிக்கொண்டு நடப் பதுமாய்க் கடைசியில் வியாதி பலக்கும்போது எழுந்திருக்கவே மாட்டாது. மலஜலம் வெகுவாய் நின்று போகும். அல்லது தன்னிச்சையாய்ப் போய்க் கொண்டிருக்கும். நாடி அதிசமாய்ப் போகாது. பசியும் மிதமாயிருக்கும்.

## 15. பாரிச வாய்வு குறிகளும், சிகித்சையும்.

குணம்:—சுவாதீனமான அசைவு தப்பிப்போம். உடம்பில் பின் பக்கத் தில் மாத்திரம் காணுகிற பாரிச வாயுவுதான் சாதாரணமாய் மாடுகளுக்கு வருகிறது. அதிக பாரத்தினால் முதுகெலும்புக்குண் டாகிற ஊனத்தினாலே முக்கியமாய் இந்த வியாதி காணுகிறது. அதிகக் கஷ்டமாயிருக்கும்படியான வேலை வாங்குவதனாலும் அடிப்பதனாலும் மழைக்காலத்தில் குளிரினாலும் ஈரத்தில் இருப்பத னாலும் காணுவதுமுண்டு.

குணம்:—மாடு நடக்கும்போது கால் பாவாது. பலம்செத்தும், பின்னங் கால்களை மடக்கி மடக்கி இழுக்கும். கீழே விழுந்து விடுகிறதும் மறுபடி எழுந்திருப்பதில் கஷ்டமும் தள்ளாடிக் கொண்டும் நடப் பதுமாய், கடைசியில் வியாதி பலக்கும்போது எழுந்திருக்கவே மாட்டாது. மலஜலம் வெகுவாய் நின்றுபோகும். அல்லது, தன் னிச்சையாய்ப் போய்க்கொண்டிருக்கும். நாடி அதிகமாய் மாறிப் போகாது. பசியும் மிதமாயிருக்கும்.

சிகித்சை:—குணமாவது அதிக துர்ப்பலமாயிருக்கும். ஆயினும் சில சமயங்களில் குணமுண்டாவதைப் பற்றி மாட்டின் ஸ்திதியைப் பார்த்து சிகித்சை செய்யலாம் போலத்தோன்றினால் மலஜலம் நின்று போயிருப்பதைக் குணப்படுத்துவது முக்கியம். அதற்காக ஆசனத்தின் வழியாய்க் கையைநுழைத்து, ஆசனத்தைச் சேர்ந்த கடைசிக் குடலிலிருக்கும் சாணியை வெளியிலே எடுத்து, ஆசனத்தைச் சேர்ந்த மூத்திரப்பையை மெதுவாய் அழுத்தி, மூத்திரத்தை வெளிப்படுத்த வேண்டும். இப்படி 1—நாளைக்கு 2-தரஞ் செய்யவேண்டும். இதற்கு மத்தியிலே கைக்கு எட்டாத தூரத்திலிருக்கிற குடல்களிலுள்ள சாணியை வெளிப்படுத்துவதற்கு, பீசாங்குழலில் வென்னீர் வார்த்துக்கொண்டு, ஆசனத்தின் வழியாய் அடிப்பது மல்லாமல், $\frac{1}{2}$-பயிண்டு (ஆழாக்கு) சிற்றுமணக் கெண்ணெயும் உள்ளுக்கு வார்க்கவேண்டும். எட்டிக்கொட்டை, உப்பு, ஸடிகனியா, 2-கிரெயின் 1-குன்றிமணி $\frac{3}{16}$-எடை, சுக்கு 1-அவுன்ஸ் $2\frac{3}{16}$-ரூபாயெடை, கிரியாத்துக்குச்சு, நிலவேம்பு, 4-திராம் $1\frac{7}{8}$-ரூபாயெடை இவற்றைத் தினந்தோறும் உள்ளுக்குப் போடவேண்டும். எட்டிக்கொட்டையும், உப்பும் உடலில் தங்கிச் சேர்ந்து போமாதலால், அதை அதிகமாகக் கொடாமல் வெகு ஜாக்கிரதையாய் இருக்கவேண்டும். ஒரு வாரத்திற்குப்பின் அதை 4-கிரெயின் 2-குன்றிமணி போடலாம். அப்பால், ஒவ்வொரு வாரத்திற்கு ஒவ்வொரு கிரெயின் $\frac{1}{2}$-குன்றிமணி போடலாம். 2-மாதம் வரை அதிகமாகச் சேர்க்கலாம். அதனாலே தார்க்குணமுண்டானால் இதற்குச் சரியான முறிவு தெரியாதபடியினாலே, அதிலுண்டாகும் குறிக் குணங்களைத் தினந்தோறும் ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொண்டு வரவேண்டும்; அதனாலே உதிரலும், நடுக்கமும் கடைச் சதைகளிலே கவ்வுதலும் உண்டாகும். இதற்குமேல் வலிகண்டால், தலையின் மேல் குளிர்ந்தஜலம் வார்க்க வேண்டும். அப்போது அந்த மருந்தைச் சில நாளைக்கு நிறுத்தி வைத்து, பின்பு 2-கிரெயின் 1-குன்றிமணி யளவு மறுபடி ஆரம்பிக்க வேண்டும். அதனாலே ஒருதரம் பட்டது தெரியு மாகையால் மிகவும் கொஞ்சங் கொஞ்மாயும் ஜாக்கிரதையாயும் அதிகப்படுத்த வேண்டும். சுமார் 18-அங்குல நீளம் 12.அங்குல அகலம் இடுப்பிலே கொப்பளிக்கிற தைலம் தடவ வேண்டும். 2-மாதத்தில் குணமொன்று மில்லாவிட்டால், கைவிட்டுவிட வேண்டியதுதான். உப்புக்குப் பதில் எட்டிக் கொட்டையைப் போடலாம். அதைப் போடுவதாயிருந்தால், ஒருநாளைக்கு 3-தடவை $\frac{1}{2}$-திராம் $\frac{3}{8}$-ரூபாயெடை போட வாரம்பித்து, வாரத்திற் கொருதரம் ஒவ்வொரு ஸகுருப்பில் $\frac{1}{8}$-ரூபாயெடை அதிகமாய்ச் சேர்க்க வேண்டும்.

### 16. கபால சூலை: உட்குறியும், மருந்தும்.

குணம்:—இது தலையின்மேல் அடிபடுவதனுலாவது கொம்பு ஒடிந்துபோய் வதனுலாவது உண்டாகிற வியாதியே தவிர, மற்றப்படி பெரும்பாலும் உண்டாவதில்லை. கடும் வெயிலில் அளவுக்கு மிஞ்சி அதிக தூரம் ஓட்டுவதனுலேயே உண்டானுலும் உண்டாகலாம்.

குறிகள்:—முதலில் மாடு திம்மென்று உறக்கம் பிடித்திருக்கும். தலையைச் சாதாரணமாய் முன்னுக்கு கொண்டுவந்து ஏதன்மேலாவது படிய வைத்துக் கொள்ளும். நாடி உதட்டியாய்ப் பொருத்துப்பொருத்து அடித்துக்கொள்ளும். ஜவ்வுத் தோல்களிலே ரத்தங்கட்டி கொள்ளும்.

இரண்டாவது நிலைமையிலே, விகாரம் வந்து விடுகிறது. ஜலபய ரோகங் கண்டிருக்கிற மாடு, முன்னதாய் யோசித்துப் பாய்வது போலல்லாமல் இந்த வியாதி கண்டிருக்கிற மாடு அதிகப் பிரமம் கொண்டு, தனக்குத் தென்படுகிறது என்ன பொருளானுலும் பேதமில்லாமல் அதன்மேல் பாயும். கொம்புகளினுலும் முன்னங் கால்களினுலும் தரையைப் பிறிக் கொணடு, விடாமல் கத்தும்.

சிகித்சை:—இந்த வியாதியின் இரண்டாவது நிலைமையிலே, மாட்டின் கிட்ட வர எத்தனப்படுவது மிகவும் அபாயகரமாதலால், அதற்கு வைத்தியம் செய்வது வெகு அசாத்தியந்தான். குணமாகுமென்று நினைப்பதுங் கூடாமை. முதலிலேயே, மாட்டைப் பத்திரமாய்க் கட்டி வைத்திருந்தால், பேதியாவதற்குப் பலமான ஔஷதங் கொடுக்கலாம். கொடுக்க எத்தனப்படலாம். அதாவது நேர்வாளக் கொட்டை, 20-கிரெயின், $\frac{1}{8}$-ரூபாயெடை சிற்ருமணக் கெண்ணெய் $\frac{11}{16}$-பயிண்டு $\frac{3}{8}$-ஆழாக்கு.

### 17. கொடி ஜன்னி: குறியும், சிகித்சையும்.

குணம்:—கண்டச்சதைகள் மிகவும் உக்கிரமாகி ஸ்வாதீனமாய்க் கண்டச் சதைகளைப் பிகுவாய் வலிப்பதே, இந்த வியாதிக்குரிய குணம்.

குறிகள்:—சாதாரணமாய் முறைப்பாயிருப்பது மாத்திரம் முதலில் தெரியும். மறுநாள் இஃது அதிகமாகும். வழக்கமாய் 3-ஆம் நாள் உடம்பு முழுவதும் சதைகள் அதிக பிகுவாயிருக்கும். வால் தூக்கிக் கொண்டிருக்கும். வாய் மூடிக் கொள்ளும். சுத்தமாய்த்திறக்கக் கூடாதபடி பற்கள் சாதாரணமாய் கிட்டிக் கொள்ளும். மாடு கவலையாயிருப்பதைப் பார்க்க வருத்தமாயிருக்கும். எவராவது கிட்ட

வருகையில் அதிக வேஷ்டை, மூச்சு வேகமாய் வாங்கும். நாடி துடி துடிக்கும். மலபந்தம் உண்டாகும்.

சிகித்சை:—மருந்து கொடுப்பதற்குச் செய்யவேண்டிய மட்டில் தவிர மற்றப்படி பாட்டை அலட்டாமல் சும்மா விட்டிருப்பதே முக்கியம். த்தாராளமாய் மலத்தைப் போக்கும்படி செய்வதே முக்கியமான காரியம். நேர்வாளக் கொட்டை 25-கிரெயின் $\frac{1}{8}$-ரூபாய் 2-குன்றிமணி எடை, சிற்றாமணக்கெண்ணெய் $1\frac{1}{2}$-பயிண்டு 3-ஆழாக்குக் கலந்து வார்க்கவேண்டும். கண்டச்சதையின் உக்கிரத்தைத் தணிப்பதற்காக 4—மணி நேரத்திற் கொருதரம் போடவேண்டியதாவது, அபின் 1-திராம் $\frac{3}{8}$-ரூபாயெடை ஊமத்தம் விதை $\frac{1}{2}$-திராம் $\frac{3}{16}$-ரூபாயெடை, கஞ்சா 1-திராம், $\frac{7}{8}$-ரூபாயெடை பற்கள் கிட்டிக் கொண்டு மருந்து உள்ளுக்குப் போகாவிட்டால் பீய்ச்சாங்குழலால் வார்க்கிறமாதிரி வார்க்கவேண்டும். ஆட்டையுரித்த பச்சைத்தோலே மாட்டுக்கு இடுப்பின் மேல் உரித்த பக்கம் படியப் போர்த்திக் கட்டவேண்டும்.

## 18. மண்டையடைப்பான்: குணமும், குறியும், சிகித்சையும்.

குணம்:—மண்டை யோடுகளில் ரணமுண்டாகி அதனால் ஏதாவது மூளையை அழுத்துவதனாலே அறிவும் அசைவும் கெடுவதுதான் இந்த வியாதி.

குறிகள்:—இந்த வியாதி சடுதியில் உண்டாகும். அறிவும் பலமும் கெட்டு மாடு கீழே விழுந்து விடுகிறது. குறட்டையோடு பெருமூச்சு வாங்கும். கண் பிதுங்கிக் கண்மணி பெரிதாயிருக்கும். நாடி துடி துடிப்பாய் பொருத்துப் பொருத்து அடிக்கும். சாவு அதிக சீக்கிரம் வரும். சிகித்சை செய்வது வெகுவாய் வீண் மிஞ்சிப் போகாமல் சமயம் அனுகூலமாக இருந்தால், குளிர்ந்த ஜலத்தைத் தலையின் மேல் அடிக்கவேண்டும். பலமாய்ப் பேதியாகும்படி மூசாம்பரம் 10-திராம் $1\frac{1}{4}$-பலம் இஞ்சி 8-திராம் $\frac{7}{16}$-பலம் இவற்றை உழக்குத் தண்ணீரில் கரைத்து வார்க்கவும். கொம்புகளுக்குப்பின்னால் தலைக்குப் பின்புறத்தில் கொப்பளிக்கிற தைலங்கள் கட்டவேண்டும்.

# VI. கண் வியாதிகள்.

## 1. கண்ணில் பூவிழுதல்.

பக்குவம்:—அரைப்படி ஆவின்பாலில் ஆழாக்கு உப்பைப் போட்டு, சுண்டக் காய்ச்சி, மைபோலரைத்து, 10-நாளைக்குக் கண்ணில் போட்டு வரவும். பூ கரைந்துபோகும்.

வேறுவிதம்: பக்குவம்:—சுக்கையும், வெற்றிலையையும் சேர்த்து மென்று 5-நாள் கண்ணில் உமியவும். பூ கரையும்.

## 2. கொல்லி நோய்கண்ட மாடு.

குணம்:—கண்ணில் வீங்கும். எட்டி நிற்கும். நடக்காது.

பக்குவம்:—வீக்கத்தில் இந்த மாதிரி சூடு போடவும். பின்பு எருக்கன் வேர், சதுரக்கள்ளிவேர் இவைகளை வெதுப்பி, புற்றுமண் சேர்த்து, கலந்து, அரைத்து; நசியம் பண்ணவும். தீரும்.

## 3. நாறை நோய்.

குணம்:—இரண்டு கண்ணும் வீங்கும். மேயாது. நின்ற இடத்தில் விழுந்து கிடக்கும்.

பக்குவம்:—இலுப்பைக்கட்டி அரைத்து, காடியில் கலந்து, ஒரு எலுமிச்சம் பழத்தை அதில் பிழிந்து கொடுக்கவும். கண்ணில் இந்த மாதிரி சூடு போடவும். குணம்.

## 4. கண்ணோய்.

குணம்:—கண்ணில் நீரோடும்.

பக்குவம்:—உப்பும் மோரும் கலந்து, உள்ளுக்குக் கொடுத்து, இரண்டு பக்கமும் இந்த மாதிரி சூடு போடவும். தீரும்.

### 5. செங்கணம்.

குணம்:—கண் சிவந்திருக்கும். நீர்விடும்போது நெளிக்கும்.

பக்குவம்:—புளிப்பாலையும், பருத்தியிலையையும் நீரில் போட்டுக் காய்ச்சி வேதுகட்டி மேலே பூசவும். வியாதி தீரும்.

### 6. கண் படலம் : மாலைக் கண்.

பக்குவம்:—கோவைச் சாற்றில், சுக்கு மிளகு இவற்றை யிழைத்துக் கலிக்கம் போட்டுவரவும். குணமாகும்.

### 7. பூப்பட்ட கண்.

பக்குவம்:—மஞ்சளை நன்ருகப் பொடி செய்து, தேங்காய் எண்ணெயில் குழப்பி, 3-நாள் கலிக்கம்போட, கண் வலி, கண் சிவப்பு, கண் புகைச்சல், நீரேற்றம், கண்ணில்பூ முதலிய கண் வியாதிகள் தீரும். (இது கைகண்ட முறை).

### 8. மாலைக் கண்.

பக்குவம்:—சிறு பிள்ளைகள் காஷ்டத்தைக் கம்பு சேர்த்துக் கண்ணில் ஆறு பொழுது போடவும் தீரும்.

### 9. பூப்பட்ட கண்.

பக்குவம்:—சாவல் செவத்த காஷ்டமும், தெள்ளின செங்கல் பொடியும் கலந்து 3-நாள் ஆறு பொழுது கண்ணில்போடவும். குணமாகும்.

### 10. கண்களிலுண்டாகும் வியாதிகள்.

குணம்:—கண்கள் அதிகமாகச் சிவந்து வெதும்பி நீரோடும்.

மருந்து:—புளியம் விதைத்தோல், கடுக்காய்த்தோல், நந்தியாவட்டப்பூ, தும்பைப்பூ, சீரகம் இவைகளை அரைத்து, பாலில் கலந்து தினம் 3-வேளை வீதம், 3-நாள் கண்களில் கலிக்கம் பிழிய, குணமாகும்.

### 11. கண்களில் துர்மாமிசம் வளர்தல்.

மருந்து:—சீனக்காரம், வெள்ளைச்சங்கு, வெள்ளைக்குன்றிமணிவேர் இவைகளை அரைத்து, எலுமிச்சம்பழச் சாற்றில் கலந்து, கண்களில் தீட்டவும். காலை மாலை பாலும் தண்ணீரும் சமஎடை கலந்து கண்களைக் கழுவி வர, குணமாகும்.

12. கண்கள் வீங்கி விழிக்கமாட்டாமல் நீரோடிக்கொண்டிருத்தல்.

மருந்து:—சீனுக்காரம், சிற்றாமணக்குவேர் இவற்றை அரைத்து, பாலில் கரைத்து கண்களில் கலிக்கமிட, குணமாகும்.

13. கண்களில் காசநீர் இறங்கி பார்வை மறைதல்.

மருந்து:—கடல் ஆமையின் ஓட்டை அவித்து, நிழலில் காயவைத்து, காமபாலினுரைத்து, கண்களில் தீட்டி வர, சுகமாகும். வெள்ளைப் பூண்டை கோமயத்தி லுரைத்து, காதுகளுக்கு மத்தியிலும் கண்களின் பின் பக்கத்திலும் பற்றுப்போட்டு வரவும். குணமாகும்.

14. பொழுதுபட்டால் கண் தெரியாமல் மாலைக்கண் ஏற்படுதல்.

மருந்து:—புளியம்பூ, நெருஞ்சிப்பூ, முருங்கைப்பூ, மிளகு, வெள்ளாட்டுப் பித்து இவைகளை அரைத்துக் கண்களில் போட்டு வர, சுகமாகும். உள்ளுக்கு முருங்கையிலையைக் கொடுத்து வர, குணமாகும்.

15. கண்களில் சிவப்புக்கொடி படர்ந்து பூ விழுதல்.

மருந்து:—சிறுகீரை, சுட்ட சாம்பல், மிளகு, புழுங்கலரிசி இவைகளை, பேய்க்கும்மட்டிச் சாற்றில் அரைத்து கண்களில் கலிக்கம் போட, குணமாகும்.

16. கண்களில் வெள்ளை படர்தல்.

மருந்து:—ஓமம், மதுரம், பால் துத்தம், வேர்க்கொம்பு, உப்பு இவைகளைத் தும்பையிலைச் சாற்றில் அரைத்து கண்களில் விட்டு வர, குணமாகும்.

17. கண்களைச் சுற்றிலும் சிறு பருக்கள் உண்டாதல்.

மருந்து:—அழிஞ்சிவேர்ப்பட்டை, நீர்க்கடம்புவேர்ப்பட்டை இவற்றை எலுமிச்சம் பழச்சாற்றை விட்டரைத்து, நிம்ப எண்ணெயில் கலந்து போட, குணமாகும்,

18. கண்களில் சவுக்கடி முதலியவைகளால் ரோகம் காணுதல்.

மருந்து:—கசகசா அவித்த தண்ணீரில் காத்தோட்டியிலை, சென்னயுருவியிலை, கடல்நுரை இவற்றை அரைத்துக் கலந்து கண்களில் விட்டு வர, குணமாகும்.

19. குணம்:—அசதி தூக்க மேலிட்டு அதிக மயக்க முண்டாகி, கிட்ட போகிறவர்களைச் சினக்கும். கண்கள் சிவந்திருக்கும்.

மருந்து:—வசம்பு, வேர்க்கொம்பு, மேனியிலை இவைகளைச் சிறுநீர் விட்டரைத்து, நாசியில் நசியமிட்டு, உள்ளுக்கு மாடுகளுக்கு 8-நெல்லெடையும், குதிரைகளுக்கு காதில் 12-நெல்லெடையும், சுத்தி செய்து, வளாம் சிற்றாமணக் கெண்ணெயில் கலந்து கொடுத்து, பேதிபண்ணிவிட, சுகமாகும். பேதி அதிகமானால் பசுவின்மோர் கொடுக்க, பேதி கட்டிப்போய்விடும்.

### 20. கண்ணிலே புண்.

மருந்து:—ஆழாக்கு உப்பை $\frac{1}{2}$-படி பசுவின்பாலிலே போட்டுக் காய்ச்சிச் சுண்ட வைத்து இறக்கி, மைபோலே அரைத்து, 10-நாள் கண்ணிலே போடவும். சூடு இல்லை.

### 21. கண்ணிற் குழிவிழுதல்.

பக்குவம்:—சுக்கையும், வெற்றிலையையும் மென்று 5-நாள் கண்ணிலுமிழ சொஸ்தமாகும்.

### 22. குவித்தறுத்தல்.

பக்குவம்:—இலைக்கள்ளியைச் சுட்டுப் பிழிந்தசாறும், பிஞ்சிகோவைச் சாறும் நல்லெண்ணெயும் கலந்து கண்ணிலிட, சொஸ்தமாகும்.

### 23. பாய்தல்.

பக்குவம்:—மூன்று நாளைக்கு மேற்கூறிய மருந்தை கண்ணில் விடப்பாயாது.

### 24. நொச்சைக்கண்ணி.

குணம்:—தண்ணீர் குடியாமலும் மேயாமலு மிருந்து, வாய் துர்க்கந்தமாயும் நீரோடிக்கொண்டிருக்கும்.

பக்குவம்:—கள்ளி முக்காணியாக இட்டுப்பக்கத்தில் சுட்டு உரித்தண்ணீரில் நுணாயிலையும் போட்டுக் காய்ச்சிக் கொடுத்து, தணணீர் காட்டாமற் கட்டி வைத்து, அந்தரத் தாமரை, நாவற்காய் இரண்டையும் பொடி செய்து மோரிலாவது நீர்சோற்றுத் தண்ணீரிலாவது கொடுக்க, சொஸ்தமாகும்.

## 25. கண்ணோய்.

குணம்:—கண்ணில் நீரோடும்.

பக்குவம்:—உப்பும் மோரும் கலந்து உள்ளுக்குக் கொடுத்து இரண்டு பக்க முஞ் சூலம்போலிரட்டைச் சூடாகவும், குழிச் சூடாகவும் சுட, சொஸ்தமாகும்.

## 26. மாலைக்கண்.

மருந்து:—சிறுபிள்ளைகள் கஷ்டத்தைக் கம்பு கோத்துக் கண்ணிலே ஆறு பொழுது போட, தீரும்

## 27. பூப்பட்ட கண்.

மருந்து:—சாவல் செவத்த கஷ்டமும், தெள்ளிய செங்கல்பொடியும் கலந்து 3-நாள் ஆறு பொழுது போட, குணமாகும்.

வேறுவிதம்: மருந்து:—மஞ்சளை நன்றாகப் பொடிசெய்து, தேங்காய் நெய்யில் குழப்பி 3-நாள் போட, கண்வலி, சிவப்புப்புகைச்சல், நீரோட்டம், கண்ணிலே பூ இத்தகைய மாட்டுக் கண் வியாதி தீரும். கை கண்ட மருந்து.

## 28. கண்நோய்: இரத்தக் கலச, எரிச்சல்.

குணம்:—தீங்கினாலாவது, உடலோடொத்த காரணத்தினாலாவது கண் பொங்குவது. மிகுந்த கவலையோடு மாடு சுற்று முற்றும் பார்க்கும். துர்ப்பலமாய்ப் பொறுத்துப் பொறுத்து அடித்து அடித்துக் கொள்ளும். தவடையில் நாடி அடித்துக் கொள்வது தெரியாது. ஆனால் இரத்த கலசத்திற்குமேலாக மார்பின் இடது பக்சத்திலே நாடி துடியாயும் பலமாயும் அடித்துக் கொள்ளும். பரிஷ்காரமாய்த் தெரியாது.

## 29. நாய்த்தலை மாடு.

பககுவம்:—விளாயிலை, வாட்சட்டியிலை, உள்ளி, வசம்பு இந்நான்கையும் மொன்றாய்ச் சேர்த்தரைத்துக் கையிற் றடவிக் கொண்டு அதன் மேற் பிடிக்க உள்ளடங்கிப்போம் அல்லாமலும் நீர் வாரியைச் சுற்றி இரட்டைச் சூடாய்ச் சுட, சொஸ்தமாகும்.

# VII. காது வியாதிகள்.

### 1. காதுரோகம்.

குணம்:—குதிரை மாடு இவைகளின் காதுகளிலிருந்தும் நீரோடிக் கொண்டிருக்கும்.

மருந்து:—முயல் புழுக்கை, வெள்ளாட்டின் புழுக்கை இவைகளை நன்றாக அரைத்து, சாராயத்தில் கலந்து காதிலிட்டு வர, குணமாகும்.

### 2. காதில் கட்டியுண்டாகி, காதைச் சுற்றி வீக்கம்.

மருந்து:—துத்தம், துரிசு, கல்நார், சூடம் இவைகளைத் தேங்காயெண்ணெயில் பொடி செய்து போட்டு, கொதிக்க வைத்து, காதில் விட்டு வர, குணமாகும்.

### 3. காதுச் சீழ்.

மருந்து:—வசம்பு, பூண்டு, காயம், வில்வம்பழ சதை இவைகளை அரைத்து, நிம்ப எண்ணெயில் போட்டு, காய்ச்சி, காதில் விட்டு வர, குணமாகும்.

### 4 .செவிடு.

மருந்து:—முட்டை, மஞ்சட்கரு, முசுகுமுட்டை, வெங்காயம், வசம்பு, குதிரை லத்தி, சாம்பல் இவைகளை அரைத்து, வேப்பஎண்ணெயில் கலக்கி, கொதிக்கவைத்து, காதிலிட்டு வர, குணமாகும்.

### 5. காதில் புழு.

மருந்து:—முருங்கையிலைச்சாறு, கர்ப்பூரம், இவற்றை நல்லெண்ணெயில் கலந்து, காய்ச்சி, காதில் விட்டு வர, குணமாகும்.

பத்தியம்:—கொள் முதலிய தீனிகளைக் குறைத்து, வெந்நீரும் புல்லும் கொடுத்து வரவும்.

# VIII. சரும வியாதிகள்.

## 1. மாட்டிற்கு உண்ணி பிடித்தல்.

பக்குவம்:—தாமரையிலையை இடித்து, சாறு பிழிந்து, அதில் யானைக் கோமயத்தைக் கலந்து, மாட்டின் மேலே தெளிக்கவும். உண்ணிகளெல்லாம் உதிர்ந்து போகும்.

## 2. சிரங்கு, சொறி, தேமல், பறங்கி முதலிய தோல் ரோகங்கள்.

குணம்:—குதிரை, மாடு இவைகளின் உடம்பெல்லாம் கொப்புளங்களுண்டாகி, நீர் வடிந்து கொண்டும், நீர், சாணம் அதிகச் சூடுள்ளதாயும், நிற்குமிடம் சுட்டுக் கொண்டும், தீனிதின்னாமலும், தூங்கியும் நிற்கும்.

மருந்து:—நிம்பஇலை, மஞ்சள், ஆவாரம்பூ, சீரகம், வெங்காயம் இவை வகைக்கு 6-தோலா வீதம், காலையில் சிற்றாமணக்கெண்ணெயிலும் * மோர் இவைகளிலும், மாலையில் வென்னீரிலும் சேர்த்தரைத்துக் கொடுத்துவர, சுகமாகும். முருங்கையிலை, வேப்பிலை, மஞ்சள், பூவரசம்பழுப்பு இவைகளைச் சேர்த்தரைத்து, கொப்புளங்களுக்குத் தடவிவர, குணமாகும்.

## 3. வட்டச்சிரங்கு.

குணம்:—தேகமெல்லாம் வட்டவட்டமாகச் சிரங்குகளுண்டாகி இவைகளிலிருந்து நீர் வடிந்து இரத்தம் பாயும்.

மருந்து:—எருக்கஇலை, வாழையிலை, நந்தியாவட்டை இலை இவைகளைச் சுட்ட சாம்பலை நிம்பஎண்ணெயில் கலந்து, சிரங்குகளுக்குப்போட்டு, உள்ளுக்கு வங்காள மஞ்சள், சீரகம், அசமோதகம், மதுரம், வெந்தயம், வெடியுப்பு இவற்றை வகைக்கு 2-தோலா வீதம் தூள் செய்து, வேப்பஎண்ணெயில் கலந்து கொடுத்து வர, குணமாகும்.

## 4. முள்.

குணம்:—தேகமெல்லாம் பலாக்காய் முள்போல் முள்கள் தோன்றியும், வாய் புண்ணாகியும், வாயிலிருந்து நீர் வடிந்து கொண்டுமிருக்கும்.

மருந்து:—சிற்றாமணக்கெண்ணெய், மஞ்சள், முருங்கையிலைச்சாறு இவைகளை 4-தோலா வீதம் மோரிலரைத்துக் கொடுத்து வர, குணமாகும்.

### 5. கொப்புளம்.

குணம்:—தேகமெல்லாம் சிறு கொப்புளங்களுண்டாகி, வெடித்து அயறு பிடித்து, மயிர் உதிர்ந்து போம்.

மருந்து:—வாழைச்சருகு, நந்தியாவட்டைச்சருகு இவைகளின் சாம்பல், சூடம், மிருதார்சிங்கு, ஆகாசத்தூள் இவைகளை நிம்பஎண்ணெ யில் கலந்து புண்களுக்குப்பூசி, உள்ளுக்கு அத்திப்பிஞ்சு, மதுரம், வேப்பிலை, வெங்காரம் மிளகு இவை 3-தோலா வீதம், பச்சரிசிக் கஞ்சியில் கலந்து கொடுத்துவர, தீரும். $\frac{1}{4}$-படி விளக்கெண்ணெ யைக் கொடுத்து விரேசனம் செய்து கொள்ளவேண்டும்.

### 6. வெடிப்பு.

குணம்:—சரீரம் எங்கும் தடித்து, வெடித்துப் புண்பட்டு அதிலிருந்துநீர் வடியும்.

மருந்து:—நெல்லி முள்ளி, வெந்தயம், பொட்டிலுப்பு, சோம்பு இவற்றை 4-தோலா வீதம் உள்ளிச்சாற்றை விட்டரைத்து, உள்ளுக்குக் கொடுத்து, வென்னீர் காட்டி வர, சுகமாகும். மேலுக்குத் தேங்கா யெண்ணெயில் துத்தம், துருசு, மஞ்சள், கடுக்காய், செங்கத் திரிவேர் இவைகளைப் பொடிசெய்து, காய்ச்சிப் பூச, குணமாகும்.

### 7. மயிருதிர்தல்.

குணம்:—தேகமெல்லாம் புள்ளிபுள்ளியாக மயிர் உதிர்ந்தும் தடித்தும், சொரி உண்டாகியும், தேமல் ஆக வரவரப் படர்ந்தும் வரும்.

மருந்து:—சூடம், பால், சாம்பிராணி, துத்தம், புறுமலம், ஆகாசத்தூள், முருங்கையிலைச் சாறு இவைகளைத் தேங்காயெண்ணெயில் போட்டுக் காய்ச்சி, பூசிவர, குணமாகும்.

### 8. தடித்தல்.

குணம்:—தேகத்திலுள்ள மயிரெல்லாம் உதிர்ந்தும் தடித்தும் சொறி உண் டாகியும் புண்ணாகியும் நீரோடியும் தேகம் நாற்றமுண்டாகியும் மிருக்கும்.

மருந்து:—தவளையைப் பிடித்துக் காயவைத்துச், சுட்ட சாம்பல், உப்பு, கும் மட்டிக்காய்ச் சாறு இவற்றைக் கலந்து, புண்களுக்குப் பூசி, உள் ளுக்கு மதுரம்,ஏலம், லவங்கப், பரங்கிப்பட்டை, சீரகம, கண்டங் கததிரியிலை, அகத்தியிலை இவைகள் 3-தோலா வீத மரைத்து, மோரில் கலக்கி, காலை உள்ளுக்குக் கொடுத்து வர, குணமாகும்.

## 9. கண் வீக்கம்.

குணம்:—தேகமெல்லாம் தடித்தும், சிவந்தும், கண்கள் வீங்கி மயிர் சிலிர்த்துக்கொண்டுமிருக்கும்.

மருந்து:— மிளகு, வசம்பு, காயம், சுக்கு இவைகளை 1-தோலா வீதம் $\frac{1}{4}$-படித் தேங்காயெண்ணெயில் கலந்து கொடுத்து சிறுகுறுஞ்சா யிலைச் சாற்றைக் கொதிக்க வைத்து, தடிப்புக்குப் பூசிவர, குண மாகும்.

## 10. முடிச்சு.

குணம்:—தேகமெல்லாம் முடிச்சு முடிச்சாகக் கட்டுக்களுண்டாகி அதி விருந்து நீர் வடியும்.

கட்டிகளுக்கு மருந்து:— வைக்கோல், சுட்டசாம்பல், நிப்பத்தளிர், மாதுளம் தளிர், காட்டாமணக்குத் தளிர், உள்ளி, கோவையிலை, மஞ்சள் இவைகளை அரைத்து உள்ளுக்கு சுக்கு, வாய் விளங்கம், ஓமம், கருஞ்சீரகம், இவை 2-தோலா வீதம் முருங்கையிலை, பிரண்டை இவை 4-தோலா வீதம் கூட்டி, அரைத்து, விளக்கெண்ணெயில் குழப்பி, காலையில் உள்ளுக்குக் கொடுத்து வர, குணமாகும். இதற்கு முன் சொல்லிய எண்ணெயைப் போட்டு வர, புண்கள் குணமாகும்.

## 11. பிடரிமயிர், * வால்மயிர் உதிர்ந்து கெட்டுப் பட்டுப்போதல்.

மருந்து:—சந்தணம், சாம்பிராணி, ஆகாசத்தூள், தவளை சுட்ட சாம்பல் இவைகளை விளக்கெணணெயில் குழப்பிப் போட்டு வர, மயிர் வளரும்.

பத்தியம்:—லகுவில் ஜீரணிக்கக் கூடிய தீனிகளைக்கொடுத்து, புளியிலை, வேப்பிலை இவைகளை வேகவைத்து அந்தத்தண்ணீரால் உடம் பைக் காலை மாலை கழுவித் துடைத்து வரவேண்டும்: துவக்கத்தில் விரேசனம் செய்து கொள்ளவேண்டும்.

## 12. விகடாரி நோய்.

குணம்:—மேலெல்லாம் விரியும். மயிர் உதிரும்.

மருந்து:—குறுஞ்சாயிலையை அரைத்து, பசுவின் பாவிலே கரைத்து, ஊற்ற வும். இதற்கு சூடு இல்லை.

# IX. குளம்பு சம்பந்தப்பட்ட வியாதிகள்.

## 1. குளம்புப் புண்.

குணம்:—குதிரை, மாடு இவைகளின் குளம்புகளில் புண் உண்டாகி, அதிலிருந்து துர்க்கந்தமான நீரோடிக் கொண்டிருக்கும்.

மருந்து:—துத்தம், துரிசு, கல்னார், கல்மதம் இவைகளை 2-தோலா வீதம் தூள்செய்து $\frac{1}{4}$-படி தேங்காயெண்ணெயில் போட்டுக் காய்ச்சி வைத்துக் கொண்டு, குளம்பைப் புளியஇலை ஜலத்தில் கழுவி, எண்ணெய்போட்டுக் கொண்டு வர, சுகமாகும். உள்ளுக்கு, கரிவேப்பிலையும், வெள்ளெருக்கு ம்வகைக்கு 10-தோலா வீதம் சிற்றாமணக்கெண்ணெயில் அரைத்து, கலந்து, காலை மாலை, கொடுத்து வர, தீரும்.

## 2. குளம்புச்சதை யழுகல்.

குணம்:—குளம்பின் உள்ளிருக்கும் சதை அழுகி துர்நாற்றம் வீசியும் சீழ் ஓடிக்கொண்டு மிருக்கும்.

மருந்து:—நிம்பப்பட்டை, சுட்டகரி, இலுப்பைக்கட்டி, கோதுமை மாவு இவற்றைச் சம எடை கலந்து, அவித்து, தயிர் விட்டுப் பிசைந்து, களியாகக் கட்டி, புளியஇலை, ஜலத்தால் சுத்தப்படுத்தி, வில்வப் பழச்சதை, வெங்காரம், வெங்காயம், மயில்துத்தம் இவைகளை 4-தோலாவீதம் தூள்செய்து, தேங்கா யெண்ணெயில் போட்டுக் காய்ச்சி, புண்களில் போட்டு வா, சுகமாகும். எண்ணெய் போடுமுன் புண்ணைக் கழுவிப் போடவும்.

## 3 குளம்பிலிருந்து ரத்தமொழுகல்.

குணம்:—குளம்பிலிருந்து இரத்தம் ஓடியும், குளம்பினுள்ளே இருக்கும். சதை பச்சை இறைச்சி போலும் காணும். நிற்கமுடியாமல் உபத்திரவப்படும்.

மருந்து:—கத்தக் காம்பு, கடுக்காய், சேங்கொட்டையிலை இவற்றையும் சுட்ட சாம்பல், மயில்துத்தம், சூடம், படிக்காரம் இவ்வகைளையும் தூள் செய்து, நிம்பஎண்ணெயில் குழைத்து, புண்ணில் போடவா, சுகமாகும்.

## 4. குளம்புக் கிருமி.

குணம்:—குளிம்பிற்குள் புண் உண்டாகி கிருமிகள் வெளிப்படும்.

மருந்து:—குதிரைலத்தி, சுட்டசாம்பல், மூங்கில்குருத்து, சூடம் இவைகளைச் சேர்த்தரைத்து, புண்களுக்குக் கட்டி, நிம்பப்பட்டைக் கஷாயத்தால் கழுவி, சூடம், வெற்றிலை, வெங்காயம், பாகையிலை இவைகளைத் தேங்காயெண்ணெயில் போட்டுக் காய்ச்சி, புண்ணிற்குப்போட்டு வர, குணமாகும்.

## 5. குளம்பு வீக்கம்.

குணம்:—குளம்பைச் சுற்றி வீக்கம் கண்டு நொண்டிக்கொண்டு நிற்க முடியாமல் வாதைப்படும்.

மருந்து:—தயிர் வேளைச்சாற்றில் பழம்புளியைக் கூட்டி, வீக்கத்திற்குப் பூசி, உள்ளுக்கு, பாங்கிப் பட்டை, கருஞ்சீரகம், வெங்காரம், நீர்முள்ளியிலை இவைகளை 5-தோலா வீதம் அரைத்து, சிற்றாமணக்கெண்ணெயில் விட்டுக் கவளமாக்கி, காலையில் கொடுத்து வர, குணமாகும்.

பத்தியம்:—வழக்கம் போல் கொள், கடலை முதலியவைகளைச் சேர்த்துத் தண்ணீர்ப் பதார்த்தங்களைக் குறைவு படுத்திக் கொள்ளவேண்டும்.

# X. வாத நோய்கள்.

## 1. வாதம்.

குணம்:—நாலு காலும் நடக்கமுடியாமல் நிற்கும்.

பக்குவம்:—(மருந்து அவசியமில்லை.)  இந்த மாதிரி நாலு காலிலும் சூடு போடவும். குணமாகும்.

## 2. வீங்குவாதம்.

குணம்:—தேகம் வீங்கியும், வயிறு உப்பியும், வாலை யிடுக்கியும் சாணி போடும்.

பக்குவம்:—வசம்பு, காயம் இவைகளை வகைக்கு $\frac{1}{2}$-பலம் வீதம் எடுத்து, கற்றாழைச் சாற்றை விட்டரைத்துக் கொடுக்க, குணமாகும்.

## 3. தயங்குவாதம்.

குணம்:—நாலு காலும் தயங்கி நடக்கும்.

பக்குவம்:—மாவிலிங்கயிலையை அரைத்து, வெள்ளாட்டுப் பாலில் குழப்பிக் கொடுத்து, நாலு காலிலும் O O O இந்த மாதிரி சுடவும்.

## 4. நொண்டுவாதம்.

குணம்:— நாலு காலும் நொண்டும்.

பக்குவம்:—மாவிலிங்கஇலைச்சாற்றையும் வெள்ளாட்டுப்பாலையும் கலந்து, உள்ளுக்குக் கொடுத்து, நாலு தொடைகளிலும்  இந்த மாதிரி இறங்கச் சுட, நோய் பறக்கும்.

## 5. பூவை.

குணம்:—நிலத்தில் கால் நில்லாது. நின்ற இடத்தில் விழுந்து கிடக்கும்.

பக்குவம்:—மாம்பட்டை, பூண்டு, வசம்பு இவைகளை அரைத்து, காடியில் கலந்து கொடுக்கவும்.

## 6. ஊதுவாதம்.

குணம்:—பின்புறம் தடிக்கும். நெளிந்து காட்டும். காலை விட்டு விட்டு எறியும். தலையை இறக்கமாக இட்டுக் கொள்ளும்.

பக்குவம்:—மருந்து கிடையாது. இந்த மாதிரி சுடவும். வியாதி காணுதோடும்.

## 7. யானைவாதம்.

பக்குவம்:—குதிரைக் குளம்பின் புஷ்பம், வால்மிளகு, கருஞ்சீரகம், காயம், ஆகாசகருடன் கிழங்கு, அதன் புஷ்பம், பனை வெல்லம் இவைகளை அரைத்து உருண்டைசெய்து கொடுக்கவும். பிறகு இந்த மாதிரி சூடு போடவும்.

## 8. வாதத்தால் முட்டுக்களில் வீக்கமுண்டாதல் முதலியன.

குணம்:—குதிரைகள் மாடுகள் இவைகளின் இடுப்பில் நோயுண்டாகி வீங்கி, நீர் சுரந்தும் நடக்க முடியாமல் வருத்தப்படும்.

மருந்து:—வெங்காரம், காயம், முள்ளங்கியிலை, கரியபோளம், மஞ்சள் இவைகளைச் சம எடை சேர்த்தரைத்து, ஊமத்தைச் சாற்றை விட்டுக் குழப்பி, கொதிக்கவைத்து, வீக்கத்தின்மேல் பூசி, பிறகு கன்னிக்கோழிக் குஞ்சின் சதையை உரித்து எடுத்து, நல்லெண்ணெயில் வதக்கி, அதனுடன் மஞ்சள், ஓமம், சுக்கு, வசம்பு, மிளகு, ஆளிவிதை, உளுந்து, கடலை, எள், பச்சரிசி இவைகளை மேற்படி கறிக்குச் சம எடை வீதம் கூட்டி, அரைத்து வேளைக்கு எலுமிச்சங்காயளவு உருட்டி, காலை மாலை கொடுக்க, குணமாகும். மருந்து கொடுக்குமுன் 8-தோலா கரியபோளத்தைப் பாலில் கலக்கிக் கொடுத்து, விரேசனம் செய்துகொண்டு, மருந்து கொடுக்கவும்.

### 9. கணைக்கால் வீக்கம்.

குணம்:—கணைக்கால் குழச்சிகளில் வீக்கம் கண்டு, நடக்க முடியாமலும் நிற்க முடியாமலும், வாதைப்படும்.

மருந்து:—குங்கிலியம், சூடம் இவைகளை ஊமத்தையிலைச்சாறு, மேனியிலைச்சாறு குன்றிமணியிலைச்சாறு இவைகளை யொன்றாகக் கலந்து, அரைத்து, காய்ச்சிப் பூசவும். பிறகு, மிளகு, கடுகுரோகிணி, கோஷ்டம், வாயுவிளங்கம், கொடுவேலிவேர், பனைவெல்லம், பொரித்த வெங்காரம் இவைகளை 3-தோலாவீதம் வென்னீரில் அரைத்து, கலக்கிக் கொடுத்து வர, குணமாகும்.

### 10. முழங்காலில் நீரிறக்கம்.

குணம்:—முழங்கால்களில் நீர்இறங்கி வீங்கி நடக்கமுடியாமல் வாதைப்படும்.

மருந்து:—பிரண்டைக் கொழுந்தையும், வாதமுடக்கியிலையையும், வெள்ளாட்டு நீர் விட்டரைத்து, வீக்கத்தில் பூசி, பிறகு வெங்காரம், பற்பாடகம், பறங்கிப்பட்டை, வெடியுப்பு இவற்றை வகைக்கு 2-தோலா வீதம் அரைத்து, உவர்மண் தெளிந்த ஜலம் * தயிர் ஜலத்தில் கொடுத்து வர, குணமாகும்.

### 11. தொடைவீக்கம்.

குணம்:—தொடைச் சந்துகளில் வீக்கம் கண்டு குத்துவாதை உண்டாகி வருத்தப்படும்.

மருந்து:—கொட்டைமுத்து, நிம்பமுத்து, மேனியிலை, வெங்காரம் இவைகளை சிறுநீர் விட்டரைத்து, வீக்கத்தில் பூசி, பிறகு, குக்கில், மஞ்சள், அசுவகந்தி, பொரித்த படிக்காரம் இவற்றை வகைக்கு 2-தோலா, காயம் $\frac{1}{2}$-தோலா இவைகளை வென்னீர் விட்டரைத்து, கவளமாக்கி, காலை மாலை கொடுத்து வர, குணமாகும்.

### 12. கால்வீக்கம்.

குணம்:—நாலு கால்களும் மிகுதியாக வீங்கியும், பொந்துகளில் வாதை அதிகப்பட்டும் நிற்க முடியாமலும் படுக்கமுடியாமலும் வருத்தப்படும்.

மருந்து:—எருக்கிலைப்பழுப்பு, பூண்டு, வேளை, கொட்டைமுத்து, குன்றிமணியிலை இவைகளை யரைத்து, வீக்கத்தில் பூசி, உள்ளுக்கு 2-ராத்தல் சதுரக்கள்ளியை 10-படி ஜலத்தில் போட்டு, வேகவைத்து, காலை

மாலை $\frac{1}{4}$–படியும், தயிர் ஜலம் $\frac{1}{4}$-படியும், பனைவெல்லம் 4–தோலா வும், போட்டுக் கலந்து கொடுத்துவர, குணமாகும்.

பத்தியம்:—ஜீரண சக்தியின் அளவைக் கண்டு, அந்த அளவு கொள், கடலை முதலியவைகளைக் கொடுத்து, வெந்நீர் காட்டவும்.

## 13. வாதம்.

குணம்:—நாலு காலும் தூக்கிவைக்கும்.

மருந்து:—மாவிலிங்க இலைச்சாற்றையும், வெள்ளாட்டுப்பாலையும் கலந்து ஊற்றவும். அதற்கு நாலு தொடையிலும்



இந்த மாதிரி இரங்கு சூடு போடவும்.

## 14. வாதம்.

குணம்:—நாலு காலும் நொண்டும்.

மருந்து:—மாவிலிங்க இலைச்சாறு, வெள்ளாட்டுப்பால் இவற்றைக் கலந்து போடவும்.



இந்த மாதிரி சூடு போடவும்.

## 15. வாதம்.

குணம்:—நாலு காலும் கூடாமலிருக்கும்.

மருந்து:—நாலு கால்களிலும் தென்னையிலைப் பரப்பாய்ச் சுட, சொஸ்த மாகும்.

## 16. வாதம்.

குணம்:—தேகம் வீங்கியும், வயிறு உப்பியும், வாலிடுக்கியும் சாணமிடும்.

மருந்து:—காசிடை வசம்பு, காசிடைக் காயம் இவற்றை, நாழி கற்றாழைச் சாற்றில் அரைத்துக் கொடுக்க, சொஸ்தமாகும்.

## 17. வாதம்.

குணம்:—நாலு காலும் தாங்கிக் கிடக்கும்.

மருந்து:—மாவிலிங்க இலையை அரைத்து, வெள்ளாட்டுப் பாலில் கலந்து கொடுத்து, நாலு காலையும் கட்டிச் சுட, சொஸ்தமாகும்.

## 18. குடல்வாதம்.

குணம்:—அ(கு)ண்ணுந்து விழும்.

மருந்து:—தலைக்கும் முன்னங்கால் குதிக்குஞ் சற்றிட மோட்டி முக்காணி சூடாற் சூடி, நாலு காலிலும் நீர்வாரியாகச் சுட, சொஸ்தமாகும்.

## 19. ஆனைவாதம்.

குணம்:—நாலு காலும் வீங்கியிருக்கும்.

மருந்து:—சதுரக்கள்ளியிலொரு கிளை வெட்டிக் கொண்டுவந்து, கானை கானையா யறிந்து, ஒரு பானையிற் போட்டு, பதக்குத் தண்ணீர் வார்த்து, குறுணித் தண்ணீராய்க் காய்ச்சி, இறக்கி, ஒரு பெரிய சட்டியினுல் மூடி, குப்பையில் 2-நாள் புதைத்து வைத்து, 3-நாள் கழித்து, கையினுல் தண்ணீரைத் துழாவி, 3-நாளைக்கு கொடுக்க, சொஸ்தமாகும்.

## 20. ஊதுவாதம்.

குணம்:—பின்புறம் துடித்தும் நெளிந்தும் காலிட்டெறிந்து தலையை யிறக்கமிட்டுக் கொண்டிருக்கும்.

மருந்து:—விணுதண்டை யிரட்டைச் சூடாகச் சுட, சொஸ்தமாகும்.

# XI. வீக்கம் காணும் வியாதிகள்.

### 1. சிறுசிலந்தி.

குணம்:—தேகத்தில் வீக்கம் காணும்.

மருந்து:—சங்கமுள்ளினலடிக்கவும். குணம் காட்டும்.

வேறுவிதம்:—முன்னங்கால் தொடுத்துத் தொப்புள் வரையிலும் வீக்கம் காணும்.

மருந்து:—பெருங்குறத்தை வேரை அரைத்து, மோரில் கலந்து கொடுத்து, பின்பு, மேற்படி வேருடன், உள்ளி, வசம்பு இவைகளைக் கலந்து அரைத்து, சிறு நீருடன் குளம்பு வீக்கத்தின் மேல் 3-நாள் தடிப் பாய்ப் பூசி வரவும்.

### 2. ஆனைச்சிலந்தி.

குணம்:—முன்னங் கால் வீங்கிக் காட்டும்.

மருந்து:—பசலையிலைச் சாற்றில் 5-பலம் உள்ளியை நறுக்கிப்போட்டுக் கலந்து கொடுத்து, உடனே, உப்பு, தேன், நெய் இவற்றை விட்டரைத்து வீக்கத்தின் மேல் பூசவும்.

வேறுவிதம்:—புற்றிலிருக்கும் பழம்சோறு, உள்ளி, வசம்பு இவைகளைச் சிறு நீர் விட்டரைத்து, வீக்கத்தின் மேல் பூசி, இடது புறத்தில் கட்டாரியைப்போல் சுடவும்.

### 3. இரத்தச்சிலந்தி.

குணம்:—மாட்டின்மேல் தேகமெல்லாம் கழலைபோல் எழுப்பி இரத்தம் பாய்ந்து மயிர் சிலிர்த்துக் காட்டும்.

மருந்து:—கோழிமுட்டைக்கருவில் அவுரியிலைச்சாற்றை விட்டரைத்து, சேதமில்லாமல் எடுத்து, உடம்பெல்லாம் பாவப்பூசி, ஒருநாழிகைக்குப் பிறகு, பேய்க்கரும்பின்சாறு, துளசிச்சாறு இவற்றை வகைக்கு 2-தோலா வீதம் எடுத்து ஆவின் பாலில் கலந்து கொடுக்கவும். வியாதி தீர்ந்து பழைய தேகமுண்டாகும்.

### 4. இரத்தச்சிலந்தி.

குணம்:—இரத்தம் விழும். மயிர் சிலிர்க்கும். குலேயாமல் சாணிபோடும்.

மருந்து:—கோழிமுட்டையை உடைத்து, ஒரு பாத்திரத்தில் விட்டு, கையிஞல் நன்ருகப் பிசைந்து, உடம்பெல்லாம் பூசவும்.

### 5. ஆணேச்சிலந்தி.

மருந்து:—ஆவின் நெய் $\frac{1}{4}$-படி, புற்றுமண், புத்துச்சோறு, பூண்டு, வசம்பு இவைகளேச் சிறுநீர் விட்டரைத்து, வீக்கத்தின் மேல் பூசவும். பிறகு [figure] இந்த மாதிரி சுடவும். பிறகு கோழி முட்டையை உடைத்து உடம்பெல்லாம் பூசவும். குணமாகும்.

### 6. பெருஞ்சிலந்தி.

குணம்:—நாலு காலும் தத்தளித்து நடக்கும்.

மருந்து:—விழுதியிலேயை அரைத்து, மோரில் கலந்து, கொடுக்கவும். பிறகு தட்டில் கூ. கூ. கூ. க்ஷ. க்ஷ, க்ஷ. இந்த மாதிரி சூடு போடவும்.

### 7. தூங்குசிலந்தி.

குணம்:—சர்வாங்கமும் வீங்கும்.

மருந்து:—அவுரியிலேச்சாற்றையும் செருப்படிச்சாற்றையும் சமமாகக் கலந்து, மேலே தடவிஞல், நோய் தீரும்.

### 8 மறுபுள்ளி.

குணம்:—நெஞ்சு வீங்கும்.

மருந்து:—குதும்பாலும், நெடும்பாலும், உடல் மடக்கி யென்றும், போத்தி யென்றும், ஆட்டிக் கலந்தே மட்ட சுழி பாற்பென மூடி, நீர்

வார்த்து, இளஞ்சிறு நீர் வார்த்தரைத்து, வீக்கத்தின்மேல் தடவி, பிறகு **உ று கூ ல ப** இந்த மாதிரி சூடு போடவும்.

### 9. பாண்டு.

குணம்:—தேகமெல்லாம் வீங்கி, மினு மினுப்புக் கொண்டும், தொடும்போது பள்ளம் விழுந்தும், முட்டுத் தேய்வுபட்டும் வேதனைப்படும்.

மருந்து:—நீலிச்சாறு, நிம்பஎண்ணெய் இவற்றைக் கலந்து, மேலெங்கும், கனமாகப் பூசி, 10-தோலா கரியபோளத்தை, $\frac{1}{4}$-படி வென்னீரில் கலக்கிக் கொடுத்து, பேதியாகச்செய்து, பிறகு வெள்ளருகு, மிளகு, திராட்சையுப்பு, வேர்க்கொம்பு இவற்றை வகைக்கு 4-தோலா வீதம் வென்னீர் விட்டரைத்து, காலை மாலை கொடுத்து வர, குணமாகும்.

வேறுவிதம்:—மருந்து:—4-படி கள்ளில் 1-படி பழச்சாற்றைக் கூட்டி, அதில் 10-தோலா அரப்புப்பொடி போட்டு, ஊறவைத்து, காலை மாலை கொடுத்து வர, குணமாகும்.

### 10. வீக்கம்.

குணம்:—இரண்டு கன்னமும் வயிறும் வீங்கி உபத்திரவப்படும்.

மருந்து:—கறியுப்பு, வசம்பு, பழம்புளி இவை வகைக்கு 2-தோலா எடுத்து, $\frac{1}{4}$-படி சிற்றாமணக்கெண்ணெயில் கலந்து கொடுத்து, பேதியாகச் செய்து, வேப்பம்பட்டை, முள்ளிக்கீரை நொச்சி, வெள்ளருகு, நன்னாரிவேர் இவைகளை அவித்த ஜலத்தில், சுக்கு, மிளகு, பனை வெல்லம் இவற்றைத் தூள்செய்து போட்டு, காலை மாலை கொடுத்து வர, குணமாகும்.

### 11. வீக்கம்.

குணம்:—முன்னங் கால்களுக் கிடையில் அதிகம் வீங்கியும், வர வர வீக்கம் உடம்பெல்லாம் பரவியும் வரும்.

மருந்து:—மேனி, வெள்ளருகு, வேளை இவை 4-தோலா வீதமும், மஞ்சள், மிளகு, சுக்கு, திப்பிலி, காயம், வசம்பு இவை 1-தோலாவீதமும் கூட்டி யரைத்து, கவளமாக்கி, காலை மாலை கொடுத்து, கரியுப்பு, புற்றுமண், மேனிச்சாறு இவற்றை நெய்யில் கலந்து, கொதிக்க வைத்து, வீக்கத்திற்குப் பூசி வர, குணமாகும். மருந்து

கொடுக்குமுன், இதற்கு முன் உள்ளதற்குச் சொல்லியதுபோல் பேதிக்குக் கொடுக்கவும்.

## 12. வீக்கம்.

குணம்:—கால்களில் வீக்கம் கண்டு, வர வர மேலுக்கு ஏறி, உடம்பு முழுவதும் வீங்கும்.

மருந்து:—கடுக்காய், களிப்பாக்கு, குமரிச்சோறு இவைகளை 1-தோலாவீதம் ¼-படி சிற்றாமணக் கெண்ணெயில் கலந்து கொடுத்து, பேதியாகச் செய்து, பிறகு, திராட்சையுப்பு, வெங்காரம், வெடியுப்பு, பழக் கோது வெல்லம் இவைகளை 3-தோலா வீதம் அரைத்து, பச்சரிசிக் கஞ்சியில் கலக்கிக் கொடுத்து வர, சுகமாகும். ஊமத்தையிலைச் சாற்றில் பழச்சாறு விட்டுக் கொதிக்க வைத்து, வீக்கத்தில் பூச, குணமாகும்.

## 13. வீக்கம்.

குணம்:—முதுகு வீங்கி வீக்கம் வர வர உடம்பெல்லாம் பரந்து, மூச்சு விடுவதற்குத் தடைப்பட்டு வருத்தப்படும்.

மருந்து:—பிரண்டை, புளியிலை, நிம்பஇலை, நொச்சியிலை இவைகளை யிடித்துப் பிழிந்து, சாற்றைக் கொதிக்க வைத்து வீக்கத்தில் பூசி, ¼-படி பச்சை மஞ்சள்சாறு, ¼-படி எண்ணெய் இவைகளில் 3-தோலா மிளகு தூள் போட்டு, காலை மாலைகளில் உள்ளுக்குக் கொடுத்து வர, குணமாகும்.

பத்தியம்:—கொள், புல், உளுந்து இவைகளைக் குறைத்து, வெந்நீர் காட்டி வரவும். பேய்ப்புடல், நொச்சி, சுரை, வேப்பிலை, புளியிலை இவைகளை வேக வைத்த ஜலத்தில் காலை மாலை, உடம்பு கழுவி வரவும்.

## 14. கொல்லி.

குணம்:—கன்னம் வீங்கும். மயிர் சிலிர்க்கும். நடக்க மாட்டாது.

மருந்து:—வீங்கின இடத்தில் புள்ளடிச் சூடு போடவும். எருக்கன் வேர், சதிரக்கள்ளிவேர், புற்றுமண் இவற்றை யரைத்து, காடியில் குழப்பிப் போடவும். ┼ இந்தமாதிரி சூடு போடவும்.

## 15. உடல்சிலந்தி.

குணம்:—தோள்புறம் வீங்கும். கண் குளிர்ந்து இருக்கும்.

மருந்து:—கிரந்திநாயகம், வசம்பு இவைகளை அரைத்து, காடியில் கரைத்து, உள்ளுக்குப் போடவும். சூடு இல்லை.

## 16. ஆனைச்சிலந்தி.

குணம்:—முன்னங்கால் இரண்டும் வீங்கும். நடக்க மாட்டாது. தடுமாறியிருக்கும்.

மருந்து:—உப்பு, பசுவின்நெய் இவற்றை ஒன்றுயரைத்து, வீக்கத்தில் போடவும். சூடு இல்லை.

## 17. வறிநோய்.

குணம்:—நாலு காலும் வீங்கும். தத்தளிக்கும்.

மருந்து:—விழுதியிலைச்சாறு, மோர் இவற்றைக் கலந்து, உள்ளுக்குப் போடவும். வீக்கத்தில்,



இந்த மாதிரி சூடு போடவும்

## 18. பெருஞ்சிலந்தி.

குணம்:— கால் வீங்கும். மயிர் சிலிர்க்கும்.

மருந்து:—விழுதியிலையை அரைத்து, மோரில் கலந்து ஊற்றவும். பின் தட்டிலே



இந்த மாதிரி சூடு போடவும்.

## 19. ஆனைச்சிலந்தி.

குணம்:—........இரண்டும் வீங்கும்.

மருந்து:—வீங்கிய இடத்தில், பசுவின்நெய், உப்பு, புற்றுமண், புத்தான் சோறு, வசம்பு, வெள்ளைப்பூண்டு இவற்றைச் சிறுநீரிலரைத்து,

வீங்கின இடத்தில் பூசவும். ஆட்டின் விலாவிலும் சந்திலும்

 இந்த மாதிரி சூடு போடவும்.

### 20. உடல்சிலந்தி.

குணம்:—உடம்பு சுடும். தோள்புறம் வீங்கும். கண் குவிந்திருக்கும்.

மருந்து:—சிலந்திநாயகம், வசம்பு இவற்றை அரைத்துப் போடவும். சூடு இல்லை.

### 21. நாறை.

குணம்:—இரண்டு கன்னமும் வீங்கும். மேயாமல் நின்றாற்போலே விழும்.

மருந்து:—இலுப்பைப்பிண்ணாக்கைச் சிறுநீரில் அரைத்துப்போடவும். இரண்டு கன்னங்களிலும்  இந்த மாதிரி தாமணிச் சூடு போடவும்.

### 22. ஆனைச்சிலந்தி.

குணம்:—முன் காலிரண்டும் வீங்கும்.

மருந்து:—பசுவின்நெய், உப்பு இவற்றை அரைத்து வீக்கத்தில் போடவும். பசலைச்சாறு, பூண்டு இவற்றை அரைத்துப் போடவும். இதற்குச் சூடு இல்லை.

### 23. இரத்தச்சிலந்தி.

குணம்:—பசுஞ்சோலையாகச் சாணமிடும். ரத்தம் விழும். மயிர் சிலிர்க்கும்.

மருந்து:—கோழிமுட்டை, அவுரியிலை இவற்றை அரைத்து உடம்பெல்லாம் பூசவும். இதற்குச் சூடு இல்லை.

### 24. ஆனைச்சிலந்தி.

குணம்:—முன்னங்காலில் வீங்கும்.

மருந்து:—பசுவின்நெய் $\frac{1}{4}$-படி, உப்பு $\frac{1}{4}$-படி, புற்றுமண், புத்தான்சோறு,

பூண்டு,வசம்பு இவற்றை அரைத்து, காய்ச்சி, வீக்கத்தில் போடவும். • • இந்த மாதிரி சூடு போடவும்.

### 25. சொல்லிச் சிலந்தி.

குணம்:—தொப்புள் சால் போல் வீங்கும்.

மருந்து:—நெருஞ்சிவேர், கற்றாழைவேர், கடுக்காய், திப்பிலி, மிளகு இவற்றை அரைத்து, நெய்யில் குழப்பிப் போடவும். இதற்குச் சூடு இல்லை.

### 26. நாரை.

குணம்:—இரண்டு கண்ணும் வீங்கும். மேயாமல் நின்றாற்போல் விழும்.

மருந்து:—கிலுகிலுப்பையிலை, இலுப்பைப் பிண்ணாக்கு இவற்றை வென்னீர் வார்த்து, அரைத்துப் போடவும்.



இந்த மாதிரி சூடு போடவும்.

### 27. பெருஞ் சிலந்தி.

குணம்:—நாலு காலும் வீங்கும்.

மருந்து:—விழுதியிலையை அரைத்து, மோரில் கலக்கி, உள்ளுக்குப் போடவும். பின் தட்டிலே



இந்த மாதிரி சுடவும்.

### 28. சிறுசிலந்தி.

குணம்:—தேகத்தில் வீக்கம் காணும்.

மருந்து:—சங்குமுள்ளினா லடிக்க, சொஸ்தமாகும்.

### 29. சிறுசிலந்தி.

குணம்:—முன்னங்கால் தொடுத்து, தொவரையில் வீங்கியிருக்கும்.

மருந்து:—பெருங்குறத்தைவேரை யரைத்து, மோரில் கலந்து உள்ளுக்குக் கொடுத்து, பின்பு ஷ வேருடன், உள்ளி, வசம்பு இவற்றைக் கலந்து, வீக்கத்தின் மேல் 3-நாளைக்குப் பூச சொஸ்தமாகும்.

## 30. யானைச்சிலந்தி.

குணம்:—முனங்கால் வீங்கும்.

மருந்து:—பசலையிலைச்சாற்றில் 5-பலம் உள்ளியை நறுக்கிப் போட்டு, கலந்து, உள்ளுக்குக் கொடுத்து பின்பு, மாட்டி உப்பு, நெய் இவற்றை அரைத்து, வீக்கத்தின்மேல் பூசவும். மேலும், புற்றிலிருக்கும் பழஞ்சோறு, உள்ளி, வசம்பு இவற்றைச் சிறுநீர் வார்த்து, ஒன்றாய் அரைத்து வீக்கத்தின் மேற்பூசி, இடப்புறஞ் சுட, சொஸ்தமாகும்.

## 31. இரத்தச்சிலந்தி.

குணம்:—தேகமெல்லாம் பிறை குழல் போல் கும்பியும், இரத்தம் பாய்ந்தும், மயிர் சிலிர்த்துக்கொண்டு மிருக்கும்.

மருந்து:—கோழிமுட்டைக்கரு, அவுரியிலைச்சாறு இவற்றைச் சேர்த்து அரைத்து, தேகமெல்லாம் பூசி, ஈராழி பேய்க்கருப்பன்சாறு, ஈராழி துளசிச்சாறு இவற்றைப் பசுவின் பாலில் கலந்து கொடுக்க, சொஸ்தமாகும்.

## 32. புரைவை.

குணம்:—இரண்டு பக்கமும் வீங்கும்.
மருந்து:—ஓட்டடையை மோருடன் கலந்து கொடுத்து, வயிற்றைக் கட்டாடையாகச் சுட, சொஸ்தமாகும்.

## 33. நாய்த்தலை.

மருந்து:—விளா இலை, வாட்சட்டியிலை, உள்ளி, வசம்பு இந்நான்கையுமொன்றாய்ச் சேர்த்தரைத்து, கையால் தடவிக்கொண்டு, அதன்மேற் பிடிக்க, உள்ளடங்கிப்போம். மேலும், நீர்வாழியைச் சுற்றி, இரட்டைச் சூடாய்ச் சுட, சொஸ்தமாகும்.

## 34. நாய்த்தலை.

மருந்து:—நாகதாளியிலையிற் சிற்றாமணக்கெண்ணெயை வார்த்தரைத்து, உள்ளங்காலிற் அப்பிக்கொண்டு, நாய்த்தலை புறப்பட்டிருக்கிற இடத்

தின்மேல் தேய்த்து, வாலாலடிக்க, நின்றுபோகும்.

### 35. சிலந்தி.

குணம்:—குதறிச் சிலேத்த தண்ணீர் வடியும்.

மருந்து:—மயில்துத்தமும் வெற்றியுங் கூட்டி, ஆமணக்கெண்ணெய் விட்டரைத்து, தடவி, நெருப்பில் காய்ச்சினால், சிலேத்தண்ணீர் வடியும். 3-நாளில் சொஸ்தமாகும்.

### 36. மண்டைப்பரு.

குணம்:—தலை வீங்கும். காது, கண் வீங்கும். காது கொறப்போகும்.

மருந்து:—வனமாவிலை 1-பிடி, வெள்ளைவெங்காயம், பூண்டு 3, சுக்குத்தேறு 1, குப்பைமேனியிலை, 1-கரியுப்பு இவையெல்லாம் அவைத்துச் சிறுநீரில் தோய்த்து, இரண்டு காதுகளிலும், கண்களிலும், மூக்கிலும் பிழியவும். வனமாவிலையைச் சிறுநீர் விட்டரைத்து, தலை மட்டும் துவாலையாகப் பூசவும். உள்ளுக்கு ஒரு விளாங்காயளவு கொடுக்கவும்,

### 37. கழுத்துவீக்கம்.

மருந்து:—கப்பு, கல்லுப்பு, மஞ்சள் இவற்றை ஒன்றாக அரைத்து, கொதிக்க வைத்து, வீக்கத்தில் பூசவும். எருக்கன் பாலில் நல்லெண்ணெய் விட்டு, நூலில் நனைத்து, வீக்கத்திலிருந்து காம் வரையில் நூல் சாட்டை போடவும்.

### 38. ஓடுவாயு.

குணம்:—இது, கால்களிலொன்றில் வந்தால், கால் வீங்கி, சூடாயிருக்கும். கையினால் வெகுசொற்ற அழுத்தின போதிலும் சுருக்கென்று உண்டாகிற நோவினால் மாடு நெளியும். கூச்சம் கடாவத்திற்கு மிஞ்சியிருக்கும். வேறே எவ்வித வாயுவினாலும் அவ்வளவு சுருக்கென்று நோவை உணராது. சிலநாள் இந்த வீக்கம் வாங்கி, அவ்விதமாகவே வேறொருகால் வீங்கும். இடுப்பிலும் முதுகிலும் மார்புக்கு மேலும் சிலவேளைகளில் இந்த வாயு தேகத்திலுண்டாயிருக்கும்.

### 39. ஓடுவாயு: குறியும், சிகிச்சையும்.

குணம்:—உடம்பில் ஒரு பக்கத்திலிருந்து மற்றொரு பக்கத்திற்கு ஓடுவதனாலேயே இதை இன்னதென்று தெரிந்து கொள்ளலாம்; இது, கால்களு ளொன்றில் வந்தால், கால் வீங்கி, சூடாயிருக்கும்.

கையினாலும் மிகவும் கொஞ்சமாய் அழுத்தின போதிலும் சுருக்கென்று உண்டாகிற நோவினால் மாடு நெளியும். கூச்சம் சுபாவத்திற்கு மிஞ்சி யிருக்கும். வேறெவ்விதமான வாயுவினாலும் அவ்வளவு சுருக்கென்று நோயை உணராது. சில நாள் வீக்கம், வாங்கி, அவ்விதமாகவே வேறொரு கால் வீங்கலாம். இடுப்பிலும் முதுகிலும் மார்புக்கு மேலும் சில வேளையில் இந்த வாயு காண்பதுண்டு.

மருந்து:—கம்பளி முதலிய துணியைச் சுற்றி வைப்பதனாலே சூடு உண்டாக்குவதும், காற்று வெயில் படாமல் அடைப்புக்குள் கட்டி வைப்பதும் மிகவும் அவசியம். பேதியாகும்படி ஒன்று அல்லது இரண்டு தடவை சிற்றாமணக்கெண்ணெயை $1\frac{1}{2}$-பயிண்டு $\frac{3}{16}$-ஆழாக்கு வார்க்க வேண்டும். வெந்நீரினால் வீக்கத்துக்கு ஒத்தடங் கொடுத்துத் தண்ணீரைப் பரிஷ்காரகமாய்த் துடைத்து, உலர்ந்த பின்பு, கர்ப்பூரம் 3-அவுன்சு, $\frac{1}{8}$-பலம் தேங்காயெண்ணெய் 1-பயிண்டு உழக்குக் கலந்து, ஒரு நாளைக்கு 2-தரம் தடவி, மாடு பொறுத்துக் கொள்ளுகிற மட்டில் அழுத்தித் தேய்க்க வேண்டும் ஒருதரம் இந்த வியாதி கொண்ட மாட்டுக்குப் பின்னிட்டும் அது காணலாம். ஆதலால் ஈரத்திலும் குளிரிலும் அந்த மாட்டை யிருக்க வொட்டாமல் செய்யவேண்டும். அப்படி இருப்பதுதான் இந்த வியாதி உண்டாவதற்கு முக்கிய காரணம். நினைவில் வைத்திருக்க வேண்டியது.

# XII. சுரநோய்கள்.

## 1. சுரம்.

குணம்:—அதிக தூக்கமுடையதாயும், உடம்புச் சூட்டிற்குக் கால் சூடு குறைந்தும், கண்களில் வடிவதாயும், நீர் கருமை யுடையதாயும், நீர் வெண்மையடைந்தும், சாணி கரு நிறமுடையதாயும், நாக்கு முட்களும், வெடிப்புமுடையதாயும், சூடு அதிகரித்தும், மூச்செறிந்து நாசியிலிருந்து நீர் ஓடிக்கொண்டு மிருக்கும்.

மருந்து:—கோஷ்டம், மல்லம், சித்தரத்தை, கஸ்தூரி, மஞ்சள், கடுகுரோகிணி, மிளகு, பொரித்த வெங்காரம், பொரித்த படிக்காரம், முற்றின நிம்பப்பட்டை இவை வகைக்கு 2-தோலா வீதம் சாராயம், விட்டரைத்துக் கவளமாக்கி, காலை மாலை அரிசித்தெளிவு சேர்த்துக் கொடுக்க, குணமாகும்.

2. சுரம்.

குணம்:—உடம்பில் அதிகச்சூடு உண்டாம். உள் நாக்குச் சிவந்து, மஞ்சள் நிறமுள்ளதாயும், நீர் சாணி அதிகமாகக் கொதிப்புண்டாகியும், மஞ்சள் நிறமுள்ளதாயும், தீனி தின்னுமலும், தூங்கியும் நிற்கும்.

மருந்து:—திரிகடுகு 4-தோலா, முத்தக்காசு, கண்டங்கத்திரிவேர், தூதுவளைவேர் இவைகளை 8-தோலா வீதம் எடுத்துப் பழச்சாற்றை விட்டரைத்து, இரு உருண்டையாக்கி, 2-வேளையும் கொடுக்க, குணமாகும்.

3. சுரம்.

குணம்:—உடம்பில் கொதிப்புண்டாகியும், கண், நாக்கு முதலியவை வெண்மை யடைந்தும், வாயுலர்ந்தும், மூச்சு துரிதமாக விட்டும், முகம் வாடியும், சாணி வெண்மையாயும், நீர் தடித்து மிருக்கும்.

மருந்து:—ஓமம், சோம்பு, திப்பிலி இவை 6-தோலா துளசியிலை 8-தோலா இவைகளைச் சேர்த்து அரைத்து காலை மாலை கொடுத்து, வென்னீர் காட்டி வர, குணமாகும்

4, சுரம்.

குணம்:—உடம்பில் அதிகச் சூடுடன் கண்கள் சிவந்தும், வாயினுல் நீரோடியும், அக்குளி லதிக துடிப் புண்டாகியும், நீர் சிவந்த மஞ்சள் நிறமுடையதாயும், தீனியில் விருப்ப மில்லாமலும், தூங்கியும் நிற்கும்.

மருந்து:—காட்டுச்சீரகம், கடுகுரோகிணி, ஓமம், மிளகு சதகுப்பை, வெட்பாலையரிசி, பூவரசம்பட்டை இவைகளை 3-தோலா் வீதம் எடுத்து நெல்லிக்காய்ச் சாற்றை விட்டரைத்து, உருட்டி, காலை மாலை கொடுக்க, குணமாகும்.

5. சுரம்.

குணம்:—சிரசில் அதிகச் சூடும், துடிதுடிப்பு, உண்டாகி, வாய் புண்பட்டு, நாற்றமுடையதாயும், தேகமெல்லாம் மெல்லிய தடிப்புக்க ளுண்டாகியும், நீர் கொதித்தும், கண் சிவந்தும், கலங்கியும் தூங்கிக் கொண்டு மிருக்கும்.

மருந்து:—நெல்லிக்காய், மல்லி, வாழைக்கிழங்கு, சீரகம், குமரிச்சோறு, பனங்கற்கண்டு இவைகளை 4–தோலா வீதம் அரைத்து, ஆவின்

பாலில் காய்ச்சி, காலை மாலை கொடுக்க, குணமாகும்.

6. சுரம்.

குணம்:—உடம்பில் சூடுண்டாகியும், அடிக்கடி நீர் விட்டுக்கொண்டும், அதிக மாய்வியர்த்தும், தேகமெல்லாம் சிறு பருக்க ளுண்டாகியும், தீனியில் விருப்பமில்லாமலும், மயிர் சிலிர்த்துக் கொண்டு மிருக்கும்.

மருந்து:—அரைக்கீரை, சீரகம், ஓமம், சித்தரத்தை, சுக்கு, திப்பிலி, சந்தனம் இவைகளை 4-தோலா வீதம் தயிர் தண்ணீர் விட்டு அரைத்து, கவளமாக்கி, காலை மாலை கொடுக்க, குணமாகும்.

7. சுரம்.

குணம்:—உடம்பில் அதிக சூட்டுடன் நாக்கு வறண்டும், தேகமெல்லாம் மிளகுப் பிரமாணம் கொப்புளங்க ளுண்டாகியும், நீர் மஞ்சள் நிறமுள்ளதாயும், கொதித்துப் போயுமிருக்கும்.

மருந்து:—சந்தணம், நெல்லிக்காய், சீரகம், கோஷ்டம், வெட்டிவேர், விளாமிச்சவேர் இவை 4-தோலா எடை, மான்கொம்பு, அவித்த தண்ணீரை விட்டரைத்து, கவளமாக்கி, காலை மாலை கொடுத்து வா, குணமாகும்.

8. சுரம்.

குணம்:—தீனியில் விருப்பமில்லாது, தேகத்தில் சூடு எழும்பி வாய் நாசி முதலிய துவாரங்களிலும், குளம்புச் சதையிலும், கொப்புளங்களுண்டாகும். அவை 2-தினங்களுக்கிடையில் புண்ணுகி அவைகளிலிருந்து நீர் வடிந்தும், புழுக்கள் வெளிப்பட்டும் வீங்கியும், சூடு தணியாமலும் வாதைப்படும்.

மருந்து:—சித்தரத்தை, திப்பிலி, மிளகு, கூடம், சேங்கொட்டை, பொட்டிலுப்பு, மல்லி, வேப்பந்தளிர், இவைகளை வகைக்கு 2-தோலா வீதம் பழச்சாற்றை விட்டரைத்து, கருவோடு ஊறவைத்த தண்ணீரில் *நல்லெண்ணெயில் போட்டுக் கலக்கி, உள்ளுக்குக் கொடுத்து, கடுக்காய்ப்பிஞ்சு, கூடம், வசம்பு, துத்தம், துரிசு இவைகளைத் தூள் செய்து, தேங்காயெண்ணெயில் போட்டுக் காய்ச்சி, புண்களுக்குப் பூசிவா, குணமாகும். துவக்கத்தில் 2-ரூபாய் எடை சிவதை வேரைத்தூள் செய்து சிற்றாமணக்கெண்ணெயில் கலந்து

கொடுத்து, பேதி செய்யவேண்டும். காலையில் மட்டும் உள்ளுக்குக் கொடுக்க, குணமாகும்.

### 9. சுரம்.

குணம்:—சுரம் காணும்போது மயிர்சிலிர்த்தும், குளிரடைந்தும், நடுக்கமுண்டாகியும், முறை சுரமாகவும் வரும்.

மருந்து:—பற்பாடகம், கோஷ்டம், திப்பிலி, மிளகு, நிம்பப்பட்டை இவைகளை வகைக்கு 4-தோலா வீதம் சாராயம் விட்டரைத்து, கவளமாக்கி, காலை மாலை கொடுக்க, குணமாகும்.

### 10. சுரம்.

குணம்:—கன்று ஈன்றகாலத்தில், கருப்பப் பை புண்படுவதால் சுரமுண்டாகி, வியர்வை அதிகரித்து, நாக்கு வறண்டு, சலம் கொதித்து, சூதகம் கட்டுப்பட்டு, இரை யெடுக்காமல், தூக்கமாய் நிற்கும்.

மருந்து:—இந்துப்பு, வெங்காரம், கடுகுரோகிணி, கருஞ்சீரகம், வால் மிளகு இவைகளை வகைக்கு 3-தோலா வீதம் எடுத்து, கும்மட்டிக்காய்ச் சாற்றை விட்டரைத்து, கவளமாக்கி, காலை மாலை வென்னீரில் கொடுத்து வா, குணமாகும்.

### 11. பேதி.

குணம்:—சுரம் கண்ட குதிரை மாடு முதலியவைகளுக்குப் பேதியாக வேண்டுமானால்;

மருந்து:—கடுக்காய், கடுகுரோகிணி, கருஞ்சீரகம், குமரிச்சோறு இவைகளை வகைக்கு 1-தோலா வீதம் அரைத்து, $\frac{1}{4}$-படி சிற்றுமணக் கெண்ணெயில் கலந்து கொடுக்க, பேதியாகும்.

### 12. வயிற்றுப்போக்கு.

குணம்:—சுரம் கண்ட குதிரை, மாடுகளுக்கு வயிற்றால் அதிகம் போய்க் கொண்டிருக்கு மானால்;

மருந்து:—முன் சுரங்களுக்குச் சொல்லப்பட்டிருக்கின்ற மருந்தையும் கொடுத்து, அதனுடன் இடைக்கிடை மாசக்காய், மாதுளம்பழத் தோல், வெந்தயம், சீரகம் இவைகளை 3-தோலா வீதம் எடுத்து, வென்னீர் விட்டரைத்து, கவளமாக்கி, கொடுத்து வா, குணமாகும்.

பத்தியம்:—கொள், கடலை, உளுந்து முதலியவைகளை நீக்கி, சுரம் தணியும்

வரை சம்பா அரிசிக் கஞ்சியும், காய்ந்த புல்லும், கொடுத்து வெந்நீர் காட்டவும்.

குறிப்பு:—மேற்சொன்ன நோய்களில் சில தொற்றுநோய்களா யிருப்பதால், நோய்கண்ட மாடு குதிரைகளைத் தனியிடத்தில் வைத்துப் பாது காக்க வேண்டியது அவசியம்.

## 13. கோடிறு ஜன்னிக் குறிகள்.

குணம்:—சாதாரணமாய் முறைப்பாயிருப்பது மாத்திரம் முதலில் தெரியும். மறுநாள் இஃது அதிகமாகும். வழக்கமாய் 3-ஆம் நாள் உடம்பு முழுவதும் தசைகள் அதிக பிகுவாயிருக்கும். நரம்புக ளெல்லாம் அதிகமாய் வலிக்கும். வால் தூக்கிக் கொண்டிருக்கும். தலை நிமிர்ந்து இருக்கும். மூக்கு ஏறிடும். கண்ணுக்கு மேலே பிதுங்கி இருக்கும். வாய் மூடிக் கொள்ளும். மாடு கவலையாயிருப் பதைப் பார்க்க வருத்தமா யிருக்கும். எவனாவது கிட்ட வருகை யில் அதிக வேஷ்டை மூச்சு வேகமாய் வாங்கும். நாடி துடிக்கும். மலபந்த முண்டாம்.

## 14. காய்ச்சல்: குறியும், சிகித்சையும்.

குணம்:—உடம்பு அரட்டலாய்க் குளிர் நடுக்கங் கண்டு, பின்பு, அதிக வெப்பமாயிருப்பதே காய்ச்ச லெனப்படும்.

குறிகள்:—முதலாவது நிலைமை பசி தீபனங்கெடல், கண்கள் பஞ்சு அடைந் தாற் போல மந்தமான பார்வை, அடிக்கடி கொட்டாவி விடுதல், அலுப்பினாலே செய்வது போல் பின்னங்காலி லொன்றை ஒவ் வொருவேளை நீட்ட முயற்சி செய்வது தவிர, நகர இஷ்டமில் லாமை, மயிர் சிலிர்த்துக் கொள்ளுதல், கொம்புகளும் காதுகளும், கால்களும் சில்லிட்டிருப்பது, உடம்பில் எங்கேயாவது முழுவது மாவது நடுக்குவது.

குணம்:—இரண்டாவது நிலைமை, நாடி படபடப்பு, கண்கள் மந்தம் நீங்கிப் பிரகாசமா யிருப்பது, உள் ஜவ்வுத் தோல்கள் சிவந்திருப் பது, வாய் வறண்டு அழலாயிருப்பது, நாக்கு முட்போலிருப் பது, தாகம், மூச்சு, வேகம், கொஞ்சம் மலபந்தம், மூத்திரம் கொஞ்சம் சிவந்த நிறமாய்க் கொஞ்சம் கொஞ்சமாய்ப் பெய்தல்.

குணம்:—கடும் பத்தியம்:—பேதியாகும்படி மூசம்பா 1-அவுன்ஸ், $1\frac{11}{16}$- ரூபாயெடை, சுக்கு 1-அவுன்ஸ், முன்போல் இவைகளைக் கொதிக்

கற 3- ஆழாக்கு ஜலத்தில் கரைத்து, ஆறவைத்து, வார்க்க வேண்டும். இதற்குப் பின்பு, கர்ப்பூரம், 2-திராம் $\frac{11}{16}$-ரூபாயெடை, பொட்டிலுப்பு 2-திராம், கிரியாத்துக்குச்சு, நிலவேம்பு 2-திராம், இவைகளை அரைத்து, உண்டை செய்து, ஒரு நாளைக்கு 3-தடவை போடவும்.

# XIII. எலும்பு முறிவுக் காயங்கள்.

### 1. காலொடிதல்.

மருந்து:—ஆவின்பால், நல்லெண்ணெய், கரிசலாங்கண்ணிச்சாறு இவைகளை வகைக்கு $\frac{3}{4}$-படி வீதம் கலந்து 3-நாளைக்குக் கொடுக்கவும். குணமாகும்.

### 2. வழுக்கிவிழுதல்.

மருந்து:—நுணாயிலையைப் பொடி செய்து தூவ, புண்ணாறும்.

### 3. அஞ்சிப்புண்.

மருந்து:—மொச்சைக்கொட்டையை மாவாக்கி, புண் நிறையத் தூவி வர, 6-மாதம் சென்று, புண் ஆனாலும் ஆறிப்போம். (இது நூதன முறை. கைகண்டது. வெளியிடாதே.)

### 4. புழுத்தல்.

மருந்து:—முசுமுசுக்கையிலையைப் பறித்து, மறு பக்கத்துக் குளம்படியில் வைக்கவும். புழுக்கள் சரிந்து முற்றிலும் விழுந்து கொட்டிப் போய் புண்ணும் ஆறிப்போம்.

### 5. கொம்பொடிந்த குறும்புண்.

மருந்து:—ஒட்டடையும் சுண்ணாம்பும் கலந்து, புண்ணின் மேல் தாராளமாய்ப் பூசி, அதன் மேல் தலைமயிரால் அடர்த்தியாகச் சுற்றி, பழைய துணியால் காற்று நுழையாமல் கட்டி, 1-மாதம் வரை அப்படியே வைக்கவும். (இந்தக் கட்டுடன் தானே சுற்றி ஆறி உலர்ந்து பழையகொம்பு போல் ஆகிவிடும்.)

### 6. மாட்டுப்புண்.

மருந்து:—கல்யாணமுருங்கைக் கொழுந்தையும், வசம்பையும் அரைத்து புண்ணின்மேல் தடவி, வேப்பெண்ணெயையாவது, சந்தனத்தை யாவது மேலே தடவி, கொசுகு முதலியவைகள் கடிக்காமலும், மாடு நக்காமலும் இருந்தால் சுத்தமாய் உலர்ந்துபோம்.

### 7. கழுத்துவீக்கம்.

மருந்து:—புழுங்கலரிசியை அரைத்து, தண்ணீர் விட்டுக் குழப்பி, புளிக்க வைத்து, கழுத்து வீக்கத்தின்மேல் தடவி, வண்டியில் கட்டி வரவும். சொஸ்தமாகும்.

### 8. கழுத்துப் பிடிப்பு.

மருந்து:—எருக்கன் பாலுடன் நல்லெண்ணெய் அல்லது விளக்கெண்ணெயைச் சேர்த்து, பிடரி முதல் முதுகு வரையில் தடவி, இரு பக்கமும் கழுத்து நீங்கலாக மற்ற விடங்களில்,

. ═══ . ═══ . இந்த மாதிரி சூடு போடவும். குணமாகும்.

### 9. கழுத்து வீக்கம்.

மருந்து:—கம்பு, கல்லுப்பு, மஞ்சள் இவைகளை யரைத்து, கொதிக்கவைத்து வீக்கத்தில் தடவ, தீரும்.

வேறுவிதம்:—பக்குவம்:—எருக்கன் பாலை நல்லெண்ணெயில் கலந்து, ஒரு நூல் சாட்டில் நனைத்து, வீக்கத்திலிருந்து தாடி வரையில் நூல் சாடு போட, குணமாகும்.

### 10. புழு.

மருந்து:—கருவஇலை, உப்பு இவற்றை நன்றாக அரைத்து, சுண்ணாம்பும் கூட்டிக் குழப்பி, புண்ணில் பூச, பூச்சி விழும். கைகண்டமுறை.

### 11. சிரசு ரோகம்.

குணம்:—குதிரை, மாடு இவை இடைவிடாது தலையை ஆட்டியும் கிட்டே

யுள்ள பொருள்களில் தலையை மோதியும், உரைந்தும், தலையிடியால் வாதைப்படுவது போல் தோன்றும்.

மருந்து:—உத்தாமணிச்சாற்றில் எருச்சாம்பல் கூட்டி, நெற்றியிலும் காதுகளுக்கிடையிலும் பற்றுப்போட்டு வர, சுகமாகும். கடுக்காய், கடுகுரோகிணி, கருஞ்சீரகம், காயம் இவைகளை வகைக்கு 2-தோலாவீதம் விளக்கெண்ணெய் விட்டரைத்து, 2-வேளையும் கொடுக்க, குணமாகும்.

## 12. முறிவு, காயம், புண் முதலியன.

குணம்:—குதிரை, மாடு ஓடும்போது, விழுந்து தேகத்தில் புண்கள் உண்டாகி, வருத்தப்பட்டால்;

மருந்து:—சூடம், சாராயம் இவற்றைச்சேர்த்து (நோயுள்ள இடம் நல்லதாக உருகி,) பிறகு மஞ்சள், சுக்கு, நிம்பஇலை, துத்தம், கொற்றான் இவைகளை யரைத்து, சிற்றாமணக்கெண்ணெயில் கலந்து, கொதிக்க வைத்துப் போட்டுவர, குணமாகும்.

## 13. எலும்பு முறிவு.

குணம்:—கீழே விழுவதனால் அவயவங்களில் எலும்புகள் ஏதேனும் சேதப்பட்டு இருப்பதாகத் தெரிந்தால்;

மருந்து:—அந்த எலும்பை இழுத்து சரிநிலையில் வைத்துக் கொண்டு, கோழி, முட்டை வெண்கரு, உளுந்து, வெளுத்த பிசின், கரியபோளம், சூடம் இவைகளை நன்றாக அரைத்து, பாலைப் பட்டைச்சாற்றை விட்டு, பிழிந்து கொதிக்க வைத்து, இதனுடன் கலந்து, பற்றுப் போட்டு, முறிந்த எலும்பை அசையாமல் மட்டையை வைத்துக் கட்டி வைக்கவேண்டும்.

## 14. வீக்கம்.

குணம்:—நோய்ப்பெட்டியிடம் அதிகமாக வீங்கி நோயதிகரித்தால்;

மருந்து:—குறுக்கன்மாவு, உளுத்தமாவு, மஞ்சத்தூள், தேங்காய்ப்பால், முட்டை, துத்தம், கொற்றான் இவைகளைக் கலந்து, களிகிண்டி, வீக்கத்தில் ஆமணக்கெண்ணெயைப் பூசி, மேற்படி களியை வைத்துக் கட்டிவர, குணமாகும்.

வேறுவிதம்:—மருந்து:—துத்தம், கொற்றான், * ஊமத்தையிலை இவற்றைச் சிறு நீர் விட்டு, இடித்துப் பிழிந்து, அதில் கரியபோளம், வெங்

காரம், புளி, உப்பு, மஞ்சள் இவைகளைத் தூள் செய்து போட்டு, கொதிக்க வைத்துப் பூசிவர, குணமாகும்.

## 15. ரத்தக்காயம்.

குணம்:—விழுதல் முதலியவற்றால் காயம் உண்டாகி இரத்தம் ஓடுமாகில்;
மருந்து:—இரத்தத்தில் சீனக்காரத் தண்ணீர் விடவும். * நரம்பை யிறுக்கிக் கட்டுவதால், தடைபண்ணி, வெங்காரம், வசம்பு, வேர்க்கொம்பு, ஆகாசத்தூள், நிம்பப்பழுப்பு, இவைகளை யரைத்து, காயத்தில் கட்டி விட, குணமாகும்.

## 16. புண்காயம்.

குணம்:—காயத்தினா லுண்டான புண் பெருத்தும், அழுக்குப் பிடித்தும், நாற்ற முண்டாகியும் இருக்கும்

மருந்து:—இலுப்பைப் பிண்ணாக்கையும், அரிசிமாவையும் கலந்து, களியாக்கி, கட்டி, புளியிலைத்தண்ணீரால் கழுவி, வேம்பாடம் பட்டை, பச்சைத்துத்தம், துருசு, கல்நார், கல்மதம் இவைகளை வகைக்கு 4—தோலா வீதம் எடுத்து, $\frac{1}{4}$—படி தேங்காயெண்ணெயில் கலந்து, காய்ச்சி புண்களுக்குப்போட்டு வா, குணமாகும்.

## 17. கொம்பொடிந்து இரத்தம் வருதல்.

மருந்து:—சீனக்காரம், கம்பளி, சுட்டசாம்பல், ஆகாசத்தூள், வெங்காரம் இவைகளுடன் முருங்கையிலைச் சாறு, நல்லெண்ணெய் இவற்றைக் கலந்து, கொம்புகுள் செலுத்தி, திருகு, கள்ளிச்சாறு, * சாராயம் இவற்றில், வெள்ளைத் துணியை நனைத்து, கொம்பை இறுக்கி. நன்றாகச் சுற்றி விட, குணமாகும்.

## 18. நுகப்புண்.

குணம்:—மாடுகளுக்கு நுகம் உரைந்து, கழுத்தில் புண் உண்டாம்;
மருந்து:—பூநிலம், துத்தம், துரிசு, வசம்பு, வேம்பாடம்பட்டை இவைகளை வேப்பெண்ணெயில் போட்டுக்காய்ச்சிப் போட்டு வா, குணமாகும்.

வேறுவிதம்:—குதிரைக்கு மருந்து:—வார் பட்டு வெட்டின புண்களுக்கு, முதலில் சொன்ன எண்ணெயில் தோல், சுட்டசாம்பல், இவற்றை, தேங்காயெண்ணெயுடன் கலந்து, கொதிக்க வைத்துப் போட்டு வா, சுகமாகும். மேல் சொன்ன எண்ணெயையும் போட்டு வா, குணமாகும்.

பத்தியம்.—தண்ணீர்ப் பதார்த்தங்களைக் குறைத்து, உளுந்து, கொள், கடலை முதலியவைகளை வழக்கம்போல் கொடுத்து வரவேண்டும்.

## 19. கல்லெறிப்புண்.

குணம்:—........லாம் வீங்கும். தட்டுக் கெட்டு நடக்கும்.

மருந்து:—கிலுகிலுப்பை கொண்டு காடி வார்த்தரைத்து, காடியிலே கரைத்து ஊற்றவும். இதற்குச் சூடு தேவையில்லை.

## 20. காலொடிதல்.

மருந்து:—பசுவின் பால், நல்லெண்ணெய், கரிசிலாங்கண்ணிச்சாறு இவைகளை வகைக்கு $\frac{3}{4}$-படி கொண்டு வந்து, ஒன்றாய்க் கலந்து, 3-நாளைக்குக் கொடுக்க, சொஸ்தமாகும்.

## 21. வழுக்கி விழுதல்.

மருந்து:—ஊனுணியிலையைப் பொடி செய்து தூவ, புண் ஆறிப்போம்.

## 22. அஞ்சிப்புண்.

மருந்து:—எட்டு மொச்சைக்கொட்டையை எடுத்துப் பொடி செய்து புண்ணிறம்பக் கூறுகொள்ள 6-மாதப் புண்ணும் ஆறிச் சொஸ்தமாகும்.

## 23. புழு.

மருந்து:—7-முசுமுசுக்கையிலையைப் பறித்து, மார்ப்பகத்துக்குக் குட்டியில் வைக்க, புழு சரியும்.

## 24. கொம்பு ஒடிந்த குறும்புண்.

மருந்து:—ஒட்டடையையும் சுண்ணும்பையுங் கலுவமாடி புண்ணின்மேல் தளமாய்ப் பூசியதன் பேரில், தலைமயிரினால் அடர்த்தியாய்ச் சுற்றி, பழந்துணியால் காற்று நுழையாமற் சுற்றிக் கட்ட, ஒரு மாதத்துக்கு மேல் அந்த கட்டோடே ஆறி உலர்ந்து பழைய கொம்பு போலாகும்.

## 25. புண்.

மருந்து:—கலியாணமுருங்கைக் கொழுந்தையும், வசம்பையும் கூட்டியரைத்து, புண்மேல் தடவி, வேப்பெண்ணெயையாவது, சந்தணம்

அத்தரையாவது தடவ, ஈக்கடி, கொசுக்கடி இல்லாமலும், மாடு நக்காமலும் மிருந்தால், சுத்தமாய் ஆறி, உலர்ந்து விடும்.

# XVI. பாம்பு முதலிய விஷஜந்துக்களின் கடி.

### 1. விரியன்கடி.

குணம்:—உடம்பெல்லாம் வீங்கும்.

மருந்து:—கிலுகிலுப்பையிலையை வேகவைத்துக் காடியில் கலந்து கொடுத்த பின்பு, விலரப் பக்கத்தில்  இந்த மாதிரி சுட, குணமாகும.

### 2. விரியன்கடி.

குணம்:—உடல் வீங்கும்.

மருந்து:—இலுப்பையிலையை அரைத்து, காடியில் கலந்து கொடுத்து, இரண்டு பக்கத்திலும்  இந்த மாதிரி சுடவும். குணமாகும்.

### 3. அரணை.

மருந்து:—தண்ணீர் ஓதி அதன் மேல் ஊற்றி வேப்பிலையால் அடிக்கவும்., உடனே அவுரிவேர் அரைத்துக் கலக்கி, மேலே யெல்லாம் பூச குணம்.

### 4. விஷம் தீண்டுதல்.

குணம்:—வாயில் நீர் வடியும். செவி மயிர் கழியும்.

மருந்து:—முருங்கையிலை, பாலையிலை, வசம்பு, மிளகு, பூண்டு இவைகளை நறுக்கி, சிறுநீர் விட்டுக் கசக்கி, நாசியிலும் செவியிலும் பிழியவும். மாடு எழுந்திருக்கும்.

வேறுவிதம்:—பக்குவம்:—கொல்லம் கோவைக்கிழங்கும் கிரணைக்கிழங்கும் நேக அரைத்து, குடத்தில் வைத்துக்கொண்டு, உள்ளுக்குப் புகட்டவும். விஷம் தீரும்.

## 5. சர்ப்பம் முதலிய ஜந்துக்களால் உண்டாகும் ரோகங்கள்.

குணம்:—குதிரை, மாடு இவைகளின் நாக்குத் தடித்தும், கண்ணிமைகளும் உடம்பும் வீங்கியும், விரியன் பாம்பு கடித்த குணம் கண்டால்;

மருந்து:—வெள்ளைச்சாரணைவேரைப் பாலிலரைத்துக் கண்ணிற்குள் விட்டு, முருங்கையிலையைக் கசக்கி கடிவாயில் விட்டு, இலுப்பையிலையை அரைத்து, தோடங்காயளவு பழந்தண்ணீரில் கலக்கிக் கொடுக்க, குணமாகும்.

## 6. இரத்தவிரியன்.

குணம்:—நாலு கால்களும் பதறியும், கண்கள் இரத்தம் சிவந்தும், இரத்த விரியன் கடித்த குணமிருந்தால்;

மருந்து:—கோவையிலைச் சாற்றை வீக்கத்திற்கும் கடிவாய்க்கும் பூசி, $\frac{1}{2}$-படி பாகயிலைச்சாற்றில் கொடுத்து வர, குணமாகும். கைகண்ட முறை.

## 7. நாகப்பாம்புக்கடி.

குணம்:—வாயிலிருந்து வெண்நுரை தள்ளியும், வியர்வை மிகுந்தும், கண் புருவ மயிர்கள் இலேசாகப் பிடுங்கப்பட்டும், நாகப்பாம்பு கடித்த குணமிருந்தால்;

மருந்து:—மிளகு, வேர்க்கொம்பு, கடுகு, இந்துப்பு, வெற்றிலை, உள்ளி, வசம்பு, தும்பையிலை, துளசியிலை இவைகளைச் சிறுநீர் விட்டரைத்து, நசியம்செய்து, கடிவாயிலும் பூசி, பிறகு தேத்தான் பழச்சாரால், எருக்கன் பழுப்பு, குருந்தஇலை, சாரணைவேர், மிளகு, உத்தாமணிவேர், காயம் இவை வகைக்கு 8-தோலா வீதம் எடுத்து அரைத்துக் கொடுக்க, குணமாகும். சுத்திசெய்த 12-நெல் விடை வாளத்தைப் பாலிலரைத்து கலக்கிக் கொடுத்து விரேசனம் செய்துகொள்ள வேண்டியது.

### 8. படையன்பாம்புக்கடி.

குணம்:—உடல் வீங்கியும், அனல் கொண்டு மிருந்து படையன்பாம்பு கடித்த குணமிருந்தால்;

மருந்து:—$\frac{1}{2}$-படி குறிஞ்சியிலைச்சாற்றை ஆவின் பாலில் கலந்து, உள்ளுக்குக் கொடுத்து, மேற்படி சாற்றை உடம்பிற்குப் பூசி வர, குணமாகும்.

### 9, சாரைப்பாம்புக்கடி.

குணம்:—கால்கள் நடுங்கியும், கண்களிரண்டும் தெரியாமலிருந்தும் சாரைப் பாம்பு கடித்த குணமிருந்தால்;

மருந்து:—நெல்லிப்பட்டை, நறுவலிப்பட்டை இவைகளை $\frac{1}{4}$-சாத்தல் வீதம் சிறுநீரிலரைத்து, கலக்கிக் கொடுத்து வர, குணமாகும்.

### 10. புலிமுகச்சிலந்திக்கடி.

குணம்:—கடிவாய் வீங்கியும், மூக்கடைத்தும், வாய்ப்புண் உண்டாகியும் புலி முகச்சிலந்தி கடித்த குணமுடையதாயு மிருந்தால்;

மருந்து:—இலுப்பைபிண்ணாக்கை காட்டெருமைப் பால் விட்டு அரைத்து, கடிவாயில் பூசி, அதற்குமேலே கத்திரிக்காயைச் சுட்டுக் கட்டி விட, குணமாகும்.

### 11. நட்டுவாக்களிக்கடி.

குணம்:—கடிவாய் தடித்தும், வியர்வை உண்டாகியும், நட்டுவாக்காளி கடித்த குணமிருந்தால்;

மருந்து:—கோவையிலையைச் சிறுநீர் விட்டரைத்து, பெரியதோடங்காயளவு உள்ளுக்குக் கொடுத்து, கடிவாயில் பூசிவர, குணமாகும்.

### 12. தேள்கடி.

குணம்:—நெறி கட்டியும், வீக்கம், வியர்வை யுண்டாகியும். தேள் கடித்த குணமுடையதாயு மிருந்தால்;

மருந்து:—கோழியின் காய்ந்த மலத்தை நெருப்பில்போட்டு, புகையைக் கடிவாயில்காட்டி, கடிவாயில் கத்திரிக்காயைச் சுட்டு வைத்துக் கட்டி, மேற்படி கோழியின் 1-தோலா எடை மலத்தை வெற்றிலையில் வைத்து, உள்ளுக்குக் கொடுக்க, குணமாகும்.

## 13. விஷநாய்க்கடி.

குணம்:—கடிவாயி லிருந்து கருரத்தம் வழிந்து, மூர்ச்சை யுண்டாகி, வாயால் நீர் வடிந்து, காது மந்தப்பட்டு, விஷநாய் கடித்த குண மிருந்தால்;

மருந்து:—கறியுப்பும், கற்றாழையும், தைவேளையும் சம எடை இடித்து, கடி வாயில் கட்டி, ஆலம்படடை, வேப்பிலே, பேயத்திவேர் இவை களைச் சிறுநீரி லரைத்து, வீக்கத்தில் பூசிவர, சுகமாகும். 10-தோலா கரியபவிளத்தை வென்னீரில் கலக்கிக் கொடுத்து' பேதிசெய்து கொள்ளவேண்டும். ஊமத்தஇலே, நிம்பக்கொட்டை, கருஞ்சீரகம் இவைகளை நெருப்பில் போட்டு, எரித்து, அந்தப் புகையை நாசியில் விட, குணமாகும்.

## 14. குரங்குக்கடி.

குணம்:—கடித்த வாய் வீங்கியும், மயிர் சிலிர்த்தும், கடிவாயால் நீரோடி யும், குரங்கு கடித்த குணமிருந்தால்;

மருந்து:—விழுதியிலேச்சாறு, வேர்க்கொம்பு இவற்றை அரைத்து, உடம் பெங்கும் பூசி, உள்ளுக்கு $\frac{1}{4}$—படி சிறுநீரில் 4-தோலா எடை மிள கைச் சூரணம் செய்து கொடுக்க, குணமாகும்.

## 15. விரியன்கடி.

குணம்:—உடம்பெல்லாம் வீங்கும்; மயிர் சிலிர்க்கும்.

மருந்து:—கிலுகிலுப்பையை யிடித்துக் காடியிலே கரைத்து ஊற்றவும். இரண்டு விலாவிலும்



இந்த மாதிரி சூடு போடவும். குணமாகும்.

## 16. விஷகடி.

குணம்:—சலமும் சாணியும் ரத்தமாய்க் கழியும். செவி தளர்ந்து நிற்கும்.

மருந்து:—எருக்கன் கொழுந்தும், கிலுகிலுப்பையும் இடித்து, உள்ளுக்குப் போடவும்.



இந்த மாதிரி சூடு போட வும். குணமாகும்.

### 17. நஞ்சுதின்றமாடு.

குணம்:—மேயாமல் நிற்கும். வயிறு உப்பும். வயிறு போகும். வாயில் தண்ணீர் விழும்.

மருந்து:—எள், தேங்காய், பனைவெல்லம் இவற்றை இடித்து, உள்ளுக்குப் போடவும். இதற்குச் சூடில்லை.

### 18. விரியன்கடி.

குணம்:—உடம்பெல்லாம் வீங்கும்.

மருந்து:—கிலுகிலுப்பையை இடித்து, காடியில் கலக்கிப் போடவும். இரண்டு விலாவிலும்



இந்த

மாதிரி சூடு போடவும்.

### 19. தோளரிக்கும் மந்திரமும், மருந்தும்.

மருந்து:—எண்ணெயும் எருக்கன் பாலும் கலந்து சூரிய உதயத்துக்கு முன்னே இடது முன்னங்காலிலும் முழங்காலுக்கு மேலும் இட வேண்டும். பின்பு, இதை ஓத வேண்டும்.

மந்திரம்:—எகதன் வாழ்க. எகதானுசாரி வாழ்க. குருமுருக்கைப் பற்றிய வெப்படைப்பன், நஞ்சுபற்றிய வடைப்பன், எரமாலைப்பற்றிய வடைப்பன், கருங்குகையிற் பற்றிய வடைப்பன், கார் வாயிற் பற்றிய வடைப்பன், சற்றே இடது காலிற் போரந்திறங்கிப் போர்ந்து முஞ்சுப் போகப் போக சுவாகா.

இப்படி மந்திரித்தபின் சூட்டுக்கோலினாற் சுட வேண்டும்.

### 20. விஷந்தீண்டல்.

மந்திரம்:—ஓம் பாண்டோணி, சடைநீராணி, கருநீராணி, நாயகநீராணி, சீத வெக்கை, அழல்வெக்கை, எட்டுவிரியன், எழுபதும் கத்தடி வீங்குவிரியன், சீத மண்டலி, ஐந்தலைச்சுருட்டை, செய்யான், செந்தேள், சிறுபாம்பு, அறப்புள்ளி, ஐந்தலைநாகம், அடுத்து மிதித்தான், அது கேட்டு, யானும் வந்து பாராயிருந்தேன், கண்டனம் பறை கடற்கீழே குந்தாரளையே குதிகுதியே கண்ணே குதி.

மருந்து:—செத்த பசுமாட்டின் புற்றில் சுக்கு, மிளகு, கள்ளிப்பால் இவற்றை உத்தாமணிச் சாற்றி லரைத்துக் கூட்டி, உண்டை செய்து, கண்ணி விடவேண்டும். பின்பு அழிஞ்சில் விதையில் காடி வார்த்தரைத்துப் புகட்ட, விஷந் தீரும்.

### 21. விரியன்கடி.

குணம்:—உடம்பு வீங்கும்.

மருந்து:—இலுப்பையிலையை அரைத்துக் காடியில் கலந்து கொடுத்து, இரண்டு பக்கமும் சுட, சொஸ்தமாகும்.

### 22. சர்வவிஷத்திற்கும்.

மருந்து:—ரசம் வி–3, கந்தகம் வி–3, வச்சனாவி வி-$2\frac{1}{2}$, கருநாவி வி-2, பச்சை நாவி வி-3, வெண்ணாவி வி-5, வெள்ளைப் பாஷாணம் பலம்-$2\frac{1}{8}$, தொட்டிப்பஷாணம் பலம்-$3\frac{1}{4}$, எலிப்பாஷாணம் பலம்-$3\frac{1}{2}$-, குதிரைப்பாஷாணம் வி-$2\frac{1}{2}$, பரங்கிப்பாஷாணம் பலம்-$2\frac{1}{4}$, மனோசிலை வி-3, நெருவிசம் வி-$3\frac{1}{2}$, இருவி வி–$2\frac{1}{2}$, கெவுரி வி–3, சினசாரம் வி-$1\frac{1}{4}$, துரு வி-1, சாதிலிங்கம் வி-3, மடல்காரம் வி-2, சமுத்திராபனம் பலம்-6, நவச்சாரம் பலம்-$2\frac{1}{2}$, வெச்சாரம் வி-$2\frac{1}{2}$, திப்பிலி வி-9, மிளகு 11-வி, வசம்பு வி-30, உள்ளி வி-15, சுக்கு வி-9, பெருங்காயம் பலம்-4, நேர்வாளம் வி-27, எட்டி விதை 8, நெல்வெட்டி வி-$6\frac{1}{8}$, ஓமம் வி-10, வெங்காரம் வி-2, சித்திரமூலம் வி-6, கருஞ்சீரகம் வி-5, இந்துப்பு வி-4, நல்லெண்ணெய் படி-10, மூஞ்சுறு 1, கருங்கோழி, பாலக்கிடை, திலப்பால வி-1, இரா மருந்து நாலும் புதைத்து 15-நாள் சென்று எடுத்து வந்து, கருஞ் சீரகம் $\frac{1}{8}$-பலம், வால்மிளகு $\frac{1}{8}$-பலம், திப்பிலி 10-பலம், உள்ளிப்பூ $\frac{1}{8}$-பலம், கத்தரி மஞ்சள் 10-பலம், ஏலரிசி 10-பலம், கிராம்பு $\frac{1}{8}$-பலம், சாதிக்காய் $\frac{1}{8}$-பலம், இலவங்கப்பட்டை $\frac{1}{8}$-பலம் இவை யெல்லாவற்றையும் பொடி செய்து கொண்டு, புதையலு மெடுத்து, இருவகையு மொன்றாய்ப் போட்டு, எருக்கிலைப் பூச்சாற்றை விட்டு (இரண்டும் விட்டு)க் கிளறும்போது, வில்லைப்பூ விரைதொடு நீங்க லாக மத்தது கூடப் போடவும். கொட்டான், மருக்காரைவேர் 2, வாய்கரிப்பிரண்டை, வேப்பிலை, தைவேளை, கோழிக்குடல், சமூலமும் காட்டு மருந்து கூடத் துவைத்து, அந்த உருண்டையில் மருந்து கண்டால், அதனுடனே தேத்தான் விதையளவு அரைத்திட்டம் கூட்டி, கவாளமாய்ப் போடவும். இஃது எடுத்து மாட்டிற்கு மிளகு $\frac{1}{8}$-பலம், உள்ளி $\frac{1}{4}$-பலம், திப்பிலி $\frac{1}{8}$-பலம், வசம்பு $\frac{1}{4}$-பலம், தில்லம்பால் $\frac{1}{8}$-வீ, காட்டுமருந்து வகை, வட்டைக் கிலுப்பைத் தண்டு பிரண்டை, மூக்காட்டை, வட்டசாரணை,

தைவேளை, ஆடுதீண்டாப்பாளை, சொரி பூ 1, பச்சிலை இவ்வளவையும் பனங்காயத்தனையே ஸர்த்துக் கடை மருந்தெல்லாம் அரைத்து, சோரியைப் போட்டு, மூவகையும் ஒன்றாய் ரேகித்துப் பெரு மாட்டுக்கு 4-கவாளம் போடவும். அரை மாட்டுக்கு 2-கவளாம் போடவும். காளை மாட்டுக்கு 1-கவாளம் போடவும். காலு மாட்டுக்கு $\frac{1}{2}$-கவாளம் போடவும். மருந்து கொடுத்த மறுநாள் சாயங்காலம் வென்னீரைக் குளிர ஆற்றி விட்டு, $1\frac{1}{2}$-மரக்கால் தண்ணீர் வைக்கவும். 3-ம் நாள் பழங்கூரை வைக்கோல் போடவும்.

---

# XV· கலம்பகமான வியாதிகள்.

### 1. உறுப்புத்தின்றல்.

மருந்து:—பிடங்குநாறிப்பாலைக் கொண்டு வந்து, அவைத்துப், பிசைந்து, சாறு எடுத்து, காடியில் கலந்து கொடுக்கவும்.

### 2. சாசாமருந்து.

பலவீனத்தால் இளைத்திருந்தாலும், தீனி பிடித்துத் தின்னும்

நாளுக்கு நாள் பார்வை யில்லாம விருந்தாலும் புஷ்டியா யிருக்கும்படியான முறை.

மருந்து:—மணகத்தை, அரிசிமாவு, உளுத்தமாவு இவை வகைக்கு 2-படி, பனங்கருப்பக் கட்டி 12-பலம், வெங்காயம் 12-பலம் இவைகளில் வெங்காயத்தைத் தோல் உரித்துப் பொடியாக அரிந்து, மேல் கண்ட தினுசுகளில் கலந்து, 10-நெற்றுத் தேங்காய்ப் பால் பிழிந்து, பிசைந்து, தேங்காய்ப் பிரமாணம் உருட்டி, உள்ளுக்குப் புகட்டிக் கொண்டு வாவும். தேகம் கல்போல் இறுகிப் புஷ்டியாகும்.

வேறுவிதம்—மருந்து:—ஆதிவாரம் தோறும் ஆழ்ந்த நீரில் மாட்டை நீச்சலடித்து, சாணத்தைக் கரைத்து, சுமார் 1-படிப் பால் உள்ளுக்குக் கொடுக்கவும். இப்படி 12-முறை கொடுக்கவும். (கைகண்ட முறை).

### 3. குறுவெளி.

குணம்:—உடம்பெல்லாம் வெடிக்கும். நடக்காது. உடம்பு இளைக்கும்.

மருந்து:—அவுரியிலை, ஆவாரஇலை, பூண்டு, வசம்பு இவைகளை அரைத்து, கலந்து கரைத்து சேதமில்லாமல் உள்ளுக்குப் புகட்டவும்.

### 4. இலவமன்.

குணம்:—கண்களில் தண்ணீர் வடிந்துகொண்டிருக்கும்.

மருந்து:—வேப்பிலையை நேக வரைத்து, காடியில் கலந்து கொடுக்கவும். உடனே இடது விலாவில்  இந்த மாதிரி சுடவும். குணமாகும்.

### 5. உடற்சிலந்தி.

குணம்:—உடம்பு சுடும். தோல்புறம் வீங்கும்.

மருந்து:—கிரந்திநாயகம், வசம்பு இவைகளை நேக அரைத்து, காடியில் கலந்து புகட்டவும். குணம் காட்டும்.

### 6. நாறை.

குணம்:—இரண்டு கன்னமும் வீங்கும். மேயாமல் நிற்கும். நின்றது நின்றாற் போல் விழும்.

மருந்து:—இலுப்பைப் பிண்ணாக்கை அரைத்துக் கொடுத்து, இரண்டு கன்னங்களிலும்  இந்த மாதிரி சுடவும். குணமாகும்.

### 7. தலைநோய்.

குணம்:—கால்நடை தளர்ந்து நிற்கும். வயிறு இறையும். சாணி நாறும்.

மருந்து—வாழைக்கிழங்கு, ஆலம்விழுதின் துளி, கொழுந்து இவற்றை அரைத்துக் கொடுக்கவும். குணமாகும்.

## 8. விரிநோய்.

குணம்:— நாலு காலும் வீங்கும்.

மருந்து:—விழுதியிலைச் சாற்றையும், மோரையும் கலந்து கொடுத்து, வீக்கத்தின் மேல் இந்த மாதிரிச் சுடவும். குணமாகும்.

## 9. கருவடி.

குணம்:—மாடுகளுடன் நிற்கும். அப்பால் கும்பலை விட்டுத் திகைத்தாற்போல் தனியே போய் நிற்கும்.

மருந்து:—பருத்தியிலை, மிளகு இவைகளைச் சிறுமீன் கழுவின தண்ணீர் விட்டரைத்து, உருண்டை செய்து, எலுமிச்சங்காயளவு கொடுத்து, ஒரு பக்கத்து விலாவில் இந்த மாதிரி சுடவும். மற்றொரு பக்கத்து விலாவில் காட்டாரி போல் சுடவும். குணமாகும்.

## 10. குன்று.

குணம்:—குலைந்து நடுங்கி நிற்கும்.

மருந்து:—(மருந்து கிடையாது). இரண்டு விலாவிலும் இந்த மாதிரி சுடவும். குணமாகும்,

## 11. தள்ளத்தாமரை.

குணம்:—சீறும். காலையில் நடக்காது. மாறிப் பாயும். உடல் வற்றி வரும்.

மருந்து:—நாலு காலிலும் ** இந்த மாதிரி சுட்ட பின்பு, விளக்கெண்ணெய் $\frac{1}{8}$—படி அத்திச்சாறு 2-படி, 5-பலம் மேல்தோல் உரித்த பூண்டு இவற்றை நேக அரைத்து, முன் சாற்றில் கலக்கி, எண்ணெயில் கலக்கி, உள்ளுக்குக் கொடுக்க குணமாகும்.

### 12. படர்தாமரை.

குணம்:—உடம்பு கருகி, வற்றி வரும். வாய் நாறும்.

மருந்து:—தாமரையிலை, அமுக்குராஇலை இவைகளை இடித்து, பாலில் குழப்

பிக் கொடுத்த பின்பு, இந்த மாதிரி



சுடவும். குணமாகும்.

### 13. செருமல்.

குணம்:—பற்களைக் கடிக்கும். பலகாலமும் நீர் பரிக்கும்.

மருந்து:—வெள்ளருகை இடித்து, காடியில் கலந்து புகட்டவும். பின்பு, தொடைகளில் உ இந்த மாதிரி சுடவும். குணமாகும்.

### 14. கொல்லி.

குணம்:—கன்னத்தில் வீங்கும். மயிர் சிலிர்க்கும். நடக்காது.

மருந்து:—வீங்கின வீக்கத்தின்மேல் இந்த மாதிரி சுடவும். பின்பு, எருக்கன்வேர், சதுரக்கள்ளிவேர், புற்றுமண் இவைகளை நன்றாக அரைத்து, சுட்ட வீக்கத்தின் மேல் பூச, குணமாகும்.

### 15. சோளப்பயிர் தின்ற மாடு.

மருந்து:—மேனியிலை, நாயுருவியிலை, பழம்பாசி இவைகளை இடித்து, காடியில் கலந்து கொடுக்க, குணமாகும்.

### 16. செம்பு முகம்.

மருந்து:—பூவரசம்விதையை நேக அரைத்து, காடியில் கரைத்துக் கொடுக்க, குணமாகும்.

வேறுவிதம்:—மருந்து:—4-படி ஆவாரம் கொழுந்தை நேக அரைத்துக் கொடுக்க, சொஸ்தமாகும்.

### 17. புள்ளிருந்த மாடு.

குணம்:—கால் நடை யசந்து போகும். மாடு உட்காந்தல் போல் இருக்கும்.

மருந்து:—சிறுகொற்றானிலை, நாயுருவி, தழுதாழையிலை, சாணம் இவைகளை யிடித்து, 2-படி ஜலம் விட்டுக் காய்ச்சி, மேல் அடித்து, பக்கங்களில் இந்த மாதிரி சுட, குணமாகும்.

### 18. கொல்லி.

குணம்:—மாடு முன் பக்கமாக விழும். வாக்கை வாங்கும். குழகுழப்பாக விழும்.

மருந்து:—கழற்சிப்பருப்பு, அப்பைக்கிழங்கு இவற்றை அரைத்து, ஒரு நாழி கோமயத்தில் கரைத்துக் கொடுக்க, குணமாகும்.

### 19. ஒளிவெளி.

குணம்:—உடம்பெல்லாம் வெடிக்கும். உடல் வற்றி வரும். நடக்காது.

மருந்து:—அவுரியிலை, பூண்டு, வசம்பு, மாங்கொட்டைப்பருப்பு இவைகளை அரைத்து, ஆவின் பாலில் கலந்து கொடுக்க, குணமாகும்.

### 20. கொம்பி.

குணம்:—கட்டுத் தரையையே முட்டும். கட்டுத் தரையையே தேய்க்கும். வாய் மேய்ச்சல் மேயும்.

மருந்து:—நல்லெண்ணெய், பூண்டு, வசம்பு இவைகளை அரைத்து நசியம் செய்யவும்.

### 21. சீதக்குடல்.

குணம்:—மூக்கி லிருந்து தண்ணீர் வடியும். தலை நடுங்கும். கால் சாறிக் கொள்ளும்.

மருந்து:—(மருந்து கிடையாது) O O O இந்த மாதிரி சுடவும்.

தொட்டித் தண்ணீரில் 4-படி கோதுமைத் தவிட்டைப் போட்டுத் தண்ணீர் காட்ட, குணமாகும்.

## 22. நாறை.

குணம்:—இரண்டு கன்னமும் வீங்கும். மேயாமல் நிற்கும். நின்றாற்போல் விழுந்து கிடக்கும்.

மருந்து:—கிலுகிலுப்பையிலை, இலுப்பைப்பிண்ணாக்கு இவற்றை வெந்நீர் விட்டு, நேக அரைத்துப் புகட்டவும். பிறகு தாமதமில்லாமல்

 இந்த மாதிரி சுடவும். குணமாகும்.

## 23. கருநாய்.

குணம்:—தண்ணீர் புகுந்து நிற்கும்.

மருந்து:—புற்றுமண், உப்பு இவைகளை அரைத்து, உடம்பெல்லாம் பூசி, பின்பு, இரண்டு விலாவிலும் L. (ம). இந்த மாதிரி சூடு போட, குணமாகும்.

## 24. குடல்வியாதி.

குணம்:—விழும். எழுந்திருக்கும். வாயைத் திறந்து காட்டும். ஓடி உலாவித் திரியும்.

மருந்து:—உத்தாமணிச்சாறு, ஆவின்மோர் இவைகளை உப்புக் கலந்து, கரைத்துக் கொடுக்கவும். பின்பு இரண்டு விலாவிலும்

 இந்த மாதிரி சுட, சொஸ்தமாகும்.

வேறுவிதம்:—மருந்து:—அமுக்குறாவேர், ஊமத்தன்வேர், பூண்டு, வசம்பு இவைகளைச் சம எடை அரைத்து, நாழிக்காடியில் கரைத்துக் கொடுத்த பின்பு, இரண்டு, விலாவிலும் இந்த மாதிரி சுட, குணமாகும்.

## 25. நெஞ்சாமல்.

குணம்:—எந்நேரமும் மூக்கில் தண்ணீர் வடிந்துகொண்ருக்கும்.

மருந்து:—நெருப்பில் அகன்ற சட்டியை வைத்து, அதில் உழக்கு நெய்யை யும், இளம்பனைமட்டைச்சாற்றையும் விட்டு, வேது பிடித்து, பிறகு, கழுத்தில் இரண்டு புறமும் இந்த மாதிரி சுடவும். குணமாகும்.

## 26. கள்ளக்காமம்.

குணம்:—காலையில் நடக்காது. பாயும். உடல் வற்றி வரும்.

மருந்து:—$\frac{1}{4}$-படி விளக்கெண்ணெய், $\frac{1}{2}$-படி அத்தியிலைச்சாறு, பூண்டு, வசம்பு, சுக்கு இவை வகைக்கு 1-பலம் வீதம் அரைத்து, எண்ணெயில் கலந்து, முன்சாறும் சேர்த்து, உள்ளுக்குக் கொடுக்கவும்.

## 27. கோகந்நம்.

குணம்:—உடம்பில் குண்டு குண்டாக இருக்கும்.

மருந்து:—விஷ்ணுகிரந்திச் சாறு $\frac{1}{2}$-படி, மிளகு $\frac{3}{4}$-படி இவைகளை அரைத்து, நெய் $\frac{1}{2}$-படி, ஆவின் பால் $\frac{3}{4}$-படி இவற்றில் கலந்து கொடுக்கவும். மேல் கண்ட வியாதி தீரும்.

வேறுவிதம்:—மருந்து:—ஆவின் பாலுடன் குறிஞ்சியிலைச்சாற்றைக் கலந்து கொடுக்க, குணமாகும்.

## 28. கல்லெறி.

குணம்:—உடம்பெங்கும் வீங்கும்.

மருந்து:—கிலுகிலுப்பையிலையைக் காடியில் அரைத்துக் கொடுத்து, மாலை போல் சூடு போடவும். குணமாகும்.

### 29. குன்று.

குணம்:—நாலு காலும் தத்தளித்து நடக்கும்.

மருந்து:—குன்றியிலைச்சாற்றை ஆவின்பாலுடன் கலந்து, கொடுக்கவும்.

இரண்டு விலாவிலும், இந்த மாதிரி சுட, குணமாகும்.

### 30. சீதவெதுப்பு.

குணம்:—மேயாமல் திகைத்துப் போய் நிற்கும்.

மருந்து:—$\frac{1}{2}$-படி கர்ப்பூரவல்லிச்சாற்றை $\frac{1}{2}$-படி நல்லெண்ணெயில் கலந்து, புகட்டி, இரண்டு விலாவிலும் இந்த மாதிரி சுடவும். குணமாகும்.

### 31. மாயக்கொள்ளி.

குணம்:—மூக்கினால் பசலைப்பழம் கழுவின தண்ணீர் போல விழும்.

மருந்து:—செம்முள்ளியிலை, கிரந்திநாயகம் இவைகளை இடித்துச் சாறு எடுத்து, எலுமிச்சம்பழச்சாற்றுடன் கலந்து, கையினால் தொட்டு தொண்டையில் தடவி விட, குணமாகும்.

### 32. தென்றி.

குணம்:—கால் வீங்கும். உடம்பெல்லாம் வீங்கும்.

மருந்து:—உடம்பின் மேலும் மூக்கிலும் இந்த மாதிரி சுட, குணமாகும்.

### 33. வாதை.

குணம்:—நாலு காலும் தூக்கி வைக்கும்.

மருந்து:—மாவிலிங்க இலைச்சாற்றை வெள்ளாட்டுப் பாலில் கலந்து கொடுக்கவும். பிறகு நாலுகாலிலும் மூக்கிலும்,



இந்த மாதிரி சுட, குணமாகும்

## 34. தேகோலு.

குணம்;—நாலு காலும் தூணுக வீங்கும்.

மருந்து:—மணத்தக்காளியிலை, வேப்பம்பிண்ணாக்கு, இலுப்பைப்பிண்ணாக்கு இவைகளை அரைத்து, 2-படி கோமயத்தில் கலந்து, நாலு கால்களிலும் பரவப் பூச, குணமாகும்.

## 35. உறுவடி.

குணம்:—உடம்பு வற்றி வரும். மேயாது. வாய் நாறி வீங்கும்

மருந்து:—மாவிலை, நெருஞ்சிவேர் இவற்றை, ஆவின் பாலில் அரைத்துக் கொடுக்க, குணமாகும்.

## 36. ஜன்னி.

குணம்:—நாலு காலும் தத்தித் தத்தி நடக்கும்.

மருந்து:—பூண்டு, வசம்பு இவைகளை அரைத்து, காடியில் கலந்து, கொடுக்க, குணமாகும்.

## 37. பூவு.

குணம்:—நிலத்தில் கால் நில்லாது. மேயாது விழுந்து கிடக்கும்.

மருந்து:—இலுப்பைப்பட்டை, பூண்டு, வசம்பு இவைகளை இடித்து, காடியில் கரைத்துக் கொடுக்கவும். கால் ஊன்றி உலாவி மேயும்.

## 38. அழல்.

குணம்:—மாடு சுழன்று விழும்.

மருந்து:—பசுமஞ்சள், வசம்பு இவைகளை அரைத்து, 3-நாழி பச்சரிசிக்கஞ்சியுடன் கலந்து கொடுக்கவும்.

### 39. மூவை.

குணம்:—அடித்து ஓட்டினாலும் மேயாமல் விழுந்து கிடக்கும்.

மருந்து:—புளியம்பட்டை, உள்ளி, வசம்பு இவைகளை அரைத்து, காடியில் கலந்து கொடுக்கவும். பக்கங்களில் [குறி] இந்த மாதிரி சுடவும். குணமாகும்.

### 40. போறவை.

குணம்:—இரண்டு பக்கமும் வீங்கும்.

மருந்து—ஓட்டடையை மோருடன் கலந்து கொடுத்து, வயிற்றில் 0 0 0 0 இந்த மாதிரி சுட, குணமாகும்.

### 41. குறுதனி.

குணம்:—கண்ணில் நீரோடி வந்து கீழ் நாக்கில் பல் போலிருக்கும்.

மருந்து:—அதை, முள்ளிட்டுக் கிள்ளிப் போட, குணமாகும். மருந்து கிடையாது.

### 42. எலும்புருக்கி.

குணம்.—உலாவிக் கீழே விழும்.

மருந்து:—நாய்வேளை வேரை அரைத்து, தயிரில் கரைத்துக் கொடுத்து, நெஞ்சில் [குறி] இந்த மாதிரி சுட, குணமாகும்.

### 43. கல்லெறிப்பு.

குணம்:—விழுந்து விழுந்து எழுந்திருக்கும்.

மருந்து:—வெள்ளெருக்குஇலை, உள்ளி, வசம்பு, சுக்கு இவைகளைச் சிறுநீர் விட்டரைத்து, நசியம் பண்ணவும். சுகம்.

வேறுவிதம்:—மருந்து:—சுக்கு, வெற்றிலை இவற்றைச் சேர்த்து மென்று, 5—நாளைக்கு மூக்கில் நசியம் செய்யவும். சொஸ்தமாகும்.

### 4. எண்ணெய் தலைக்கேறல்.

மருந்து:—முன்னங்கால் தளரத் தூக்கி, சுற்றி சுற்றி ஓட்டினால், எண்ணெய் இறங்கும்.

### 45. குலித்தனுத்தல்.

மருந்து:—இலைக்கள்ளி யிலையை நெருப்பில் * வெதுப்பி, சாறு பிழிந்து, கோவைச்சாறு நல்லெண்ணெய் இவைகளுடன் கலந்து, கண்ணில் கலிக்கம் போட, குணமாகும்.

### 46. சோம்பல்.

குணம்:—கட்டுத்தரையை முட்டிக் கொள்ளும்.

மருந்து:—(இதற்கு மருந்து இல்லை.) தலையில் ☰ இந்த மாதிரி சுட, குணமாகும்.

### 47. பன்றிநோய்.

குணம்:—மதுரையைப் பார்த்து மண்ணை முகர்ந்து கொண்டு நிற்கும்.

மருந்து:—பன்றி விட்டையைப் புகை காட்டவும். சொஸ்தமாகும்.

### 48. சிலந்தி.

குணம்:—குதறி, சிலை தண்ணீர் வடியும்.

மருந்து:—மயில்துத்தம், பச்சைவெற்றிலை இவை இரண்டையும் சேர்த்து, விளக்கெண்ணெயை விட்டரைத்து, சிலந்தியின் மேல் தடவி, நெருப்பினால் காய்ச்சி விடவும். சிலை தண்ணீர் வடிந்து 3-நாளுள் குணமாகும்.

### 49. ஈமுதலை.

குணம்:—நாலு காலும் தவளித்து உலாவும்.

மருந்து:—(மருந்து கிடையாது.)  இந்த மாதிரி சுடவும்.

## 50. நாய்த்தலை.

மருந்து:—விளா இலை, வறசுண்டியிலை, உள்ளி, வசம்பு இவைகளைச் சேர்த்தரைத்து, கையில் தடவிக்கொண்டு, அதன் மேல் பிடிக்கவும். உள்ளடங்கிப் போகும். அப்பால் நீர் வாரியைச் சுற்றிலும்

 இந்த மாதிரி சுட, குணமாகும்.

## 51. மருத்து நோய்.

குணம்:—சிறுகச் செருமியும், சற்றே மயிர் கூசியும் நிற்கும்.

மருந்து:—மாட்டைக்கட்டி, மல்லாத்தி, வெந்நீர் காய்ச்சி, குலையின் மேல் வார்த்து, வெதும்பைக் காய்ச்சி, உள்ளுக்குக் கொடுக்க, குணமாகும்.

## 52. நாய்த்தலை.

மருந்து:—நாகதாளியிலையில் சிற்றுமணக்கெண்ணெயை வார்த்து, உள்ளங்காலால் கசக்கிக் கொண்டு, நாய்த்தலை புறப்பட்ட இடத்தின் மேல் தேய்த்து விரலா லடிக்க, நின்று போகும்.

## 53. திமிர்.

குணம்:—கழுத்தை ஒரு பக்கமாகச் சாய்த்து அடிக்கும். ஒரு புறம் காலின் மேல் நிமிர்ந்து நிற்கும். சாணி போடும்போது ஆகாயத்தைப் பார்க்கும். மிட்டால்போல் பூத்தாக இருக்கும். பின்னடையிரண்டும் தள்ளும். நீருண்ணும். இரை தின்னும். அசைவு போடும். உடல் அயர்ந்து நிற்கும். இந்த மாதிரி குறிகளெல்லாம் காணும்.

மருந்து:—எருக்கிலை சமூலம் கொண்டு வந்து, பொட்டணம் கட்டி, அடுப்பில் சட்டியைக் காயவைத்து, வேப்பெண்ணெய் வார்த்து, பொட்டணத்தைச் சட்டியில் வைத்து, எடுத்து, சர்வாங்கமும் ஒத்தி விடவும். இந்த ஒத்தடத்தால் மேல்கண்ட குறிகளெல்லாம் தீரும். (இது கைகண்ட முறை. வெளியிடக்கூடாது.)

### 54. உளவறி.

குணம்:—நடுங்கி விழும். வாயில் நுரை தள்ளும். கண் குளிர்ந்திருக்கும்.

மருந்து:—கருங்குன்றியைத் துவைத்து, இளவென்னீரில் கலந்து கொடுக்கவும். குணமாகும்.

### 55. முட்டுமதம்.

குணம்:—தொண்டையில் செருமித்துக் கொண்டு இருக்கும். நெஞ்சு அடைக்கும்.

மருந்து:—மிளகு, திப்பிலி இவைகளை அரைத்து, காடியில் கலந்து கொடுத்து, கீழ் வயிற்றில்  இந்த மாதிரி சூடு போடவும். குணமாகும்.

### 56. பாய்கிற மாடு பாயாமலிருக்க வசியம்.

மருந்து:—யானைநெருஞ்சியைப் பிடுங்கி வந்து, சிறுநீர் விட்டுக் காய்ச்சி, முகத்தில் தெளிக்கவும். மாடு பாயாது.

வேறுவிதம்:—மருந்து:—பால்கு நண்டிவேரைப் பிடுங்கி, மடியில் வைத்துக் கொண்டு போனுல் மாடு பாயாது.

வேறுவிதம்:—மருந்து:—3-நாளைக்கு நல்லெண்ணெயைக் கண்ணில் விட்டு வந்தால் மாடு பாயாது. (இறை கைகண்ட முறை. வெளியிடக் கூடாது.)

### 57. அரணை.

குணம்:—உடம்பு தடிக்கும். மயிர் சிலிர்த்துக் கொண்டிருக்கும்.

மருந்து:—1-பலம் பெருங்காயத்தை வென்னீரில் கலந்து, கொடுக்க, தீரும்.

### 58. கலந்து.

குணம்:—அரை மேய்ச்சல் மேயும். பலகாலம் நீருண்ணும். மனிதரைக் கண்டால் பாயும்.

மருந்து:—ஆவாரை இலையைத் துவைத்து, தண்ணீரில் ஊறவைத்து, மறு நாள் நல்லெண்ணெயில் கலந்து கொடுத்து, பிறகு இடது விலா

வில் இந்த மாதிரி சூடு போடவும். குணமாகும்.

(இது கைகண்ட முறை.)

### 59. நாவரணை.

குணம்:—மயிர் சிலிர்க்கும். வாயினால் நீரொழுகும். வெயிலுக்கு உறங்கி நிற்கும். செவி தாழ்ந்திருக்கும். நாக்கை வளைத்துக்கொண் டிருக்கும்.

மருந்து:—கரும் ஆரை முள்ளிட்டு, கீறி, உதிரம் போக்கி, காதொட்டி யிலையை உப்புடன் கலந்து புகட்டவும். உடனே தொடையில்

இந்த மாதிரி சுடவும். குணம்.

### 60. பதிரி சிலந்தி.

குணம்:—மூக்கை போடா வலிக்கும். நாக்கிலும் கடை வாயிலும் வீங்கி யிருக்கும்.

மருந்து:—கருத்தடியும், எருப்பாகக்கோந்தியும், கவிழ்த்தும்பையும், காட்டுச் சேப்பங்கிழங்கும் சரியாகப் புகட்டவும். குணமாகும்.

### 61. தூங்கு சிலந்தி.

குணம்:—சர்வாங்கமும் வீங்கும்.

மருந்து:—அவுரியிலைச்சாறு, செறுப்படிச்சாறு இவற்றைச் சமமாகக் கலந்து மேலே தடவினால், நோய் தீரும்.

### 62. நாள்தாமரை.

குணம்:—நாலு காலும் நடை தளர்ந்து கண்ணில் பீளை சாறும். மிரண்டு, திகில் கொள்ளும்.

மருந்து:—வெள்ளெருக்கு, சுக்கு பூண்டு, வசம்பு இவைகளை அரைத்து, காடியில் கலந்து புகட்டவும். பிறகு வலது புறம் விலாவில் இந்த மாதிரி சூடு போட, குணமாகும்.

## 63. சிறுப்புள்ளி.

குணம்:—உடல் நடுங்கும். கால் தொடைகள் வலிக்கும். உடல் வற்றி வரும். மேய்ச்சல் மேயும்.

மருந்து:—10-சிறுகுறட்டைவேர்க்கிழங்கு, பூண்டு, வசம்பு இவைகளை அரைத்து, ஆவின் பாலில் கலக்கிக் கொடுக்கவும். (உடனே குணம்.)

## 64. அழலை.

குணம்:—மாடு திடீர் திடீரென்று சுழன்று சுழன்று திரியும்.

மருந்து:—முன்னையிலையை இடித்து, சாறு பிழிந்து கொடுக்கவும். குணமாகும்.

## 65. மலை மண்டை.

குணம்:—தலை குத்திட்டு நிற்கும். கண்ணீர் வடியும்.

மருந்து:—ஆடாதோடையிலை, சுக்கு, பூண்டு இவைகளைக் காடியிலரைத்து, மூன்று நாள் கொடுக்கவும். பிறகு விலாவில் இந்த மாதிரி சுடவும்.

## 66. கொம்பிரை.

குணம்:—கட்டுத் தரையில் கொம்பைப் பல தடவை மோதும். அதிகமாக மேய்ச்சல் மேயும்.

மருந்து:—நாய்வேளைவேர், பூண்டு, வசம்பு இவைகளைக் காடிவிட்டரைத்து, மூன்று நாள் கொடுக்கவும். நசியம் பண்ணவும். முதுகில்



இந்த மாதிரி சூடு போடவும். குணமாகும்.

### 67. கால் வெடிப்பு, உடல் நடுக்கம், 195-கால் காணை முதலியன.

மருந்து:—ஊமத்தையிலை, சுண்ணும்பு இவைகளை அரைத்துப் பூச, குணமாகும்.

### 68. திமிர்.

குணம்:—ஆண்பால் மாட்டைப் பாயும். செவி தாழ்ந்திருக்கும்.

மருந்து:—பேய்க்கும்மட்டிக்காய்ச்சாறு, நாழி நல்லெண்ணெய், 1-படி சந்தணம், உழக்கு முலைப்பால் இவற்றைக் கலந்து கொடுக்கவும். குணமாகும்.

### 69. சோம்பல்.

குணம்:—பலகாலும் நீர் உண்ணும். கண்ணில் பீளை சாறும்.

மருந்து;—நாரை வேரை அரைத்துத் தொட்டிக்குக் கட்டி, கள்ளுடன் கலந்து கொடுக்க, குணமாகும்.

### 70. மாட்டுப் பிணி சகலத்திற்கும் ஒரே மருந்து.

மருந்து:—கொன்னடைப்பான்கிழங்கை அரைத்துக் கொடுக்கவும். வந்த நோய் அணுகாது, போகும்.

### 71. கண்டிவாய்.

குணம்:—உடல் நடுங்கும். நாசியில் உதிரம் பாயும். பின் மயிர் சிலிர்த்து நிற்கும்.

மருந்து:—மருக்காரைப்பட்டை, தண்ணீர்விட்டான்கிழங்கு, பூண்டு, வசம்பு இவைகளை மோர் விட்டரைத்து, மூன்று நாள் கொடுத்து,

இடது விலாவில் இந்த மாதிரி சுடவும்.

குணமாகும்.

வேறுவிதம் :—குணம் :—சில மாடுகளுக்கு கண் தெரியாது. தடுமாறும். உடல் வற்றி வரும்.

மருந்து;—நாவல்பட்டையையும் கோதுமையையும் சாறு வரும்படி துவைத்து, காடியில் கலந்து கொடுக்கவும். பிறகு பின் சந்தில்

பூ. யூ. பு. இந்த மாதிரி சுட, குணமாகும்.

## 72. கபாலவெக்கை.

குணம்:—முதுகில் அனல்பறியும். கண் சிவந்திருக்கும்.

மருந்து:—வெதுப்படக்கிச்சாற்றில் எள்ளை அரைத்து, மோருடன் கலந்து, உள்ளுக்குக் கொடுக்க, குணமாகும்.

## 73. பூவாய்.

குணம்:—அசையாமல் மூன்று நாள் படுத்துக்கொள்ளும். மேயாது.

மருந்து:—மாம்பட்டை, இலவம்பட்டை, பூண்டு, வசம்பு இவைகளை அரைத்து, காடியில் கலந்து புகட்டவும். பின்பு இரு தொடைகளிலும் ☰ இந்த மாதிரி சுட, குணமாகும்.

## 74. கொள்ளி.

குணம்:—கன்னத்தில் வீங்கும். மயிர் சிலிர்த்து நிற்கும். நடக்காது.

மருந்து:—வீக்கத்தின்மேல் # இந்த மாதிரி சுடவும். கள்ளிவேர், மாட்டுக்குளம்பு, புற்றுமண் இவற்றைச் சம எடை கலந்து, அரைத்து, வீக்கத்தில் பூசவும். பிறகு, மிளகைப் பொடி செய்து, நெய்யில் குழப்பி, புகட்டவும். குணமாகும்.

வேறுவிதம்:—குணம்:—சுறுசுறுப்பாக நிற்காது. உடல் மெலிந்து வரும்.

மருந்து:—அத்தியிலைச்சாறு, விளக்கெண்ணெய் இவைகளைச் சமமாகக் கலந்து புகட்டவும். பிறகு நாலு காலும் இறங்க [குறி] இந்த மாதிரி சுட, குணமாகும்.

## 75. ஒருவள்ளி.

குணம்:—உடம்பெங்கும் வெடிக்கும். நடக்காது. உடல் வற்றி வரும்

மருந்து:—ஆவார இலை, பூண்டு, வசப்பு இவைகளைத் துவைத்து, ஆவின் பாலில் கலந்து, மூன்று நாள் கொடுக்க, குணமாகும்.

## 76. கண்டமாலை.

குணம்:—முகத்தைச்சுற்றி வீங்கும். நெஞ்சு திறவாது.

மருந்து:—அவுரிவேர், வனநெட்டிவேர், மாவிலிங்கவேர், பூண்டு, வசம்பு இவைகளை யரைத்து, காடியில் கலந்து, சேதமில்லாமல் உள்ளுக்குப் புகட்டவும்.

## 77. குன்றி.

குணம்:—கால் தத்தளித்து நடக்கும். மேயாது.

மருந்து:—கோடரியிலை, குன்றிமணியிலை இவைகளைத் துவைத்து, காடியில் கலந்து, புகட்டவும்.

## 78. அழலைவெக்கை.

குணம்:—கண் பீளை சாரும். மூக்கு வியர்க்கும். உதிரம் பாயும்.

மருந்து:—அழுஞ்சி விதையை மோரில் அரைத்துப் புகட்ட, குணமாகும்.

## 79. குன்றை.

குணம்:—நெஞ்சாலும், மூக்காலும், கோழை யிறங்கும்.

மருந்து:—மேனி, வசம்பு, பூண்டு இவைகளைச் சம எடை எடுத்து, நசியம் செய்ய, குணமாகும்.

## 80. அழல்வெக்கை.

குணம்:—முன்னங்கால் அனல் பறியும். கண் சிவக்கும். எரியும்.

மருந்து:—வெதுப்படக்கிச்சாறு 1-நாழி, எள் 1-நாழி இவற்றை மோருடன் கலந்து புகட்ட, குணமாகும்.

## 81. கண்டமாலை.

குணம்:—நெஞ்சு கட்டி வீங்கும். நெஞ்சு திறவாது.

மருந்து:—அவுரிவேர், விண்ணத்திவேர், பூண்டு, வசம்பு இவைகளை அரைத்து, கழுத்தைச்சுற்றிப் பூச, குணமாகும். (இது மேல் சாந்தி).

## 82. செம்புளம்.

குணம்:—நாலு காலும் சோர வலிக்கும். மிரளும்.

மருந்து:—முதுகைப் பிளந்து இந்த மாதிரி சூடு போட்டு, பிறகு, நன்னாரி வேர், கடுக்காய், வசம்பு இவைகளைத் துவைத்து, உள்ளுக்குக் கொடுக்க, குணமாகும்.

## 83. கொம்பறை.

குணம்:—தரையை முட்டித் தலையைத் தரையுடன் தேய்க்கும். அதிக மேய்ச்சல் மேயாது.

மருந்து:—நல்லெண்ணெய், எருக்கஇலை, பூண்டு, வசம்பு இவைகளைக் கூட்டி நசியம் செய்யவும். பிறகு மூக்கு அழலில்



இந்த மாதிரி சுட, குணமாகும்.

## 84. வெதுப்பு.

குணம்:—நடக்கமாட்டாது.

மருந்து:—பாதாளமூலிவேர், பொடுதலை, ஆமணக்கெண்ணெய் இவைகளைக் கலந்து பூச, குணமாகும்.

வேறுவிதம்:—மருந்து:—அழிஞ்சிப்பழம், பேயத்திப்பழம் இவற்றைக் காடியில் பிசைந்து புகட்ட, குணமாகும்.

வேறுவிதம்:—மருந்து:—தூதுவளையிலையை அரைத்து, இளநீரில் கலந்து புகட்டவும். குணமாகும்.

வேறுவிதம்:—மருந்து:—தூதுவளையிலையை அரைத்து, இளநீரில் கலந்து புகட்டவும். குணமாகும்.

## 85. தெத்துநோய்.

குணம்:—கழுத்து வீங்கும்; புடைக்கும். கண் பிதுங்கி இருக்கும்.

மருந்து.—மேனி, பேய்த்தும்பை, பூண்டு, வசம்பு இவைகளை இடித்து நசியம் செய்யவும். பிறகு முதுகில் இந்த மாதிரி சுடவும். குணமாகும்.

வேறுவிதம்:— மருந்து:—உப்புலிவேரைக் காடியில் அரைத்துக் கலக்கிக் கொடுக்கவும். மேலுக்கு இந்த மாதிரி சுடவும்.

## 86. கண்டிவாய்.

குணம்:—நாசியால் சுரம் போம். மயிரெடுத்து நிற்கும்.

மருந்து:—மருக்காரைவேர், பூண்டு, வசம்பு இவைகளை அரைத்து, இளவென்னீரில் கலக்கிக் கொடுத்து, பிறகு இந்த மாதிரி சுடவும். குணமாகும்.

## 87. குறுநெட்டை.

குணம்:—வெயிலில் நில்லாது செவி மறித்து நிற்கும். நீரிலே கிடையாகக் கிடக்கும். செவி சாயாது.

மருந்து:—ஊமத்த இலைச்சாறு, மீன்கழுவினதண்ணீர் இவற்றைக் கலந்து, புகட்டவும். பிறகு இந்த மாதிரி சூடு போடவும். குணமாகும்.

## 88. அமுண்டி.

குணம்:—நாலு காலும் மேறிப் பாயும். மேயாது. திருவுவாய் நிற்கும். குளம்பு வீங்கும்.

மருந்து:—முடக்கொற்றான், செவியம், குங்கிலியம் இவைகளை அரைத்து ஆமணக்கெண்ணெயில் கலந்து புகட்டவும்.

## 89. சாறைக் குறுகு.

குணம்:—கண் தெரியாமல் தடுமாறித் திரியும். உடல் வற்றி வரும்.

மருந்து:—நறுவளிப்பிசினைக் காடியில் கலந்து புகட்டி, பிறகு பின்புறத்தில்



இந்த மாதிரி சூடு போடவும். பின்பு, பேய்த்தும்பைச்சாற்றைக் கண்ணில் பிழியவும். குணமாகும்.

## 90. பூவை.

குணம்:—அடித்தாலும் எழுந்திராது. நில்லாது. விழுந்து கிடக்கும். மேயாது.

மருந்து:—மாம்பட்டை, விளாம்பட்டை, பூண்டு, வசம்பு இவைகளை இடித்து, சேதமில்லாமல் புல்லில் வைத்து உள்ளுக்குக் கொடுக்கவும். சொஸ்தமாகும்.

## 91. வரை.

குணம்:—குருவேதனை எடுத்து நிற்கும். வாய் வெந்து நாறும். பலகாலம் நீர் விடும்.

மருந்து:—பொன்னாங்கண்ணிவேர், உப்பிலைவேர், வசம்பு இவைகளை, நெல்லிச்சாற்றை விட்டரைத்து, மோரில் கலந்து புகட்டி, பிறகு, எருக்கிலை, கருவஇலை, விடத்தாரிஇலை இவைகளை வதக்கி, நாழி எடுத்து, வறுத்து, அரைத்து, மாவாக்கி, பிறகு, உதியம்பட்டை, நாவற்பட்டை, அத்திப்பட்டை, முள்ளிலவம்பட்டை, நெல்லிப், பட்டை இவைகளை இடித்து, 3-மரக்கால் தண்ணீரில் போட்டுக் காய்ச்சி, $\frac{1}{4}$-ஆக வற்றவைத்து, முன் மாவை யதில் போட்டு, கலந்து, பிசறி, உள்ளுக்குக் கொடுக்கவும். மாடு எழுந்திருக்கும்.

வேறுவிதம்:—நசியம்:—கண்டங்கத்திரி சமூலம், கஸ்தூரிமஞ்சள், துத்தி நாமம், வசம்பு இவைகளை வகைக்கு வராகனெடை வீதம் எடுத்து, மாட்டு நீரில் ஊறவைத்து, நசியம் பண்ணவும். தீரும்.

## 92. மொத்த இளைத்தல்.

மருந்து:—ஒரு தோண்டியில் 4-படி குதிரை இடித்து வார்த்து, 4-படி, காட்டுச் சீரகம் சுத்தம் செய்து, முன் தோண்டியில் போட்டு,

குதிரை கட்டுகிற லாயத்தில் குதிரையின் காலடியில் பள்ளம் தோண்டி, உதைக்காமல் புதைத்து வைத்து, 7-நாள் சென்று, தோண்டி மருந்தை யெடுத்து ஒருவாரம் கொடுக்கவும். (தேகம் புஷ்டியாகும்.)

வேறுவிதம்:—மருந்து:—வில்வஇலை 1-தூக்கு, (=6-சேர்), கஸ்தூரி மஞ்சள் 5-பலம், மாட்டு நீர் 5-படி, வசம்பு 5—பலம் இவைகளைக் கஷாயம் வைத்துக் கொடுக்கவும். தேகம் புஷ்டியாகும்.

வேறுவிதம்:—மருந்து:—ஒரு துட்டு எடை துத்தநாகத்தைப் பொடி செய்து கொடுக்கவும். மாட்டை காலில் தண்ணீர் படாமல் நிறுத்தவும். இதற்கு மாற்று எலுமிச்சம் பழம் கொடுக்கவும்.

### 93. சவாரிபோதல்.

மருந்து:—கஸ்தூரிமஞ்சள், முத்தக்காசு, பச்சிலை, கிச்சிலிக்கிழங்கு இவைகளைச் சமஎடை பொடி செய்து, சவாரி போகும்போது, மாட்டிற்குக் கொடுத்தால், வேகமாகப் போகும். (இதற்கு மாற்று எலுமிச்சம்பழம் கொடுக்கவும்.)

### 94. மாட்டின் வியாதிக்கெல்லாம்.

மருந்து:—நத்துறுபிலையைக் கொடுக்கவும். வியாதியெல்லாம் பறந்து போகும்.

### 95. நாய்த்தலை.

மருந்து:—நாய்ப்பாகயிலை, சிறுகாஞ்சேரி இலை இவைகளை அரைத்து, இளவென்னீரில் கலக்கி, தனது கையினால் உள்ளுக்குக் கொடுக்கவும். வியாதி குணமாகும்.

### 96. பெருவயிறு.

குணம்:—விழி சிவந்திருக்கும்.

மருந்து:—முதுகில் இந்த மாதிரியும், நாலு

காலிலும் இந்த மாதிரியும் சூடு போடவும்.

உடனே நொச்சியிலையை இடித்துச் சாறு பிழிந்து, கொதிக்க வைத்து, மேலே தடவவும். குணமாகும்.

வேறுவிதம்:—குணம்:—நாக்கும், மூக்கும், வீங்கும். மேயாது. மூக்கில் உதிரம் பாயும்.

மருந்து:—கருவேலம்பட்டை, அவுரிப்பட்டை, கிரந்திநாயகம் இவைகளை 3-படித் தண்ணீரில் காய்ச்சி, புகட்டவும். குணமாகும்.

வேறுவிதம்:—மருந்து:—கிரந்திநாயகத்தை அரைத்து, மூக்கில் பூசவும், தீரும்.

## 97. மேதலி.

மருந்து:—மானத்துவெள்ளியும், அன்று சாவல் நெஞ்சு எலும்பும், காட்டுவிருட்சத்தின் கொம்பும், பேச்சிமுலைப்பாலுமாகிய இந்த நாலு சரக்கையும் கலந்து, உடனே மிதலிக்கு கண்ணில் கலிக்கம் போட, குணமாகும்.

## 98. தலைப்பயித்தியம்.

மருந்து:—மூங்கில் போத்து, பொன்னாங்கண்ணி, முசுமுசுக்கையிலை, இரதிப்பட்டை, கொத்தமல்லி, வேர்ப்பீர்க்கு, பித்துச்சீரகம் இவைகளைத் துணியில் முடிந்து போட்டு, 3-படி தண்ணீர் விட்டு $\frac{1}{4}$-ஆகக் காய்ச்சி யிறக்கி, உள்ளுக்குப் புகட்ட, குணமாகும்.

## 99. சாறைக்குருடு.

குணம்:—இரண்டு கண்ணும் தெரியாமல் விழுந்துகிடக்கும்.

மருந்து:—அழகிய திருச்சிற்றம்பலமுடையாரைச் சேர்த்து இடித்து. மிளகைப் பொடி சேர்த்து, சிறுநீரில் கலந்து, நசியம் பண்ணவும் குணமாகும்.

வேறுவிதம்:—குணம்:—நாடிவிழுந்து கிடக்கும். வலிக்கும். கிடக்கும்.

மருந்து:—உத்தாமணிச்சாறும், நல்லெண்ணெயும் கலந்து உள்ளுக்குப் புகட்டி, பின்பு முதுகைக் கட்டி, நாலு காலிலும் [symbol] இந்த மாதிரி சுட, குணமாகும். (இதை உடனே செய்யவும்.)

## 100. செம்புள்ளி.

குணம்:—கீழே கிடந்து புரளும். கால் நாலும் நடுக்கும்.

மருந்து:—நன்னாரிவேரை அரைத்துக் காடியில் கலந்து, புகட்டவும். முதுகைக் கட்டி. ═══ இந்த மாதிரி சுடவும். (இந்த முறையைக் காலதாமதமின்றிச் செய்யவேண்டியது. கைகண்ட முறை.)

## 101. கொள்நெரியன்.

மருந்து:—முள்கரணைவேர், கிரந்திநாயகம் இவைகளைப் பொடி செய்து, புதுக் கலயத்தில் வைத்து, $\frac{1}{4}$-படியாகக் காய்ச்சி, இடைதூளும், கொம்புப்பாகலிலையும், வெங்காயமும், பூண்டும், வசம்பும், எடுத்து, நசியம் செய்யவும். குணமாகும்.

## 102. எலும்புருக்கி.

குணம்:—வலம்புரியாக விழும்

மருந்து:—பூசணிவேரை அரைத்து, தயிரில் கலந்து கொடுக்கவும். பின்பு நெஞ்சையும், தலையையும், விலாவையும் கட்டி

இந்த மாதிரி சுட, குணமாகும்.

## 103. எழுலி.

குணம்:—சுற்றிச்சுற்றி வரும். எழுந்திருக்கும்.

மருந்து:—வெள்ளைஎருக்கிலைச்சாறு, சாராயம், பூண்டு, சுக்கு இவைகளை நறுக்கி, நசியம் செய்யவும். குணமாகும்.

## 104. நெரியன்.

குணம்:—விழுந்து கிடக்கும். உதைத்துக் கொள்ளும்.

மருந்து:—உள்ளி, வசம்பு, காயம் இவைகளை வெற்றிலைச்சாற்றில் அரைத்துப் போடவும். சிறுநீரைவிட்டுப் பெருங்கிழங்கை அரைத்து நசியம் பண்ணவும். கலிக்கம் போடவும். குணமாகும்.

## 105. பால்சுரக்க.

மருந்து:—பேய்த்திக்காயை இடித்து, புல்லுடன் கலந்து கொடுத்து வரவும். பால் சுரக்கும். ஒருவாரம் கொடுக்கவும்.

## 106. சவுரிபத்திதோஷம்.

மருந்து:—ஓர் எலுமிச்சம்பழப்புளித்தண்ணீர், அல்லது தேங்காயைக் கண் திறந்து, அதில் 2-பலம் நாபியையும் 1-பிடி புழுங்கலரிசியையும் போட்டு மூடி, 10-நாள் புதைத்து வைத்து, 11-ஆம் நாள் எடுத்து கலுவத்திலூற்றி, காரரிசித் தண்டைப் போட்டரைத்து, தூதுவிளைக்காயளவு மாத்திரை செய்து கொடுக்கவும். சொஸ்த மாகும்.

## 107. நஞ்சுபிடித்து இளைத்தல்.

மருந்து:—மரக்காயான்காய், வெங்காயம் இவை இரண்டையும் இடித்து, மோரில் புளிக்க வைத்து, கொடுக்கவும். நோய் தீரும்.

வேறுவிதம்:—மருந்து:—அழிஞ்சிப்பட்டை, வெங்காயங்களை அப்படியே மோரில் கலக்கிக் கொடுக்கவும். நோய் தீரும்.

## 108. வாயில் தண்ணீர் வருதல்.

மருந்து:—நன்னாரிவேர்ப்பட்டை, பெருங்கிழங்குவேர்ப்பட்டை, மிளகு, பூண்டு இவைகளை அரைத்து, உள்ளுக்குக் கொடுக்க, குணமாகும்.

## 109. இரைத்தல்.

மருந்து:—யானைப்பிரண்டையை மோரில்போட்டு உப்பையும் கலந்து ஊற வைத்து, மோர் சுண்டும்படி காயவைத்து, எடுத்துக் கொடுக்கவும். ஆண்டுப் பூச்சி நில்லாது.

## 110. மாட்டுப்பிணி சகலத்திற்கும்.

குணம்:—உடம்பு தடித்துக் காணும். இரத்தமும் கரியுமாக எருகும்.

மருந்து:—ஓமம் 10-பலம், சிராம்பு 10-பலம், வெங்காயம் 10-பலம், மிளகு 10-பலம், மேனியிலை ஒருபிடி, தும்பையிலை ஒருபிடி, கோழியவரை இலை ஒருபிடி, சங்கஇலை ஒருபிடி, செங்கத்தரியிலை ஒருபிடி, மாவிலிங்கஇலை ஒருபிடி, ஒரு கருங்கோழியை மயிர் நீக்கி, கால், குடல், நீக்கி, உரலில் நன்றாக இடித்து, (முன்கூறிய மருந்துகளையும் போட்டு) வைத்து எடுத்து, ஒருவேளை போடவும். அன்றைக்குத் தண்ணீர் வைக்கக்கூடாது. மறுநாள் தண்ணீரில் கோவைத்தண்டு, வன்னிப்பட்டைகளைத் துவைத்து போட்டுக் காய்ச்சி, ஆறவைத்துக் கொடுக்கவும்.

இந்த மருந்திற்கு 3-நாள் மாற்று மருந்து:—ஆவின் மோர் 1-குறுணி, சாதிக்காய் 2-பலம், பழம்புளி ஒரு விளாங்காயளவு, சீரகம் 10-பலம், வெங்காயம் 10-பலம் இவைகளை அரைத்து, மோருடன் கலந்து புகட்டவும். அன்றைக்குத் தண்ணீர் வைக்கக்கூடாது.

### 111. படுவன்.

குணம்:—நெளித்து நெளித்து மூரிகாணும். காது சோரும். உடம்பு கருகினாற்போல நிறத்துக் காணும்.

மருந்து:—விளக்கெண்ணெய் $\frac{3}{4}$-படி, உத்தாமணிச்சாறு $\frac{3}{4}$-படி, நிலப்பனைக் கிழங்கு 1-பிடி, பெருங்குறும்பையிலை 1-பிடி, வசம்பு 10-பலம், பூண்டு 10-பலம், கொடுவேலிவேர் 2-வராகனெடை, மஞ்சி கோரைக்கிழங்கு $\frac{3}{4}$-படி இவைகளை அரைத்து, எண்ணெயில் கலந்து, பதமாக எரித்து, உள்ளுக்குக் கொடுக்க, குணமாகும்.

### 112. மண்டைப்பரு.

குணம்:—தலை வீங்கும். கண் வீங்கும். காது கொறப்போகும்.

மருந்து:—வனமாவிலை ஒரு பிடி, 3-பூண்டு, 3-சுக்கு, மேனியிலை ஒரு பிடி, கரியுப்பு இவைகளையெல்லாம் துவைத்துச் சிறுநீரில் கலக்கி, காது, கண், நாசி இவைகளில் நசியம் செய்யவும். பிறகு வனமா விலையைச் சிறுநீர் விட்டரைத்து, தலை மட்டம் துவாலையாகப் பூசி உள்ளுக்கும் ஒரு விளாங்காயளவு கொடுக்க, குணமாகும்.

### 113. கிரிபூச்சி.

குணம்:—மாடு முரு முருக்கி எழுந்திருக்கும்.

மருந்து:—கறிப்பிரண்டை, ஒருசிரங்கை உப்பு, வேப்பிலை இவைகளை துவைத் துக் கவாளம் போடவும். பிறகு சுடுகிற சாம்பலை முதுகில் தடவி விடவும்.

### 114. சர்ப்பதைலம்.

மருந்து:—ஒரு பெரிய விரியன் பாம்பை அடித்து, ஒரு புதுச் சட்டியில் போட்டு, குறுணிஉப்பையும்கொட்டி, பானைத்தூரில் ஊசித் துவா ரம் போலே துளைத்து, ஒரு கொட்டின குப்பைமேட்டில் பள்ளம் தோண்டி, கீழே ஒரு பாத்திரத்தைப் புதைத்து, அதன் மேலே பானையை வைத்து, புதுச் சட்டியினாலே மூடி, பானை தெரியாமல் புதைத்து, மண்ணால் மூடிவிடவும். ஒரு மண்டலம் சென்று எடுத்துப் பார்த்தால் கீழ்ச்சட்டியிலிருக்கும் தைலத்தைச் சீசா

வில் வைத்துக் கொண்டு, மாடு மொச்சிதனால் பனைமட்டையைத் தட்டி, தைலத்தில் தோய்த்து, மாட்டு நாவிலே தடவி விடவும். (மாட்டு வியாதி சகலமும் தெறிக்கும்.) பிறகு வென்னீர் வைக்கவும்.

### 115. மாட்டு வியாதி சகசலத்திற்கும்.

மருந்து:—வசம்பு, பூண்டு, வால்மிளகு, வெள்ளைமிளகு, திப்பிலி, தேசாவரம், சீ—அரத்தை, பே—அரத்தை, சுக்கு, கசகசா, ஜாதிக்காய், ஜாதிபத்திரி, வலம்புரிக்காய், சிறுதேக்கு, மதுராம், சோம்பு, கருவப்பட்டை, சன்னலவங்கப்பட்டை, பேய்ப்புடல், கடல்நுரை, கஸ்தூரி மஞ்சள், பச்சிலை, கார்போகஅரிசி, கருஞ்சீரகம், காயம், இஞ்சி, கிராம்பு, வாயுவிளங்கம், கடுகுரோகிணி, நிலப்பனைக் கிழங்கு, ஓமம், சதகுப்பை இவைகளைச் சமஎடை எடுத்து, வென்னீர் விட்டரைத்து, ஒரு கோழியை மயிர், குடல், கால் முதலியவைகளை நீக்கித் துவைத்து, முன்கூறிய மருந்துகளோடு சேர்த்துப் பிசிறி, சாராயத்தில் கலந்து கொடுக்கவும். எவ்வித மாட்டு வியாதியானாலும் கடவுள் கிருபையினாலும், குரு கடாக்ஷத்தினாலும் சொஸ்தமாகும். இஃது ஒரு வாக்கியம். (உடனே கொடுக்கவும்.)

### 116. சவாரிமயக்கம்.

குணம்:—சவாரியில் வந்தவுடன் அறிவு மயங்கிக் கீழே விழுந்தும் மூச்சுவிட்டுக்கொண்டும், முகம் சிவப்பாக இருந்தும், தேகத்தில் அதிகச் சூடு உண்டாகியும், கெண்டைப்பிடிப்பும் உண்டாகும்.

மருந்து:—தலைக்குப் பனி வைத்துக்கட்டி குளிர்ந்த ஜலம் ஊற்றி, $\frac{1}{4}$-படி சிற்றாமணக்கெண்ணெயை $\frac{1}{4}$-படி வெங்காயச் சாற்றுடன் கலந்து, அதில் மிளகு, திப்பிலி, கடுக்காய் இவை வகைக்கு 3—தோலா வீதம் தூள்செய்து, கலந்து உள்ளுக்குக் கொடுக்க, குணமாகும்.

### 117. சவாரிமயக்கம்.

குணம்——சாவாரியில் வந்தவுடன் கீழே விழுந்து மூச்செறிந்து உடம்பு குளிர்ந்து விரைந்து கண்மணிகள் ஒன்றுக்கொன்று வித்தியாசப்பட்டு அறிவு மயங்கிக் கிடக்கும்.

மருந்து:—கடுக்காய், கரியபவிளம், காயம், நொச்சியிலை, வேர்க்கொம்பு இவைகளை வகைக்கு 3-தோலா வீதம் அரைத்து, $\frac{1}{2}$-பாட்டில் சாராயத்தில் கலந்து கொடுத்து, சாராயமும், சூடமும், சவுக்காரமும் சேர்த்து உடம்பில் நன்றாகத் தேய்த்து விட, சுகமாகும்.

## 118. சவாரிப்பைத்தியம்.

குணம்:—இருந்தாற்போல் வேகங் கொண்டும், எல்லாரையும் துரத்தியும், கடித்தும், இடித்தும், கத்திக்கொண்டும் நிற்கும்.

மருந்து:—பச்சைப்பயறு $\frac{1}{4}$-படி, பாலருகு, சர்க்கரை இவை வகைக்கு 6-ராத்தல், எலுமிச்சம் பழச்சாறு, வேப்பெண்ணெய் வகைக்கு $\frac{1}{4}$-படி. இவைகளை ஒன்றாகக் கூட்டி, காலை மாலை கொடுக்க, குணமாகும்.

பத்தியம்:—கொள், கடலை, முதலியவைகளை நீக்கி, காய்ந்த புல்லும் வென்னீரும் கொடுத்து வர, குணமாகும்.

## 119. பால் அதிகமாகச் சுரத்தல்.

மருந்து:—சிற்றுமணக்கிலையை, வெண்ணெயில் சேர்த்தரைத்து, முலையில் பூசி வர, பால் அதிகமாகச் சுரக்கும்.

வேறுவிதம்:—மருந்து:—உள்ளுக்குப் பேயத்திக்காய் * 3-தோலா மனிதர் மண்டையோடுகளை பொன்னாங்காணிச் சாற்றில் அரைத்து, புல்லில் வைத்துக் கொடுத்து வர, பால் அதிகமாகச் சுரக்கும்.

## 120. கொம்புரித்தல்.

மருந்து:—இரண்டு நாள் கொம்பின் மேல் கத்திரிக்காயைச் சுட்டுக் கட்டி, ஒரு கூருள்ள கத்தியால் சீவி எடுக்க, இலேசாகக்களரும். சீவியெடுத்த பின் சீனைக்காரத் தண்ணீரைச் சீலையில் நனைத்துக் கொம்புக்குச் சுற்றிவிடவும். கொம்பு உரிப்பதனால் சிரசு நோய்கள் திகப்படும்.

## 121. உடம்புமெலிதல்.

குணம்:—குதிரைகளும், மாடுகளும் வேலைக் கஷ்டத்தினால் நாளடைவில் மெலிந்துபோம்.

மருந்து:—வேலையை குறைத்து, 2-காக்கையை உரித்து, சதையை எடுத்து, அதனுடன், சீரகம், சுக்கு, கருவப்பட்டை, திப்பிலி இவைகளை வகைக்கு 1–தோலா வீதம் சேர்த்தரைத்து, சாராயத்தில் ஊற வைத்து, வேளைக்கு ஒரு பெரிய எலுமிச்சம்பழ அளவு காலை தோறும் கொடுத்து வர, அதிக பலமும் புஷ்டியும் உண்டாகும்.

## 122. உடம்புமெலிதல்.

குணம்:—நாளடைவில் மெலிந்து விருப்பமற்று இளைப்புண்டாகி, மெலிந்து போயிருக்கும்.

மருந்து:—இஞ்சி, கண்டங்கத்திரி, நெரிஞ்சி, எலுமிச்சம்பழம் இவைகளின் சாறு வகைக்கு $\frac{1}{4}$-படி வீதம் எடுத்து, $\frac{1}{2}$-படி பசுவின் பாலில் $\frac{3}{4}$-ராத்தல் சீனி கூட்டிப் பாகு செய்து, அதில் சீரகம், கிராம்பு, ஏலம், மிளகு, திப்பிலி, வாயுவிளங்கம், தாளிசபத்திரி இவை வகைக்கு 4-தோலா வீதம் சூரணம் செய்துப்போட்டு, $\frac{1}{4}$-படி நெய்யும், $\frac{1}{4}$-படி தேனும் கலந்து, லேகியமாகச் செய்து காலை மாலை எலுமிச்சம்பழ அளவு வீதம் கொடுத்து வர, சகல வியாதிகளும் குணமாகும். நல்ல பசியும் உண்டாகும். பலமும் வேகமும் உண்டாகும்.

## 123. சவாரிமந்தம்.

குணம்:—உடம்பு அதிக புஷ்டியாக இருந்தும் சவாரியில் அதிக மந்தமாக இருக்கும்.

மருந்து:—ஜாதிக்காய், ஜாதிப்பத்திரி, கிராம்பு, ஏலம், மிளகு, கசகசா இவை வகைக்கு 10-தோலா, சர்க்கரை 40-தோலா, $\frac{1}{4}$-படி தேன், $\frac{1}{4}$-படி நெய் இவைகளை லேகியமாகப் பிசைந்து, எலுமிச்சங்காயளவு, சவாரிக்குப் போகுமுன், கொடுத்து வர, சவாரியில் அதிக வேகமுண்டாகி, உற்சாகமாகப் போகும்.

## 124. நலம் போடும் விதம்.

குதிரைகள் மாடுகளுக்கு நலம் போட வேண்டியிருந்தால்—அவை இளம் வயதா யிருக்கும் போதும், விதை யிறங்கிய மற்றக் காலத்திலும், உடம்பு பலமாயும் புஷ்டியாக இருக்கும். காலம் பார்த்து நாலு கால்களையும் கட்டி, வைக்கோலின் மேல் படுக்கப் போட்டு, அண்டத்தைப் பிடித்து, விதைகளை வெளியே யிறக்கி, மேலுக்கு அவைகள் ஏறாமல் பலமான நாடாவால் கட்டி, அண்டத்தின் மேல் மஞ்சள் தூளையும் வெண்ணெயையும் கலந்து போட்டு, வெளியே இருக்கும், விதைகளை 1-மணி நேரம் வரையில் நன்றாகப் பிசைந்து, கனிந்து போகும் வரையில் நலம் போட வேண்டியது.

நலம்போடும் மிருகங்கள் களைத்துப்போகாத வண்ணம் கவனித்து மெதுவாகப் பிசைந்து கசக்கி, திரும்ப மேல் கட்டிவிட்டு, அண்டத்தின்மேல் வெங்காரமும், சீனக்காரமும் கரைத்து நனைத்த துணியை, நன்றாக இருக்கிச் சுற்றி, கால் கட்டுகளை அவிழ்த்துவிட்டு, மிருகத்தை எழுப்பி, அது நீர் விடுகிற வரையில் அண்டத்திற்குத் தண்ணீர் எறிந்து, மறுநாள் துணியை அவிழ்த்து, $\frac{1}{2}$-படி தேங்காயெண்ணெயில் துத்தம், தூரிசு, மதார்சிங்கு, வெங்காரம், வேம்பாடம்பட்டை, கத்தக்

காம்பு வெற்றிலை, வசம்பு, வெங்காயம் இவை வகைக்கு 3-தோலா, $\frac{1}{4}$-படி நிம்ப எண்ணெய் இவைகளைச் சேர்த்துக் காய்ச்சி, எண்ணெயைப் போட்டு வர, சுகமாகும்.

ஒரு வாரத்தில் வீக்கம் வற்றாதிருந்தால், அண்டத்தை ஊசியால் குத்தி, நீர் ஓடவிட்டு மேற்படி எண்ணெயைப் போட்டு வரவும். வீக்கம் வாடும்வரை நிம்பஇலையையும், புளிய இலையையும் அவித்து, அதன்மேல் கட்டிவர வேண்டும்.

மேற்சொன்ன வகைகளைவிட, விதைகளைக் கீறி எடுத்தும் நலம் போடலாம். அப்படிச் செய்யுங்கால், முன் சொல்லியபடி விதைகளை இறக்கி, அண்டத்திஉள்ள நரம்புகளைச் சேதப் படுத்தாமல் தோலைக் கீறி, விதைகளை வெளியே எடுத்துக் கொண்டு, குதிரை மயிரால் தைத்துக் கட்டி, முன் சொல்லிய விதமே எண்ணெயைப் போட்டு வரவும். குணமாகும்.

பத்தியம்:—புண் ரோவு முதலியவைகள் ஆறிச் சுகப்படும் வரையில், கொள், கடலை முதலியவைகளை நீக்கி, காய்ந்த புல்லும் கொஞ்சம் வென்னீரும் காட்டிவர வேண்டியது.

### 125. ஓடுவணி.

குணம்:—உடம்பெல்லாம் வெடிக்கும். நடக்காது. உடம்பு வற்றி வாடும்.

மருந்து:—அவுரியிலை, வல்லாரையிலை, பூண்டு, வசம்பு இவற்றை அரைப் பாலிலே கரைத்து ஊற்றவும். இதற்குச் சூடு இல்லை.

### 126. கடுவடி.

குணம்:—மாடு கன்னிப்போய் நிற்கும்.

மருந்து:—பருத்தியிலையை அரைத்து, மீன் கழுவின தண்ணீரில் கலக்கிக் கொடுக்கவும். இந்த மாதிரி சூடு போடவும்.

### 127. பூவை.

குணம்:—நிலத்திலே கால் நில்லாது. விழுந்து கிடக்கும்.

மருந்து:—மாம்பட்டையையும், பெண்வசம்பையு மரைத்துக் காடியில் கரைத்துக் கொடுக்கவும். சூடுபோடத் தேவையில்லை,

### 128. குண்ணம்.

குணம்:—தலை நடுங்கி நிற்கும்.

மருந்து:—இரண்டு விலாவிலேயும் புள்ளடிச் சூடு போடவும். குன்றிக் கொடியைக் கழுத்தில் கட்டவும்.




### 129. செத்தநோய்.

குணம்:—பல்லை நறு நறுவென்று கடிக்கும். நாலு காலிலும் நீர் கசியும்.

மருந்து:—வெள்ளருகைத் துவைத்து, காடியில் கரைத்துப் புகட்டவும். கன்னத்திலும் சந்திலும்  இந்த மாதிரி சூடு போடவும். குணமாகும்.

### 130. சோளப்பயிர்.

குணம்:—மாடு சுணங்கியும் வயிறு ஊதியு மிருக்கும்.

மருந்து:—குப்பைமேனியும், நாயுருவியும், பழப்பாசியும், துவைத்து, காடியிலே கரைத்து, ஊற்றவும், இதற்குச் சூடு இல்லை.

### 131. திரியம்.

குணம்:—ஓடி விழும். உதைத்துக் கொள்ளும். முதுகு நெளிக்கும்.

மருந்து:—பாதாளமூலியைச் சமூலம் கொண்டுவந்து, ஆடுதின்னாப்பாளை, உப்பு இவற்றுடன் அரைத்து, காடியில் கலக்கி, ஊற்றவும். இதற்குச் சூடு இல்லை.

### 132. கள்ளத்தாமரை.

குணம்:—நாலு காலும் தளர்ந்து, விழுந்து நிற்கும். தண்ணீர் எந்நேரமும் குடிக்கும். பூளைச் சாறும்.

மருந்து:—வெங்காயத்தை அரைத்து, காடியிலே கரைத்து, உள்ளுக்கு ஊற்றவும்.

## 133. செம்புழுதி.

மருந்து:—பூவரசம்விதையை அரைத்து, காடியிலே கரைத்து ஊற்றவும். அவ்விதை கிடைக்காவிடில், பூவரசின் கொழுந்தை அரைத்து ஊற்றவும். இதற்குச் சூடு இல்லை.

## 134. அனலி.

குணம்:—உருளை அசைந்துபோம். உருளை தளர்ந்துபோகும். உள் காந்தல் போலே நடக்கும்.

மருந்து:—குறுங்கொற்றுன், நாயுருவி, தழுதாழை, எருதுச்சாணி இவற்றை யிடித்து, வேது பிடிக்கவும்.



இந்த மாதிரி சூடு போடவும்.

## 135. கொள்ளி.

குணம்:—மாடு முன் பக்கமாக விழும். நாக்கு வெளியே தள்ளும்.

மருந்து:—கழற்சிப்பருப்பு, அப்பைக்கிழங்கு இவற்றை அரைத்து, நாழி கோமயத்தில் கரைத்து, ஊற்றவும். சூடு இல்லை.

## 136. ஓடுவணி

குணம்:—உடம்பெல்லாம் வெடிக்கும். நடக்காது. உடம்பு வற்றி வரும்.

மருந்து:—அவுரியிலை, ஆவாரஇலை, பூண்டு, வசம்பு இவற்றை அரைத்து, பாலிலே கலந்து ஊற்றவும். இதற்குச் சூடு இல்லை.

## 137. ராயவமெண்ணம்

குணம்:—கண்ணில் தண்ணீர் வடியும்.

மருந்து:—வேப்பிலையை அரைத்து, காடியில் கலக்கி ஊற்றவும். இடது விலாவிலே



இந்த மாதிரி சுட, குணமாகும்.

### 138. உடுக்கை.

குணம்:—நாலு காலும் கூட்டி வைக்கும். மேய்ச்சல் மேயும்.

மருந்து:—நிலப்பனைக்கிழங்கு, கொள் இவற்றை அரைத்து, வெந்நீரில் கலந்து ஊற்றவும். இதற்குச் சூடு இல்லை.

### 139. குன்னோய்.

குணம்:—நாலு காலும் நடுக்கும். இரை தின்னும். நிற்கும்.

மருந்து:—குன்றியிலைச் சாற்றைப் பசுவின் பாலில் கலந்து ஊற்றவும்.


இந்த மாதிரி சூடு போடவும்.

### 140. கள்ளத்தாமரை.

குணம்:—சில காலமே நடக்காது. மாறிப் பாயும். உடல் வற்றி வரும்.

மருந்து:—ஆமணக்கெண்ணெயை அகத்தியிலைச் சாற்றுடன் கலந்து ஊற்றவும். அச்சாற்றை நாலு காலிலும் பிழிந்து

இந்த மாதிரி சூடு போடவும்.

### 141. சாரை.

குணம்:—சில காலமே சுற்றி வரும்.

மருந்து:—நாழி முருங்கையிலைச்சாற்றை சாரணைவேருடன் அரைத்து, நீரிலே கலந்து போடவும். விலாவிலே


இந்த மாதிரி சூடு போடவும்.

### 142. ஒளிவெளி.

குணம்:—உடம்பெல்லாம் வெடிக்கும். உடல் வற்றி வரும். நடக்காது.

மருந்து:—அவுரியிலை, பூண்டு, வசம்பு, மாங்கொட்டை இவற்றை அரைத்து, பசுவின் பாலில் கரைத்து, ஊற்றவும். இதற்குச் சூடு இல்லை.

### 143. நாய்த்தலை.

மருந்து:—விளா இலை, பூவரசின் தண்டு, இலைப்பூண்டு, வசம்பு இவற்றை அரைத்து, கையிலே தடவிக் கொண்டு, அதிலே பிடிக்க உள் போகும். அரையில்  இந்த மாதிரி சூடு போடவும்.

### 144. பெறலி.

குணம்:—நாக்கு வீங்கும். நாக்கிலிருந்து நீர் விழும். கண்கள் இருளும்.

மருந்து:—புங்கம் பழத்தை வெந்நீரில் அரைத்துப் போடவும். இதற்குச் சூடுபோட வேண்டியதில்லை.

### 145. கொளதப்பிதாரை.

குணம்:—மாடு மேயாமல் நிற்கும். மத்தியானத்தில் மேயும்.

மருந்து:—கர்ப்பூர இலையை அரைத்து, நல்லெண்ணெயில் போட்டு, கொதிக்கவைத்து, ஊற்றவும். இதற்குச் சூடு இல்லை.

### 146. ஊதாரி.

குணம்:—கண் பூளை சாறும். வாய் நீர் வடியும். மேயாது. திகைத்து நிற்கும்.

மருந்து:—முத்திருக்கன் செவியைக் கருஞ்சீரகத்துடன் கூட்டி, காடியில் அரைத்து ஊற்றவும். இதற்குச் சூடு இல்லை.

### 147. சடைநோவின் தெரிசிலை.

குணம்:—தன்னை மறந்து, செவி தளர்ந்து நிற்கும். வாய் வீங்கும்.

மருந்து:—திப்பிலி, சிறுதேக்கு, அதிமதுரப்பட்டை இவற்றை நல்லெண்ணெயிலரைத்து, ஞாயிற்றுக்கிழமை நாக்கிலும், முகத்திலும் தடவவும். இதற்குச் சூடு இல்லை.

### 148. வெங்கணபத்தி.

குணம்:—வட்டமாகச் சுழன்று நிற்கும்

மருந்து:—மருந்தில்லை. இரண்டு பக்கத்துக் கன்னங்களிலும் வட்டமாக

இந்த மாதிரி சுடவும். குணமாகும்.

### 148A. சடை.

குணம்:—வயிறு பொருமும். உப்பும்.

மருந்து:—அமுக்குருவேர், ஊமத்தன்வேர், வெள்ளைப்பூண்டு, வசம்பு இவற்றை அரைத்து, வென்னீரில் கலக்கி, ஊற்றவும். இரண்டு விலாவிலேயும்



இந்த மாதிரி சுடவும்.

### 149. வேரை.

குணம்:—களச்சி வந்து நிற்கும். வாயிலிருந்து நீர் விழும். புல் மேயாது.

மருந்து:—வெற்றிலை, கொன்றையிலை இவற்றை இடித்து, காடியுடனே கலந்து, உள்ளுக்கு ஊற்றவும். இடது விலாவில்



இந்த மாதிரி சூடு போடவும். குணம்.

### 150. பண்ணேய்.

குணம்:—கண் குழைந்து நிற்கும். பீளை சாறும். செவி தூக்கி நிற்கும். புல் மேயாது.

மருந்து:—வில்வஇலையை அரைத்து, எருமை மோரில் கலக்கி ஊற்றவும். இடது விலாவில்



இந்த மாதிரி சுடவும்

## 151. சோனோய்.

குணம்:—காலில் முத்து வைக்கும். வாயில் நீர் விழும்.

மருந்து:—குன்றியிலையைத் துவைத்து, காடியில் கலக்கி ஊற்றவும். விலா விலே



இந்த மாதிரி சூடு போடவும்.

## 152. தோகை.

குணம்:—உதிரம் பிரிக்கும். வயிறு முழங்கும். நாலு தொடையும் களரு மிதிக்க மாட்டாது.

மருந்து:—வெண்ணொச்சியிலையைத் துவைத்து, வென்னீரில் கலக்கி ஊற்றவும். இரண்டு விலாவிலேயும்



இந்த மாதிரி சூடு போடவும்.

## 153. சுழல்.

குணம்:—சுழன்று திரியும். மாறிப் பாயும்.

மருந்து:—சுக்கு ½-பலம், கடுகு ரோகிணி ½-பலம், உள்ளி ½-பலம், கருஞ்சீரகம் ½-பலம், வெண்ணொச்சியிலை இவையெல்லாவற்றையும் சேர்த்து, அரைத்து, வென்னீரில் கலக்கி ஊற்றவும். இதற்கு இடது பக்கத்தில் இந்த மாதிரி சுட, குணமாகும்.

## 154. புண்ணாக்குறளை.

குணம்:—தரையைப் பார்த்து, மண்ணை மொத்து (முகர்ந்து) நிற்கும்.

மருந்து:—பன்றிவிட்டையைப் புகைப் பிடிக்கவும். இதற்குச் சூடு இல்லை

## 155. கன்றுக்கு ஊட்டங் கொடுக்காமை.

மருந்து:—குன்றிமணியிலை, குப்பைமேனியிலை, தாமரையிலை இவற்றை

வகைக்கு நாழிச்சாறும் மோரும் காடியும் கலந்து உள்ளுக்குப் போடவும். தக்காளி, பூண்டு, வசம்பு இவற்றை நசியம் பண்ணவும்.

### 156. பிரமியம்.

மருந்து:—பிரண்டையின் வேரை அரைத்து, காடியில் கலந்து போடவும்.

இடது விலாவிலே இந்த மாதிரி சூடு போடவும்.

குப்பைமேனிச் சாற்றில், பூண்டு, வசம்புகளை அரைத்து, சிறுநீரில் நசியம் பண்ணவும். மருக்காரைவேரை நார்த்தங்காயளவு அரைத்துத் தலையில் தடவவும்.

### 157. நாய்த்தலை.

மருந்து:—விளா இலை, வறசுண்டியிலை, பூண்டு, வசம்பு இவைகளை அரைத்து, கையில் தடவி, அதைப் பிடிக்க உள்ளே போகும். அறையைச் சுற்றி இந்த மாதிரி சூடு போடவும்.

### 158. தெளென்றுக்கு.

மருந்து:—எண்ணெயையும், எருக்கின் பாலையும் கலந்து, சூரிய உதயத்திற்கு முன்னே முன்னங்காலில் தடவவும். இதற்குச் சூடில்லை.

### 159. பில்வம்.

குணம்:—கண்ணிலிருந்து நீர் விழும். வேப்பிலையை அரைத்து, காடியில் கலந்து போடவும். விலாவிலே இந்த மாதிரி சூடு போடவும்.

### 160. உடுக்கை.

குணம்:—நாலு காலும் துவண்டு கூட்டி வைக்கும். நிற்காது. தீனி தின்னும்.

மருந்து:—நிலப்பனைக்கிழங்கையும் கொள்ளையுமரைத்து, காடியில் கலந்து கொடுக்கவும். சூடு இல்லை.

### 161 குண்ணி.

குணம்:—நாலு காலும் நடுக்கும். தீனி தின்னும்.

மருந்து:—குன்றியிலைச்சாற்றைப் பசுவின் பாலில் கலந்து போடவும் இரண்டு விலாவிலும்  இந்த மாதிரி சூடு போடவும்.

### 162. கிருணி.

குணம்:—தீவனம் குதப்பித்தள்ளும். பிரண்டைத்தண்டு 1-பிடி, உப்பு $\frac{1}{8}$-படி இவற்றை இடித்துக் கவாளமாகப் போடவும். சூடு இல்லை.

### 163. கழிதல்.

மருந்து:—வரப்புலாவேர், கடப்பங்கொழுந்து, தென்னம்பாளை, உளுந்து மாவு இவற்றை அரைத்து, பசுவின் பாலில் கலந்து போடவும். சூடு இல்லை.

### 164. இளங்கொடிதின்னல்.

மருந்து:—பேச்சங்குநாரியிலைச்சாற்றையும் காடியையுங் கலந்து போடவும். இதற்குச் சூடில்லை.

### 165. பொறவை.

குணம்:—இரண்டு விலாவும் வீங்கும். விளக்கெண்ணெய், உப்பு இவற்றை காடியில் கலந்து போடவும். ═══ இந்த மாதிரி சுடவும்.

### 166. மிள்ளிறுரதம்.

மருந்து:—வேப்பம்பட்டை, தழுதாழை, குதிரைலத்தி இவற்றைக் கரைத்துப் போடவும். சூடு இல்லை.

### 167. அட்டுக்கிருணி.

குணம்:—அருவருத்துப்போய் மேய்ச்சல் மேயும்.

மருந்து:—எள்ளை அரைத்துச் சிறுநீரில் கலக்கிப் போடவும். நெஞ்சிலே சுருக்கெனச் சூடு போடவும்.

### 168. பாளைச்சல்.

மருந்து:—4-படி கொள்ளை அரைத்து, விளக்கெண்ணெயில் கலந்து போடவும். நரிமாம்சத்தைச் சிறுசிறு துண்டுகளாக அறுத்து வைக்கோலில் வைத்து 2-நாள் கொடுக்கவும். சூடு இல்லை.

### 169. (கள்ளறி) மகாநோய்.

குணம்:—நாலுகாலுந் தளர்ந்து கிடக்கும். தண்ணீர் பலகாலும் குடிக்கும். கண் பீளைசாறும்.

மருந்து:—வெங்காயத்தை இடித்து, காடியில் கலந்து, நசியமிட்டு, உள்ளுக்குக் கொடுக்கவும்.

### 170. தாளரி.

குணம்:—கால்நடை தளர்ந்து நிற்கும். வயிறு இரையும். சாணம் நாறும். வாழைக்கிழங்கையும் ஆலம்விழுதையும் காடியில் கரைத்துப் போடவும்.

### 171. அறிபறி.

குணம்:—நாலு சந்தும் வீங்கும். குடல் வெதும்பிச் சாணம் நாறும்.

மருந்து:—இலுப்பையிலை, பாதிரிப்பட்டை, மிளகு, வெள்ளைப்பூண்டு, வசம்பு இவற்றை மோரில் கரைத்து, உள்ளுக்குப் போடவும்.

நாலுகாலிலும் O O O O இம்மாதிரி சுடவும்.

### 172. பூவாய்.

குணம்:—நிலத்தில் கால் நில்லாது. விழுந்து கிடக்கும்.

மருந்து:—மாம்பட்டை, பூண்டு, வசம்பு இவற்றை அரைத்து காடியில் கலக்கிக் கொடுக்கவும். சூடு இல்லை.

### 173. குண்ணி.

குணம்:—குலைந்து நடுங்கி நிற்கும்.

இதற்கு மருந்து இல்லை. இரண்டு விலாவிலும்

 இம்மாதிரி புள்ளடிச் சூடு போடவும்.

## 174. படர்தாமரை.

குணம்:—உடம்பு கருகி நிற்கும். மேயாது. வாய் நாறும்.

மருந்து:—தாமரையிலை, அழுக்கிருஇலை இவற்றை அரைத்து, பாலில் கலந்து கொடுக்கவும். இரண்டு விலாவிலே

  இம்மாதிரி சூடு போடவும்.

## 175. செருமல்.

குணம்:—பல் கடிக்கும். பலகால் நீர் பிரிக்கும்.

மருந்து:—வெள்ளருகை இடித்து, ாடியில் கரைத்துப் போடவும்.

  இம்மாதிரி சுடவும்.

## 176. கொல்லி.

குணம்:—மாடு முன்னால் விழும். நாக்கு வாங்கும். கோழை கோழையாய் விழும்.

மருந்து:—இதற்குக்கழற்சிப் பருப்பு, அப்பைக்கிழங்கு இவற்றை அரைத்து, நாழி கோமயத்தில் கலந்து போடவும். சூடு இல்லை.

## 177. குண்ணி.

குணம்—நாலுகாலும் தளர்ந்து நடக்கும்.

மருந்து:—குன்றியிலைச்சாற்றைப் பசுவின் பாலில் கலந்து போடவும். குன்றிக் கொடியை வடம்போல் பருமனுள்ள மாலையாகப் போடவும். இரண்டு விலாவிலும்


இந்த மாதிரி சுடவும். குணம்.

## 178. கவியிரம்.

குணம்:—நடக்கும். நாசியில் ரத்தம் விழும். இரை தின்னாது.

மருந்து:—சுக்கை அரைத்து, வென்னீரில் நசியம் பண்ணவும். மருக்காரை வேர், சுக்கு, பூண்டு, வசம்பு இவற்றை அரைத்து, வென்னீரில் கொடுக்கவும். சூடு இல்லை.

## 179. ஒலிவிலி.

குணம்:—உடம்பெல்லாம் வெடிக்கும். உடல் வற்றிவரும். நடக்காது.

மருந்து:—அவுரியிலை, பூண்டு, வசம்பு, மாங்கொட்டை இவைகளை அரைத்து, பசுவின் பாலில் கரைத்துப் போடவும். இதற்குச் சூடு இல்லை.

## 180. கொம்புநோய்.

குணம்:—கட்டுத் தரையை முட்டும். தேய்க்கும். பொய் மேய்ச்சல் மேயும்.

மருந்து:—நல்ல வேளைச்சாறு, மிளகு, வெள்ளைப்பூண்டு, வசம்பு இவற்றை அரைத்து, நசியம் பண்ணவும். சூடு இல்லை.

## 181. கன்றுகொள்ளாமை.

மருந்து:—வேலிப்பருத்தியிலை, கறிவேப்பிலை இவைகளை அரைத்து, கண் மேலும், பசுவின் மேலும் பூசவும். கோரோசனை, குன்றிவேர் இவற்றை அரைத்து, புல்லிலே தடவி, ஊட்டவும். இதற்குச் சூடு இல்லை.

## 182. வெட்டவெளி.

குணம்:—உடம்பெல்லாம் வெடிக்கும்.

மருந்து:—அவுரியிலைச்சாறு, நாழி விளக்கெண்ணெய், பூண்டு, வசம்பு இவற்றை அரைத்துப் போ போடவும். நாலு காலிலும்


இந்த மாதிரி இறங்கச் சுடவும்.

## 183. கள்ளக்காய்ப்பு.

குணம்:—காலையில் நடக்காது. உடல் வற்றி வரும்.

மருந்து:—அத்தியிலைச்சாறு, நாழி பூண்டு, வசம்பு, சுக்கு 1-பலம் இவற்றை அரைத்து, விளக்கெண்ணெயும் காடியும் கலந்து, போடவும் இதற்குச் சூடு இல்லை.

## 184. மாட்டு மசாலை.

(குறிப்பு:—இளைத்த மாடு, பெருசாணி தள்ளும் மாடு, இவைகளுக்கும் மற்றும் சகல வியாதிகளுக்கும் கொடுக்கலாம்.)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மஞ்சள் | பலம் | $2\frac{1}{2}$ | அரத்தை | பலம் | $2\frac{1}{2}$ |
| சுக்கு | ,, | $2\frac{1}{2}$ | மிளகு | ,, | $2\frac{1}{2}$ |
| ஓமம் | ,, | $2\frac{1}{2}$ | கண்டந்திப்பிலி | ,, | $2\frac{1}{2}$ |
| சதகுப்பை | ,, | $2\frac{1}{2}$ | பரங்கிப்பட்டை | ,, | $2\frac{1}{2}$ |
| மிளகாய் | ,, | $2\frac{1}{2}$ | கடுக்காய் | ,, | $2\frac{1}{2}$ |
| தானிக்காய் | ,, | $2\frac{1}{2}$ | பூண்டு | ,, | $2\frac{1}{2}$ |
| கருஞ்சீரகம் | ,, | $2\frac{1}{2}$ | திப்பிலி | ,, | $1\frac{1}{4}$ |
| ஆனைதிப்பிலி | ,, | $1\frac{1}{4}$ | சிறுநாகப்பூ | ,, | $1\frac{1}{4}$ |
| சண்பகமொட்டு | ,, | $1\frac{1}{2}$ | சடாமாஞ்சி | ,, | $\frac{3}{4}$ |
| வலம்புரிக்காய் | ,, | 1 | வசம்பு | ,, | 2 |
| லவங்கம் | ,, | $\frac{3}{4}$ | பேர் அரத்தை | ,, | 1 |
| மாமஞ்சள் | ,, | 1 | வாயு விளங்கம் | ,, | 1 |
| அதிமதுரம் | ,, | $1\frac{1}{4}$ | கஸ்தூரி மஞ்சள் | ,, | 1 |
| சாதிக்காய் | ,, | 1 | சாதிப்பத்திரி | ,, | $\frac{3}{4}$ |
| கூரைச்சாணி | ,, | $1\frac{1}{4}$ | காட்டுச்சீரகம் | ,, | $1\frac{1}{4}$ |
| கோஷ்டம் | ,, | $1\frac{1}{4}$ | மாசக்காய் | ,, | $1\frac{1}{4}$ |
| கசகசா | ,, | $1\frac{1}{4}$ | புரசங்கொட்டை | ,, | $1\frac{1}{4}$ |
| காட்டாத்திப்பூ | ,, | $1\frac{1}{4}$ | கடுகுரோகிணி | ,, | $1\frac{1}{4}$ |
| அக்கரகாரம் | ,, | $1\frac{1}{4}$ | வால்மிளகு | ,, | $1\frac{1}{4}$ |
| லவங்கப்பட்டை | ,, | $1\frac{1}{4}$ | தாளிசபத்திரி | ,, | $1\frac{1}{4}$ |
| பெருங்காயம் | ,, | $1\frac{1}{4}$ | | | |

ஆக 41-ம் வஸ்திரகாயம் செய்து, வெள்ளாட்டுத்தலையை வேகவிட்டு, எலும்பு நீக்கி, உளுந்து மாவு 1-படி, நல்லெண்ணெய் $\frac{3}{4}$-படி விட்டு, பிசைந்து, ஒரு கவளம் போடவும்.

### 185. மாட்டுக்குத் தண்ணிரோதிக் கொடுத்தல். (நின்றுகொண்டே)

மந்திரம்:—எட்டுத் திக்கும் கட்டினேன்.
எழுகிற நியாயத்தையும் கட்டினேன்.
பத்துத் திசையும் கட்டினேன்.
படமெடுத்தாடும் பாம்பையும் கட்டினேன்.
கொல்லவந்த கூர் வாள் கூர் பரியைக் கட்டினேன்.
வடக்கே போகிற வட மண்டலமும் கட்டினேன்.
அழைக்க வெதிர் வாரீர்.
சிவசிவா சுவாகா சுவாகா நிப்பாகில்.

### 186. நோயுண்டாமலிருக்க.

மருந்து:—செவ்வாய்க் கிழமையில், சிவனார் கிழங்கு கொண்டு வந்து, கொட்டகையிற் கட்டுத் தறியண்டைப் பொங்கலிட்டு, பொங்கின சாதத்தையும் கிழங்கையும் கட்டுத்தறியிலும், வாயிற்படியிலும் புதைக்க, நோயை வரவொட்டாமல் காக்கும்.

### 187. உறுப்புத்தின்றல்.

மருந்து:—பிடங்குநாறி இலையைக் கொண்டு வந்து, பிசைந்து, சாற்றை எடுத்து, காடியிற் கலந்து கொடுக்க குணமாம்.

### 188. கன்னிக்கிடாறி அழிந்து பொலிவிற்கு இணங்கல்.

மருந்து:—பொன்னாவாரையிலையை, காடி வார்த்தரைத்து, பருத்தியிலைச் சாற்றில் கலந்து கொடுத்து, 10 நாழி வரை தண்ணீர் காட்டாமல் வைக்க, பொலிவிற்கு இணங்கும்.

### 189. காளைக்கடங்காத பசு.

மருந்து:—உப்பு, மஞ்சள், பேய்மருட்டியிலை இவைகளை யெல்லாம் தேங்காய்ப் பிரமாணம் அரைத்துக் கொடுத்து, 10-நாழிகை வரையில், தண்ணீர் காட்டாமல் வைக்க, காளைக்கடங்கும்.

### 190. கன்றுகொள்ளாப் பசு.

மருந்து:—அண்டங்காக்கையின் கண்மணி, மருதம்பூவின் பொடி, பன்றிப் போதின் கிழங்கு இவை மூன்றையும் அரைத்து, நசியம் செய்ய, கன்று கொள்ளும்.

**191. கன்றிருக்க வெற்றுக்கன்றைக் கொள்ளல்.**

மருந்து:—சேவல் கூவுகிற நேரத்தில், பசுவை யோட்டிக் கொண்டு போய் வண்ணான் துறைக் கல்லின் கீழிருக்கும் மண்ணை எடுத்து, பசுவின் மேலிரைத்துத் தெளித்துக் குளிப்பாட்டி, கை விலக்கமா யிருக்கிற பெண்ணின் முந்தானையால் பசுவின் வாயை துடைக்க, வெறுங் கன்றைக் கொள்ளும்.

**192. பாலில்லாமை.**

மருந்து:—மனிதர் தலையோட்டைப் பொன்னாங்காணிச்சாறு விட்டரைத்து, புல்லுக்குள் சுருட்டி வைத்துக் கொடுக்க, பாலுண்டாகும்.

**193. முவை.**

குணம்:—அடித்து ஓட்டினாலும் போகாமல் விழுந்து கிடக்கும்.

மருந்து:—புளியம்பட்டை, உள்ளி, வசம்பு இவை மூன்றையும் கூட்டி, அரைத்து, காடியில் கலந்து கொடுத்து, பக்கத்தில் சுட, சொஸ்தமாகும்.

**194. கன்று கொள்ளாமை.**

மருந்து:—குன்றிமணியிலை, உத்தாமணியிலை, குப்பைமேனியிலை இவைகளின் சாற்றை, வகைக்கு நாழி பிழிந்து, மோரிலாவது, காடியிலாவது, கலந்து கொடுத்து, மணத்தக்காளி, உள்ளி, வசம்பு இம்மூன்றையும் கூட்டி நசியம் செய்ய, கன்றைக் கொள்ளும்.

**195. கல்லெரிப்பு.**

குணம்:—விழுந்து விழுந்து எழுந்திருக்கும்.

மருந்து:—வெள்ளெருக்கிலை, உள்ளி, வசம்பு, சுக்கு இந்நான்கையும் சிறுநீர் விட்டரைத்து, நசியம் செய்ய, சொஸ்தமாகும்.

**196. எண்ணெய்தலைக்கேறல்.**

மருந்து:—முன்னங்கால் தளரத் தூக்கிச் சுற்றிட ஓட்டினால் எண்ணெய் யிறங்கும்.

**197. சோம்பல்.**

குணம்:—கட்டுத்தறியை முட்டிக் கொள்ளும். சோம்பலை அடைந்திருக்கும்.

மருந்து:—தலையில் மூன்று பட்டையாகச்சுட்டு, பக்கத்தில் தூலுரையாகச் சுட, சொஸ்தமாகும்.

### 198. வில்லூன்றிக் கோலிரண்டும் அழுந்தி வருதல்.

மருந்து:—கருப்பங்கட்டியைத் தின்னக் கொடுத்து, வீணுதண்டை இரட்டைச் சூடாகச் சுட, சொஸ்தமாகும்.

### 199. ஈயமுகவை.

குணம்:—நாலு காலும் தவளித்து விக்கும்.

மருந்து:—சூட்டுக்கோலைக் காயவைத்து, குத நிறைத் தாழச் சுட சொஸ்தமாகும்.

### 200. பாய்தல்.

மருந்து:—3-நாளைக்குக் கண்ணில் விட பாயாது. (?)

### 201. வண்டி சவாரி போய்வருகிற எருது மாடுகளுக்கு பட்டைத்தண்ணீர் வைத்தல்

மருந்து:—வேப்பம்பட்டை, அரசம்பட்டை, ஆலம்பட்டை, அத்திப்பட்டை, உதியம்பட்டை, நுணுப்பட்டை, எட்டிப்பட்டை, வேலம்பட்டை, நறுவலிப்பட்டை, நாவற்பட்டை, புளியம்பட்டை, கொஞ்சிப்பட்டை, பனம்வேர், அறுகம்வேர், கல்லாலின்பட்டை, துத்திவேர் இவை வகைக்கு 2-கைக்கொண்ட 1-பிடி யெடுத்து, நன்ருய் நறுக்கி, ஒரு பெரிய பானையில் போட்டு, அது நிறையக் காடிவிட்டு, 3-நாளான பின்பு, தினந்தோறும் காலையில் மாடுவொன்றுக்கு ஒரு போட்டில் கொடுக்க, இரைப்புச்சூடு, மார்வலி தீரும். இதைக் கொடுக்கு முன், வாய் கழுவுகிற கஷாயத்தைக் கொண்டு, வாயைக் கழுவவும். இஃது அநுபவம்.

### 202. மாந்தமசாலை.

நெய் $\frac{1}{2}$-வீசை, வால்மிளகு 5-பலம், சுக்கு 5-பலம், சோம்பு 2-பலம், ஓமம் 4-பலம், சதகுப்பை 2-பலம், வசம்பு 2-பலம், காட்டுச்சீரகம் 5-பலம், கசகசா 4-பலம், கடுகுரோகிணி 2-பலம், வெங்காயம் 1-வீசை, பனைவெட்டு $\frac{1}{4}$-வீசை, தும்பிரஷ்டகம் 2-பலம் ஆக இவைகளையெல்லாம் வெயிலில் காயவைத்தாவது வறுத்தாவது, இடித்து வத்திரகாயஞ் செய்து, ஷை வெங்காயத்தையும் பனைவெட்டையும் உரலிலே போட்டு இடித்து, அதன்பின்பு வஸ்திரகாயஞ் செய்து, தூளையும் போட்டு இடித்து, அதன்பின்பு மேல் எழுதிய நெய்யைக் கொஞ்சங்கொஞ்சமாய் விட்டு, நன்ருயிடித்து, எடுத்து வைத்துக்கொண்டு, தண்ணீரைக் காயவைத்துவிட்ட அன்றும், மற்ற நாளும் கொடுக்கலாம்.

### 203. குளிர்ச்சிமசாலே.

பச்சைப்பபறு 1-படி, பச்சையரிசி 1-படி, வெங்காயம் 1-வீசை, தயிர் 3-படி இந்த மூன்றையும் ஒன்ருய்ப் போட்டு அவித்து, தயிர்விட்டுப் பிசைந்து, மாடுகளுக்குக் கொடுக்கவும். இஃது அநுபவம்.

### 204. கருமசாலே.

ஆட்டுக்கால்-12, வெள்ளேப்பூண்டு 1-பலம், மிளகு 1-பலம், மஞ்சள் ½-பலம், மூங்கில் இலேச்சாறு 3-படி, நாயுருவிச்சாறு 1-படி இவைகளே 4-பெரிய படி தண்ணீர்விட்டு அவித்து, 3-படியாக இறக்கிக் கொடுக்கவும். பின்பு கால் சதையும், ½-படி உளுத்தமாவும், 5-பலம் நெய்யும்விட்டுப் பிசைந்து கொடுக்கவும். வென்னீர்விட்டவன்றும் விடாதபோதும் கொடுக்கலாம். கொள்ளே நிறுத்தவும். ஒரு வேளே தண்ணீர் காட்டவும். இஃது அநுபவம்.

### 205. உடும்புமசாலே.

உடும்பை உரித்துப்போட்டு, தலே, கால், வயிற்றிலிருக்கிற குடல் முதலியவைகளேத் தள்ளிவிட்டு, மற்ற மாமிசங்களே நன்ருய்க் கழுவியெடுத்துக்கொண்டு, மிளகாய், மிளகு, மஞ்சள், கொத்தமல்லி இவைகளேக் கறிக்குத் தக்கனவாக எடுத்து, உரலிற் போட்டுத் தூளாய் இடித்து, பின்பு, இந்தத் தூளோடே உடும்பு மாமிசங்களேயும் போட்டு, எலும்புகளெல்லாம் நன்ருய் நொறுங்கவிடித்துக்கொண்டு, ஒரு சட்டியில் நல்லெண்ணெயைவிட்டு, அடுப்பில் வைத்து, வேண்டியவரைக்கும் கொதிவருகிறபோது, முன்னிடித்த மசாலேயையும், இறைச்சியையும், எண்ணெயைவிட்டு அரைவேக்காடு அல்லது முக்கால்வேக்காடு வேகிறவரைக்கும் அடுப்பில்வைத்து, ½-அல்லது ¼-படி உளுத்தமாவு போட்டுக் கிளறி, உண்டைகளாக்கி, காலேயிலே மாத்திரம் வெறும்வயிற்றிலே கொடுக்கவும். பின் சவாரிபோகக் கூடாது. வைக்கோலே மிதமாய்ப்போடவும். கொள் வைக்கக்கூடாது. தேகத்துக்கு வலுவை கொடுக்கும் வான்மிளகு 5-பலம், கஸ்தூரி மஞ்சள் 5-பலம் இவைகளே யிடித்து, ½-போட்டில், பிராந்தியிலே போட்டு, இரண்டு கோழிக்குஞ்சு வாங்கி, மயிர், தலே, கால், குடல் முதலியவைகளே எடுத்துவிட்டு, நன்ருடியித்து, 3-பெரிய படி ஜலம்விட்டுக் காய்ச்சி 1-படி ஜலமாக விறக்கி, மேற்சொன்ன மருந்திற்போட்டுக் குழப்பி, காலேயிலே மாட்டைத் தண்ணீரிலே அடித்து, உடனே இவைகளே இரண்டு மாட்டுக்கும் கொடுக்கவும். கொள் வைக்கக்கூடாது. தண்ணீர் சாயங்காலம் காட்டவும்.

(வேறுவகை)

206. உடும்புமசாலே.

உடும்பு இரண்டு வாங்கி, தலே, கால், வால், அறுத்து, வயிற்றைக் கிரிச் சுத்திசெய்து, நன்ருய்த் தண்ணீர் விட்டுக் கழுவித் துடைத்து, உரலிற் போட்டு நன்ரு யிடித்து, பின்பு, அம்மியிலே வைத்து ஒரு சாமம் அரைத்து வழித்து, அதை நிறுத்து, அந்த எடைக்குப் பாதி வெங்காயமும், உளுத்த மாவும், நல்லெண்ணெ யும், $\frac{1}{4}$-பங்கு வெள்ளேப்பூண்டு, மிளகு 5-பலம், வால்மிளகு 3-பலம், சாதிக்காய்-1, மாருகட்டி-2, மொக்கு-2 இவைகளே யிடித்து, வஸ்திரகாயம் பண்ணி வைத்துக் கொண்டு, கோழி முட்டை வாங்கி உடைத்து, வெள்ளேக் கருவாங்கி, அதில் உளுத்த மாவை வறுத்துப் போட்டு, வஸ்திரகாயஞ்செய்த தூளேயும் போட்டு, வெங்காயரசத்தையும் விட்டு, பூண்டை யிடித்துப் போட்டு, இவைகளே யெல்லாம் ஒன்ருய்ப் பிசைந்து எண்ணெய்ச் சட்டியில் விட்டு, கொஞ்சம் சூடு காட்டி யிறக்கி பிசைந்ததிலே விட்டு, உருண்டைகளாக உருட்டி வைத்துக்கொண்டு, மாடொன் றுக்கு ஓர் உருண்டை வீதம் கொடுக்கவும். காலேயில் தண் ணீரில் நீந்த விட்டு, கொண்டு வந்து கட்டி, வைக்கோல் போடவும்.

207. உளுந்துக்களி.

1-படி உளுத்தமாவைச் சட்டியிற் போட்டு, சற்று நேரம் வறுத்து வென்னீர் விட்டுப் பிசைந்து, 5-பலம் நல்லெண்ணெயைச் சட்டியிலே விட்டு, சூடு காட்டி, யிறக்கி, இதில் அந்த மாவைப் போட்டு களிகிண்டி, 15-உருண்டை உருட்டி மாடொன்றுக்கு ஓர் உருண்டை வீதம் கொடுத்து, அதி காலேயிலே தண்ணீரில் அடித்துக் கொண்டு வந்து கட்டி, வைக்கோல் போடவும்.

208. பசுமாட்டுக்கு மருந்து.

சூட்டுத்தலே யொன்று வாங்கி அவித்து எலும்புகளே எடுத்துப் போட்டு, கறிகளே யிடித்து எடுத்துக் கொண்டு, இதிலே வெள்ளேப்பூண்டு 5-பலம், வால்மிளகு $2\frac{1}{2}$-பலம், நல்ல மிளகு $2\frac{1}{2}$-பலம், நல்லெண்ணெய் 5-பலம் இவற்றை ஒரு சட்டியிலே விட்டு, மற்றவற்றை யிடித்து, சூரணம் செய்து, சட்டியிற் போட்டு இறைச்சியையும் சேர்த்துக் கலந்து, அடுப் பில் வைத்துக் கிளறி, உள்ளுக்குக் கொடுக்கவும். சாயங்காலம் பச்சையரிசியையும் பச்சைப் பயிற்றையும் கஞ்சி காய்ச்சி, வைக்கவும். பின்பு வைக்கோல் போடவும். மறுபடியும் 2-நாள்

வெளியே அனுப்பாமல் வீட்டிலேயே கட்டி, பச்சைப்புல் போடாமல் ஷை கஞ்சி காய்ச்சி ஆறவைத்து, ஒரே தண்ணீர் காட்டவும்.

### 209. மாட்டுப்பிணி சகலத்திற்கும் மருந்தும் குணமும்.

கல்லுத்திரிக் குணம்:—கண்ணிரண்டும் சிவக்கும். கண்ணிலே பீளை தள்ளும். உடம்பு தடித்துக் காணும். ரத்தமும் கரியுமாக எருகும்.

மருந்து:—ஓமம் 10-பலம், கிராம்பு 10-பலம், ஈரவெங்காயம் 10-பலம், மிளகு 10-பலம், குப்பைமேனி 1-பிடி, தும்பை 1-பிடி, கோழியவரையிலை 1-பிடி, சங்குஇலை 1-பிடி, செங்கத்திரியிலை 1-பிடி, மாவிலிங்கஇலை 1-பிடி, கரிக்கொளியாய்க் கொண்டுவந்து, மயிர் பறித்தும் போட்டு, மூக்கு மயிரை கொள்ளியும், பின்கால் இரண்டும் சருகுடனும் எடுத்து விட்டு, உரலிலே நன்றாய்த் துவைத்து, கடைச்சரக்கும் காட்டு மருந்தும் துவைத்து, பிறகு எல்லாவற்றையும் ஒன்றாய்த் துவைத்து, மாட்டுக்குக் கவாளமாய்ப் போடவும். ஒரு நேரம் போடவும். அன்றைக்குத் தண்ணீர் வைக்கக்கூடாது. மறுநாள் தண்ணீரிலே கோவைத்தண்டும் வன்னிப்பட்டையும் துவைத்து, தண்ணீரில் போட்டுச் சுடவைத்து, ஆத்தியிட்டு வைக்கவும். இந்த மருந்து கொடுத்து 3-நாள் மாற்று மருந்து, பசுவின் மோர், குறுணி, 2-சாதிக்காய், பழம்புளி 6-விளாங்காயளவு, நற்சீரகம் 10-பலம், ஈரவெங்காயம் 10—பலம் இவை எல்லாவற்றையும் அரைத்து, மோரிலே கலக்கிப் புகட்டவும். அன்றைக்குத் தண்ணீர் வைக்கக்கூடாது.

### 210. கொருவன்.

குணம்:—வாயிலிருந்து நீர் வரும். கால் பாவி குதிக்கும். வீக்கம் காணும் முக்கல் காணும். உடம்பில் நடுக்கம் காணும்.

### 211. மடுவன்.

குணம்:—கெளுத்து கெளித்து மூரிக் காணும். காது சோரும்.

மருந்து:—விளக்கெண்கணய் $\frac{1}{2}$-படி, வேலிப்பருத்திச்சாறு $\frac{1}{2}$-படி, நிலப்பனைக் கிழங்கு 1-பிடி, வசம்பு 10-பலம், வெங்காயம் 10—பலம், கொடிவேலிவேர் 2-வீசை, மஞ்சிக்கோரைக்கிழங்கு $\frac{1}{2}$-படி இவற்றை விளக்கெண்ணெயில் எறித்து உள்ளுக்குக் கொடுக்கவும்.

### 212. கொரை நோக்காடு.

குணம்:—தொடுத்த அன்றைக்கு நச்சு மேய்ச்சலாக மேயும். மாடு கருக்கல் காணும். மறுநாள் மாடு நிலை கொண்டு நிற்கும். உள்ளாக வாளையீரல் வீங்கும். வெளியே தெரியாது.

மருந்து:—ஓமம் 10-பலம், திப்பிலி 10-பலம், சுக்கு 10-பலம், உள்ளி 10-பலம், மிளகு 10-பலம், வசம்பு 10-பலம், மாவிலிங்கஇலை, தும்பையிலை, குப்பைமேனியிலை கோழியவரையிலை, வேலிபருத்தியிலை, செங்கத்திரியிலை, சங்கிலை, வகைக்கு 1-பிடி எடுத்துத் துவைத்து, கடைச்சரக்கு இடித்து, இரண்டும் சேகித்து, மாட்டிற்குக் கவாளமாய்க் கொடுக்கவும். கொடுத்தவுடனே 1-படி வென்னீர் வைத்துப் புகட்டவும்.

இதற்கு நசியம்:—மேனியிலை, சாரணையிலை எருக்கம்பழுப்பு, வேளையிலை, உள்ளிப்பூண்டு, 10-மிளகு, உப்பு இவற்றைக் கூட்டி நறுக்கி, பொட்டணமாய்க் கட்டி, சிறுநீரில் தோய்த்து, காது, கண் நாசிகளில் பிழியவும். மாடு கீரிப் பூசிக்கி முரிமுரிக்கி எழுந்திருக்கும்.

வேறுவிதம்:—மருந்து:—கரிப்பிரண்டை, 1-சிரங்கை உப்பு, வேப்பிலை இவற்றைத் துவைத்து, கவளம் போடவும்.

### 213. மாட்டு வியாதி சகலத்திற்கும் (லேகியம்) சர்ப்பதைலம்.

விரியன் பாம்பிலே பெரும் பாம்பாக அடித்து, ஒரு புது முட்டியிலே போட்டு, குறுணி உப்பும் போட்டு, பானைத்தூரிலே ஊசித்துவாரம் போலே பொத்து, எருக்கூட்டின குப்பைத் தலத்திலே கிடங்கு வெட்டி, அடியில் புதுச் சட்டியை வைத்து, அதற்குமேல் பானையை வைத்து, புதுச் சட்டியைப் போட்டு, பானையை நன்றாய் மூடி, பானை தெரியாமல் மண்கொண்டு மூடிடவும். ஒரு மண்டலஞ் சென்ற பிறகு திறந்து பார்த்தால், கீழாக இருக்கிற சட்டியிலே தைலமிறங்கி யிருக்கும். அதைக் கலயத்தில் வைத்துக்கொண்டு, மாடு மொச்சுதானால் பனை மட்டையைத் தட்டித் தோய்த்து, மாட்டுநாவிலே வைக்கவும். மாட்டு வியாதி சகலமுந் தெரிக்கும். பிறகு வெந்நீர் வைக்கவும்.

[விஷமருந்து:—பெரிய நாகம்பிள்ளை கைய மருந்து, பிறகு நஸாத்தப் பிள்ளை கை மருந்து.]

### 214. எரிகாய்ச்சல்.

குணம்:—சாதாரணமாய் இந்த வியாதி இராக் காலத்தில் காணுகிறபடியால், அதைப் பெரும்பாலும் கண்டுபிடிக்க முடிவதில்லை. அதிகாலையில் மாடு திம்மென்றிருக்கிறது. ஒன்றுந் தின்னாது. தாகமதிகமாகும். அசைபோடாது. மூக்கு வாய் வரண்டு, மூச்சு வேகமாய் வரும். கண்கள் ஆவல் கொண்டிருக்கும். நாடி உதட்டியாய்ச் சீக்கிரமாக

அடித்துக்கொள்ளும். அடியெடுத்து வைக்க மாட்டுக்கு இஷ்டமிராது. நடந்துபோகும்படி பலவந்தஞ் செய்தால், அதிகமாக நொண்டும். நொண்டுகிற அவயவம் சாதாரணமாய் வீங்கியிருக்கும். சில வேளைகளில் முன் சப்பையிலாவது, முதுகில் நெடுக முன்பக்கமாவது, இடுப்பிலாவது, பின்பக்கங்களிலாவது கணுக்கால்வரை கால் முழுவதுமாவது வீக்கமிருக்கும். அழுத்திப் பார்த்தால் ஆடாயிருக்கும் அதிகமாக நோவும். அழுத்துகிற இடத்திலே நெறுநெறு வென்றிருக்கும். அந்த வியாதி சீக்கிரத்தில் அதிகரித்து, சில நாழிகையிலே மாடு குன்றிச் செத்துப் போகும். கால்களும் அழலாயிருந்த பாகங்களுங் கூட சில்லிட்டு நாடி அதிக சீக்கிரமாய் அடித்துக்கொண்டு கைக்குத் தென்படாது. சீக்கிரத்தில் உணர்ச்சி போய்விடும்.

## 215. மாட்டு வைத்திய சங்கிரகம் நடிப்பிக்கவேண்டிய கிரமம்.

மாடுகளை ஜாக்கிரதையாய்க் காத்துப் போஷித்து வந்தால், அவைகளுக்குப் பிணி யணுகாது. அவைகளுக்கு அதிகமாய்த் தீனிபோட்டாலும், அவைகளை அதிகமாக அல்லது குறைவாகப் பட்டினிபோட்டு வைத்தாலும், அவைகளுக்குச் சௌக்கியங் கெட்டு ரோகமுண்டாகும். இச்சிறு புத்தகத்தில் கண்டிருக்கிற வியாதிகளெல்லாம் தடுக்கப்படத் தக்கனவே. அஃது எப்படியெனில், மாடுகளின் சொந்தக்காரர்கள் சாதாரணமாய் அவைகளைக் காப்பாற்றிக்கொண்டு கொஞ்சம் ஜாக்கிரதையா யிருப்பார்களாகில், அவைகளுக்கு நோய் அணுகாது. சில தொத்து வியாதிகள் மாடுகளைப் பாதுகாப்பதிலும், போஷிப்பதிலும் தாறுமாறு செய்வதனாலேயே உண்டாகின்றவை. பல வியாதிகளின் காரணங்கள் பூர்த்தியாய்ச் சொல்பட்டிருக்கின்றன. மாடுகளின் சொந்தக்காரர்கள் நாடோடியான சாக்கிரதையினாலே அந்தக் காரணங்களைத் தடுத்துப் போடலாமாகையால், இந்த வியாதிகளில் எதாவது அவர்களுடைய மாடுகளுக்குக் கண்டால் அதை அவர்களுடைய அஜாக்கிரதையினாலேதானென்று சொல்ல வேண்டும். சாதாரணமாய், ஒரு முக்கியமான காரியம் வெகுவாய் அசட்டை செய்யப்படுகிறது. அஃதாவது, வெயிற்காலத்திலும், வெள்ளமோடுகிற காலத்திலும், துர்பாக்கியத்தினால் ஒருவேளை மாடுகளுக்குக் கொள்ளை வியாதி உண்டாகிற காலத்திலும், மாடுகளுக்குக் தின்பதற்கு உலர்ந்த புல்லையாவது வைக்கோலையாவது சேகரித்து வைத்துக்கொள்ளுவதில்லை. அதனாலே ஆகாரமாக அகப்படுவதைப் பொறுக்கித் தின்னும்படி மாடுகளை அவிழ்த்து ஓட்டிவிடுகிறார்கள். அவைகள் காரமும் விஷமுமுள்ள தழைகளையும் பூண்டுகளையும் புல்களையும் வெகுவாய் மேய்கின்றன. வெள்ளம் வற்றிப்போனபின்பு அந்தப் பிரதேசப்

களில் வெள்ளத்தில் அழுந்திக்கிடந்து, அப்போதுதான் புறப்பட்ட புல்களை அவைகள் மேய்கின்றன. இந்த இரண்டு விதங்களினாலே நோகவே பிணி யணுகினாலும் அணுகும். சில வேளைகளில் வியாதி தொத்தியாவது கொள்ளும். வெயிற்காலத்திலும், வெள்ளக்காலத்திலும், கொள்ளைநோய்காலத்திலும் உதவும்படி மாடுகளின் சொந்தக்காரர்கள் போதுமானதைவிட அதிகமாகவே தீனியை இருப்பாக எப்போதும் வைத்திருக்க வேண்டும்.

அப்போது, தன் மாடுகளை வெளியில் விடாமல், வசதியான கொட்டகையில் கட்டி, கிரமமாய்த் தீனிபோட்டு, தண்ணீரும் காண்பித்து வந்தால், அவைகளுக்குப் பிணி சேராது. மேலும், வருஷத்தில் சில ருதுக்களிலே வெயிலுக்கு நிழலும், பெருமழைக்கும் குளிருக்கும் கூரையும், இராக்காலத்துக்கும் குளிருக்கும் அடைப்பும், மாடுகளுக்கு அவசியமாய்த் தேடிபாதுகாக்க வேண்டிய அவசியம், சொத்துக்காரனுக்கு அவசியமாக வேண்டியது. மாடுகள் பெருமழையில் நனைந்தாலும், அவைகளைத் தண்ணீர் நிற்கிற நிலத்தில் வைத்திருந்தாலும், கோடைக்காலத்து மத்தியானம் கடுவெயிலுக்கு நிழலாவது ஒத்தத்தினாலுண்டாகும் கொடிய குளிருக்கும், இராக்காலத்து மூடுபனிக்கும் அடைப்பு இல்லாவிட்டாலும், மாடுகள் சௌக்கியமாக விருக்கமாட்டா. இந்து தேசத்திலே, மாடுகளை, ஐயோ பாவம்!, அப்படியே வெகுவாய்த் தாறுமாறு செய்கிறார்கள்.

கோயில் மாடுகளிடத்தில் அன்பாயும் பட்சமாகவும் இருக்க வேண்டியதுமல்லாமல், அவைகளைப் பூஜ்யதையோடு மேன்மையாக வைத்திருக்க வேண்டுமென்று, இந்துமத நூல்களில் கட்டளையிட்டிருக்க, மாட்டுக்குச் சொந்தக்காரனாகிய இந்து, அப்படிப்பட்ட கோயில் மாடுகளிடத்திலும் அவ்வளவு அஜாக்கிரதையாயிருக்கிறான். அஃது எவ்வளவு ஆச்சரியம்!

## 216. கொட்டகை.

மாட்டுக் கொட்டகையின் தரை மட்டம் சுற்றிலு மிருக்கிற பூமிக்கு, அதிக மேடாகவே இருக்க வேண்டும். நன்றாய்த் தண்ணீர் ஓட, கால்வாய் இருக்க வேண்டும். மாடுகளின்மேல் வெயிலும் மழையும் படாதிருக்க, நன்றாய் மேற்கூறை போட்டு, ஊதலும் இராக் காலத்துக் குளிர்காற்றும் படாதபடி சுவர்களெழுப்பியும் இருக்கவேண்டும். போதுமான வெளிச்சம் தெரியும்படி ஜன்னல்களும் இலேசாய் உள்ளே போகும்படியாயும் வெளியில்

வரும்படியாயும் கதவுகளும் வைத்திருக்கவேண்டும். காற்றுப் போக்கு வரத்து எப்படி யிருக்க வேண்டுமென்றால், நல்ல காற்று அடியில் நுழையவும் கெட்ட காற்று மேலே எழும்பிப் போகவுமா யிருக்க வேண்டும். மூத்திரத்தையும் சாணியையும் கிரமமாய் எடுத்துப்போட்டு, கொட்டாரையையும், சுற்றுப் பக்கத்துத் தரையை யும், சுத்தியாய் வைத்திருக்க வேண்டும்.

## 217. இந்து தேசம்.

இந்து தேசத்திலே மாடுகளுக்குச் சுத்த ஜலம் கிடையா தாகையால், அவைகள் மிகுந்த அழுக்குத் தண்ணீரையே வெகு வாய்க் குடிக்க வேண்டியிருக்கிறது. அப்படிப்பட்ட தாறு மாறி னால் சந்தேகமில்லாமல் அடிக்கடி வியாதிகள் வந்துக்கொண்டே இருக்கும். இந்தப் புத்தகத்திலே இந்து தேசத்தில் மாடுகளைப் போஷிப்பதையும் அவைகளுக்குத் தண்ணீர் காட்டுவதையும், அவைகளைச் சாதாரணமாய் வைத்திருப்பதையும் குறித்து, பூர்த்தியாய்ச் சொல்ல உத்தேசிக்கவில்லை. ஆனால் வியாதியின் காரணங்களை நோக்கு மிடத்து, மாடுகளின் விஷயத்தில் சொந்தக் காரர்கள் அஜாக்கிரதையினாலே ஏறக்குறைய அவைகளுக்கு சகல வியாதியு முண்டாகிறது. எவ்வளவு பிரத்தியக்ஷமாயிருக்கிற தென்று குறித்துக் காட்டுவதுதான் முக்கிய உத்தேசம். எருதை யாவது பசுவையாவது சீராய்க் காப்பாற்று வதற்குப் போதுமான தீனி சொற்பச் செலவில் கிடைக்கும். அந்தச் செலவு, எருதை யாவது பசுவையாவது உண்மையாய் உபயோகித்து அதன் பலனை அடைகிற பிரதிமனிதனும் சுலபமாய் செய்யக் கூடிய அவ்வளவு சொற்பந்தான். ஏனென்றால், எருது அதனுடைய உழைப்பி னாலும் பசு அதனுடைய பாலினாலும் ஈனுகிற கன்று நாலேயும் அவைகளைக் காப்பாற்றுவதற்குப் பிடிக்கும் செலவை விட அதிக பலனைக் கொடுக்கிறது.

ஆகையால்தான் மாடுகள் மெலிந்து பிணி கொள்ளும்படி கொள்ளை வியாதிகள் தோன்றும்படியாவது இடங்கொடுக்கிற சொந்தக்காரன் அக்கரையில்லாமையினாலாவது, சோம்பலினா லாவது, அகங் கொண்டு கொடுமையாய் அசட்டை செய்வதினா லாவதனாலேயே, வருவித்துக் கொள்ளுகிற துன்பத்துக்குத் தன்னைத் தானே நொந்து கொள்வதல்லாமல், தன்னுடைய மாடு களுக்குச் செய்த கொடுமைக்காக உத்தரிக்க வேண்டியவனு மாவான்.

## 218. தொற்று வியாதிகளைத் தடுத்தல்.

இந்தியாவிலே, ஆடு மாடுகளுக்குச் சாதாசணமாய்க் காண்

கிற தொத்துவியாதிகளும் அவைகளுக்கு யாதொரு தொத்து வியாதி கண்டவுடனே விசாயகமாய்ச் செய்யவேண்டிய சிகித்சைகளும்.

### 219. முக்கியமான தொத்து வியாதிகள்.

(1) விஷசுரம், (2) ரத்தக்கட்டுக்காய்ச்சலைப் பற்றிய மண்ணீரலிலே ரத்த மடைப்பான் முதலிய வியாதிகள், (3) கால் கோமாரி வாய் கோமாரி, (4) பக்கசூலை ஆகிய வியாதிகள் இந்து தேசத்தில் அநேக விடங்களில் காணப்படுகின்றன. அவைகளுக்கு வெவ்வேறு ஜில்லாவிலே வெவ்வேறு பெயர் வழங்குகிறது. விஷசுரம் வெகுவாய்த் தொத்திக் கொள்ளுகிற நோய். அது கொன்று போடத் தக்கதே. இந்த வியாதி மாடுகளுக்குக் கண்டால், அது கண்ட 100-மாடுகளில் 50-முதல் 90-வரையில் செத்துப்போகும். இந்த வியாதி 2-நாள் முதல் 15-நாள் வரை இருக்கும்.

### 220. குண்டிக்கா யெரிச்சல் குறியும், சிகித்சையும்.

குறிகள்:—அதிக அலட்டுதலாலாவது, மூக்கினாலாவது, இடுப்பின்மேல் பட்ட அடியினாலாவது, இந்த வியாதி உண்டாகலாம். மேலும், இது, சீதோஷ்ண சடுதியில் மாறுவதினாலும், குளிரினாலும், ஈரத்தினாலும், வெளியே நிற்பதனாலும், பூரணம் பூத்த கெட்ட இரையைத் தின்பதனாலும், மூத்திரத்தை அதிகமாய்ப் போக்குகிற வேகமான மருந்தைத் தாறு மாறாக உபயோப்பதனாலும், உண்டாகலாம்.

குணம்:—சாதாரணமாய்க் காய்ச்சல் சம்பந்தமான தொந்தரவை வருத்தத்தோடு கொஞ்சங் கொஞ்சமாய் அடிக்கடி மூத்திரம் போதல் முதலிலேயே அது பிசுபிசுப்பாயிருக்கும். பின், இரத்தங் கலந்து வரும். மாட்டுக்கு முதுகு வளைந்து போம். இடுப்பில் அமுக்கினால் நோவுண்டாகும். நடக்கும்படி கட்டாயம் செய்தால் பின்னங் கால்களை இழுத்துக் கொண்டு நடக்கும். நடக்கிறதனால் உண்டாகிற நோவினாலே காயக்குறிகள் அதிகமாகும்,

மருந்து:—எப்படி யென்றால், மலத்தைத் தாராளமாய்ப் போக்குவதற்காகப் பின் எழுதிய மருந்தைச் செய்யவும். சிற்றாமணக்கெண்ணெய் $\frac{1}{2}$-பயிண்டு அல்லது 1-ஆழாக்கு வார்க்கவேண்டியது. வார்த்த பின்பு 4-மணி நேரத்திற்கொரு தரம் கர்ப்பூரம் 2-திராம், $\frac{11}{16}$-ரூபா யெடை, அபினி 1-திராம், மேல் சொல்லியதில் பாதி, குராசாணி வோமம் 1-திராம், மேல் சொல்லியபடி இதை உள்ளுக்குப்

போட்டு, சூடான ஒத்தடங் கொடுத்து, கடுகை அரைத்துத் தடவின பின்பு, அன்றுடம் புதியதாய் உரித்த ஆட்டுத்தோலே இடுப்பின் மேல் போர்த்திக் கட்ட வேண்டியது. காற்றடைப் பான விடத்தில் மாட்டைக் கட்டவேண்டியது.

## 221. விஷமிடுதல்: குறியும், சிகித்சையும்.

குணம்:—தீனியோடு கூட தன் செயலாய் விஷத்தைத் தின்பதிஞலாவது கொல்லும் பொருட்டுக் கொடுப்பதஞலாவது மாடுகள் செத்துப் போகின்றது.

விஷத்தின் தன்மை:—விஷம் பூண்டாகவும் இருக்கலாம். பாஷணம் போன்ற நிற வஸ்துவாகவும் இருக்கலாம். இந்து தேசத்தில், இவ்விடங் களிலே தோல் சம்பாதிப்பதற்காகச் சக்கிலிகளும், வெட்டியான் களும், மாடுகளை விஷமிட்டுக் கொலலுகிருர்கள். செத்துப் போகிற மாடுகளை, வெளியிலே யெறிந்துவிடுவது இந்து தேச முழுமையும் சாதாரணமான வழக்கமாகவிருக்கிறது. தோல்கள் கிராமத்துச் சக்கிலிகள், வெட்டியான்களுக்குச் சேரவேண்டிய தென்றும் சொல்லுகிருர்கள். சில ஜில்லாக்களில் சக்கிலி வெட்டி யான்கள் தோல்களை எடுத்துக்கொள்ளுவதற்காக ஜமீன்தாருக்குக் கிஸ்தி கட்டுகிருர்கள் சக்கிலி வெட்டியான்கள் தோல்களைத் தோல் வர்த்தகர்களுக்கு விற்கிருர்கள். அநேக ஜில்லாக்களில் இவ்வளவு காலத்திற்குள் சக்கிலி வெட்டியார்கள் இத்தனைத் தோல் கொடுத்தால், அதற்காகத் தோல் வர்த்தகன் இவ்வளவு பணங் கொடுப்பதாகச் சக்கிலி வெட்டியான்களுக்கும், தோல் வர்த்தகர்களுக்கும் உடன்படிக்கை ஏற்பட்டு அதில் கையெழுத்துச் செய்யப்படுகிறது. சக்கிலி வெட்டியான்களுக்குத் தோல்வர்த்தகன் முன்பணங் கொடுப்பதுமுண்டு. இதஞல் உடன்படிக்கையில் கண்டிருக்கிற கெடுவிற்குள் அத்தனைத் தோல்களைச் சம்பாதிக்கும்பொருட்டு சக்கிலி வெட்டியார், மாடு களுக்கு அடிக்கடி விஷமிட்டுக் கொல்லும்படி நேரிடுகிறது. மாடுகளுக்கு அவர்களே விஷமிடுகையிலாவது, அவர்களுடைய பெண்சாதிகளையும் மக்களையுங் கொண்டு விஷமிடுவிக்கையாலவது, அவர்களைப் பலதடவை கண்டுபிடிக்கிருர்கள்.

### விஷமிடுகிறவிதங் காண்க.

சாதாரணமாய் விஷமிடுகிற தெப்படி யென்ருல், விஷத்தைக் கொஞ்சம் நொய்யிலாவது மாவிலாவது கலந்து, அதை வாழை யிலேயிலாகிலும் வேறே எந்த இலையிலாகிலும் சுற்றி, எருதின் வாயில் அதைப் போடுகிருர்கள்,

மற்ருெருவிதம்:—மாடு மேய்ந்து கொண்டிருக்கையில் தின்றுவிடும்படியாக அதற்கெதிரில் அதைத்தரையின்மேல் போடுகிருர்கள்.

வேருெருவிதமாவது—:விஷத்தைத் தித்திப்பான சிறிது தீனியின்மேல் தெளிப்பது.

மற்ருெருவிதம்:—ஒரு கூர்மையான ஆயுதத்திஞல் தோலின் வழியாக உடலில் எந்த பாகத்திற்குள்ளாவது செலுத்துதல். குதத்திற் (சாணிப்போடுகிற வழிக்) குள்ளாவது யோனிக்குள்ளாவது விஷத்தைச் செலுத்துவது. சாதாரணமாய்க் கொடுக்கிற விஷம் வெள்ளைப் பாஷாணம் அல்லது மஞ்சள் பாஷாணத்தில் தயார் செய்துதான் கொடுக்கப்படுகிறது.

சிலசமயங்களில், ஊமத்தை, பச்சைநாபி, எருக்கை, எட்டிக்கொட்டை இப்படிப்பட்ட விஷப் பூண்டுகளையுங் கொடுப்பார்கள். பாஷாணத்தை, தோல் வர்த்தகர்கள் குமாஸ்தாக்கள் எப்போதாவது சம்பாதித்து, சக்கிலி வெட்டியார்களுக்குக் கொடுக்கிறதாய்ப் பிரஸ்தாபம்.

எந்த ஜில்லாவிலே விஷசுரம் பரவியிருக்கும்போது அந்த வியாஜத்திஞலே அதிகமாய் விஷமிடுகிறதுபோலிருக்கிறது. அப்படி விஷமிடுவதஞலே (மாடுகள் அதிகம் இறப்பதஞல்) தோல்கள் அதிகமாய்க் கிடைக்கும். மேலும், விஷசுரம் தொத்துவியாதியென்று சக்கிலி வெட்டியாருக்கு நன்ருய்த் தெரியும். ஆகையிஞலே இந்த வியாதியிஞல் செத்துப்போன மாடுகளின் தீனிப்பைகளுக்குள்ளும் குடல்களுக்குள்ளுமிருக்கிற வஸ்துக்களை அவர்களெடுத்து, அந்த வியாதியில்லாத தூர கிராமத்துக்குக் கொண்டுபோய், மேய்ச்சல் நிலங்களில் தெளித்துவிடுகிருர்களென்றும், அதஞல் அந்த வியாதி அந்த கிராமத்து மாடுகளுக்கும் தொத்திக்கொண்டு அவைகள் சாக, இவ்விதமாய்த் தோல்களைச் சம்பாதிக்கப் புதுவகைகளைத் தேடிக்கொள்ளுகிருர்கள் என்றும், இப்படி நடந்ததாகவொரு சங்கதியெழுதப்பட்டிருக்கிறது. ஆமணக்குச் செடியையும் விதையையும் தின்பதஞலும், மழையில்லாமல் வரண்டுபோயிருக்கிற காலத்திலே போதுமான மேய்ச்சல் அகப்படாதபோது, காரலான செடிகளையும், பூண்டுகளையும் தின்பதஞலும் சிலசமயங்களில் மாடுகளுக்கு விஷமேறுகிறதுமுண்டு.

குணம்:—எருதாவது பசுவாவது அதிகமாய் விஷத்தைத் தின்றுவிட்டாலும் அதற்குக் கொடுத்தாலும், அந்தப் பிராணி இருந்தாப்போலிருந்து (நரியாகி) பின்பு வலிகண்டு, அடிவயிற்றில் பலமான நோவு உண்டாகிறது. பின்னங்கால்களாவது, கொம்புகளாவது

வயிற்றை அடித்துக்கொள்ளும். விலாபக்கங்களை அடிக்கடி திரும்பிப்பார்க்கும். வாயில் நுரை தள்ளும். அதிக தாகமெடுக்கும். அடிக்கடி துடிதுடிக்கும். வயிறு உப்பிசங் காணும். சாணி அடிக்கடி போடும். அப்படியிருந்து, கழிச்சல் கண்டு, அதிலே அதிகமாகவாவது கொஞ்சமாகவாவது இரத்தம் விழும். சாதாரணமாய் 2-மணி முதல் 4-மணி நேரத்துக்குள் மாடு செத்துப்போம். எந்த மாதிரி விஷம் எவ்வளவு கொடுக்கப்படுகிறதோ, அதற்குத் தக்கபடி வெகுவாய், கொஞ்ச நேரத்திலாவது பின்னும் பொருத்தாவது சாவு நேரிடும்.

**மருந்து:**—சாதாரணமாய், விஷத்தை அதிகமாய்க் கொடுக்கிறபடியினாலே, வைத்தியம் பிரயோஜனப்படமாட்டாது. மேலும், முறிவு மருந்துகளும் மாட்டுக்காரர்களிடத்தில் தயாராய்க் கிடைக்கமாட்டாது. விஷத்தைக் கண்டுபிடிப்பது மாட்டுக்காரர்கள் தங்கள் மாடுகளுக்கு விஷமிடப்பட்டது என்று நம்புவதற்கு ஏதுவிருந்தால், நாலாவது தீனிப்பைக்குள்ளும், சிறுகுடலின் முதலிலும், குடலும் தீனிப்பையும் கூடியிருக்கிற விடத்துக்குள்ளுமிருக்கிற வஸ்துவில் கொஞ்சம் ஜாக்கிரதையாய் எடுத்து ஒரு பெரிய பெட்டியில் பத்திரமாய்ப்போட்டு பின்பு காரமான சாராயத்தை நிறைய விட்டு, நன்றாய்ச் சடையினாலே வாயை அடைத்து, பின்பு ரசாயன பரிசோதனைக்கு அனுப்பவேண்டியது. ஜில்லாவிலுள்ள மாஜிஸ்டிரேட்டாவது சிவில் சர்ஜனாவது, அந்தப் புட்டியை ரசாயன பரிசோதகரிடத்துக்கு அனுப்பவேண்டியது. அவ்விடத்தில் விசாரித்தால் இப்படி அனுப்பலாம் என்று வேண்டியபோதெல்லாம் சொல்லுவார். விஷம் கொஞ்சமாகவிருந்து குறிகள் மும்முரமில்லாத விஷயங்களிலே பொடி செய்த கந்தகம் 2-அவுன்ஸ், $\frac{1}{2}$-ஆழாக்கு லின்ஸீட் ஆளிவிரை யெண்ணெய் 4-அவுன்ஸ், 1—ஆழாக்கு சூடான அரிசி கஞ்சி 1-புட்டி அரைப்படி அல்லது வேறொருமுறை லின்ஸீட் ஆளிவிதை எண்ணெய் 1-பயிண்டு, உழக்கு பொடி செய்து கந்தகம் 4-அவுன்ஸ், ஆழாக்கு சுக்குத்தூள், $\frac{1}{2}$-அவுன்ஸ் $1\frac{1}{8}$-ரூபாயெடை, சூடான அரிசிக் கஞ்சி 1-புட்டி, $\frac{1}{2}$-படி இதை பேதியாவதற்காக உடனே வார்க்கவேண்டியது. வேண்டிய மட்டும் ஆளிவிதைக்கஞ்சி வார்த்துக் கொண்டு வரலாம். நோவும் கழிச்சலும் நிற்கிற வரையில் தண்ணீர் காட்டக்கூடாது. ஆட்டுக்கு இதில் பாதிமருந்து வார்க்கலாம். ஆகாரம் தவிட்டைப் பிசைந்து, வைக்கவேண்டும். ஓரிண்டு தினத்தில் பச்சைப்புல் போடலாம். ஆனால் மட்டிப்புல் போடாமல் நல்ல புல் போடவேண்டியது.

இப்படிக்கு பிஞ்ஜின் ஜமேதார் காங்கரய நயினர் எழுதியது.

# PART—II

## மாட்டு இலக்ஷணநூ

# XVI. மாட்டு அங்க அடையாளம், சுழி, மாடுகளைத் தேர்ந்தெடுத்தல்.

### காப்பு.

#### கடவுள் வணக்க

*சுரிநிழலும், கரிவிழியும், மறைமுகமு மொழிபிரபை தொடர்காது*
*மிருதனமும் பயவரத்துடனே யளிக்கு வடமோடரர் கையும்*
*மரியதுகின் மருங்கைசைய வடயேகும் பலகலையும், யளி எத்தன்னுவில்*
*பரிபாமு முரலை நட மாடுகின்ற பாரதிதாள் பதிதல் செய்வோம்.*

சவாரி வண்டிகளுக்கு உபயோகமாய் வருகின்ற காளை மாடுகளுக்குக் கீழே கண்ட இலக்ஷணங்கள் பொருந்தி யிருத்தல் வேண்டும்.

1 நிறம் ஆறு:—மயிலை, கருமயிலை, சங்குவெள்ளை, கருவெள்ளை சந்தனப் புல்லை, இருண்டசுவலை, இந்த நிறங்கள் உத்தமம்.

2. சரீரம்:—நீண்டதாகவும், குதிரை சரீரம்போல திரட்சியாயுமிருக்க வேண்டும்.

3. எலும்புகள்:—பருமனாயிருக்க வேண்டும்.

4 உரோமங்கள்:—அழுத்தமாய் இருக்கவேண்டும்.

5. தலை:—சிறியதாயிருக்க வேண்டும்.

6. முகம்:—நீண்டதாயும், சதையின்றியும் இருக்கவேண்டும்.

7. கொம்புகள்:—குட்டையாகவும், கறு நிறமுடையனவாகவும் இருக்க வேண்டும்.

8. கண்கள்:—பெரியனவா யிருக்கவேண்டும்.

9. காதுகள்:—சிறியனவா யிருக்கவேண்டும்.

10. நாடி:—இரட்டை நாடி ஒதுக்கு நாடியாகயிருக்க வேண்டும்.

11. கழுத்து:—இரட்டைக் கழுத்தா யிருக்கவேண்டும்.

12. நாறை:—தொங்காமல் ஒட்டி யிருக்க வேண்டும்.

13. கடைவயிறு:—கைக்கு ஓர் ஒட்டை நீளத்திற்கு அதிகப்படாமலிருக்க வேண்டும்.

14. குறுக்கு:—இரட்டைக் குறுக்காயிருக்க வேண்டும்.

15. தொப்புள்:—ஒட்டியிருக்க வேண்டும்.

16. பிட்டி:—விரிவாயிருக்க வேண்டும்.

17. வால்:—குட்டையாகவும், சாணிபோடும் போது தூக்கி மடக்கிக் கொள்ளும் தன்மையுள்ளதாகவு மிருக்கவேண்டும்.

18. பின்பக்கம்:—விரிவாயிருக்க வேண்டும்.

19. பவனவாய்:—சிறியதா யிருக்கவேண்டும்.

20. தாரை:—கறு நிறமுள்ளதா யிருக்க வேண்டும்.

21. கால்கள்:—கனமுள்ளனவாகவும், சிறியனவாகவும் இருக்கவேண்டும்.

22. சந்துகள்:—அடைப்பா யிருக்கவேண்டும்.

23. குளம்புகள்:—குத்துக் குளம்பாயும், கற்குளம்பாயும் இருக்கவேண்டும்.

24. சுழிகள்:—சிமிழின் மேல் ஒற்றைச் சுழி யிருப்பது உத்தமம். அதற்கு ரிஷபச்சுழி என்று பெயர். முதுகில் பட்டரைச்சுழி இருக்கவேண்டும். இந்தச்சுழி சிமிழிலிருந்து பின்னே ஒரு சாரைக்குள் ஒற்றையாக இருக்கவேண்டும். (அல்லது) நடுமுதுகிற்குப் பின்னும் ஒற்றைச் சுழி யிருக்கலாம். (இதற்கு) பின்பட்டரைச்சுழி என்று பெயர். நெற்றியில் இரண்டு சுழி ஒன்றின் கீழ் ஒன்று நேரே கீழ் நோக்கியிருப்பது உத்தமம். (இதற்கு) குடைமேல் குடை என்று பெயர்.

குறிப்பு:—மாட்டை விலக்கு வாங்கப் பார்க்கும்பொழுது, அந்த மாடு தன் ஒற்றை விலாவை (அல்லது) வயிற்றை நாக்கினாலும், தன் தலையைக் கீழ்மேல் அசைத்தாலும் நல்ல சகுனமென்று இந்துக்களால் எண்ணப்படுகிறது.

# PART—II

## மாடுகளின் குற்றங்கள், அடையாளங்கள், சுழிகள், பலன்கள், இவற்றை அறியும் முறை.

சவாரி வண்டிகளுக்குப் போகும் மாடுகளுக்கு இதனடியில் சொல்லும் குற்றங்க ளிருக்கக் கூடா

1. அவயவம்:—கருடக முகம், முக வெள்ளை.

அடையாளம்:—முகத்தில் மட்டும் வெண்மை நிறமாயிருக்கும்.

2. அவயவம்:—ஊற்றுக்கண்.

அடையாளம்:—கண்ணிலிருந்து தண்ணீர் வடிந்து கொண்டிருக்கும்.

பலன்:—நாள் சென்றால் பார்வை குன்றும்.

3. அவயவம்:—சதைக்கண்.

அடையாளம்:—கண்ணின்கடைசியில் சிவந்த நிறமாகச் சதை படர்ந்திருக்கும்.

பலன்:—நாள் செல்லச் செல்ல பார்வை குறையும்.

4. அவயவம்:—புள்ளிக்கண்.

அடைளாளம்:—கடைக்கண்ணில் வள்ளைநிறப்புள்ளி இருக்கும்.

5. அவயவம்:—தொங்குகாது.

அடையாளம்:—காதுகள் நேரே விறைப்பா இல்லாமல் கீழ் நோக்கித் தொங்கும்.

பலன்:—வேகமிராது.

6. அவயவம்:—கொள்ளிக் கொம்பு.

அடையாளம்.—கொம்பின் மூனை தட்டையாகவும் காடு டாய்ந்தும், உச்சியில் கொஞ்சம் பள்ளமாகவும், கூர்ந்துபார்க்கின் தீ நிறமாயிருக்கும்.

7. அவயவம்:—தேல் கொம்பு.

அடையாளம்:—கொம்பு அசைந்திருக்கும்.

8 அவயவம்:—இடம் கட்டுக் கொம்பு.

அடையாளம்:—கொம்பு நிரம்பவும் பருமனாயிருக்கும்.

9 அவயவம்:—காடு பார்த்த கொம்பு.

அடையாளம்:—வலது கொம்பு வலப்பக்கம் சாய்ந்திருக்கும்.

இடது கொம்பு இடது பக்கம் சாய்ந்திருக்கும்.

10. அவயம்:—பெருந்தலை.

அடையாளம்:—தலை அளவிற்கு மிகுந்திருக்கும்.

பலன்:—மந்தநடையுடையதா யிருக்கும்.

11. அவயவம்:—ஒற்றைநாடி.

அடையாளம்:—முன்காலடி மத்தியிலொரு நரம்பு ஓடியிருக்கும்.

பலன்:—சரீரம் மெலிந்திருக்கும்.

12. அவயவம்:—தொங்கு நாறை.

அடையாளம்:—கழுத்தடியில் அதிகமாகச் சதை தொங்கும்.

பலன்:—மந்தநடையுடையதா யிருக்கும்.

13. அவயவம்:—ஒற்றைக்கழுத்து.

அடையாளம்:—மாட்டின் தலையை குனியச் செய்து பார்த்தால் கழுத்தின் மேல்பக்கம் படலமா யில்லாமல் ஒடுங்கினதாக இருக்கும்.

பலன்:—கழுத்துப்பல மிருக்காது.

14. அவயவம்:—ஒட்டுக்கழுத்து.

அடையாளம்:—கழுத்து உடலளவிற்குத் தக்க நீளமும் பருமனும் இல்லாதிருக்கும்.

பலன்:—கழுத்துப்பல மிருக்காது.

15. அவயவம்:—சாய்வுசிமிழ்.

அடையாளம்:—சிமிழதிகமாகப் பருத்து நடக்கும்போது சாயும்.

16. அவயவம்:—முதுகு நெளிவு.

அடையாளம்:—முதுகுமத்தியில் நெளிவிருக்கும்.

பலன்:—முறுக்கு பலமிருக்காது.

17. அவயவம்:—முன் தணிவு.

அடையாளம்:—சரீரத்தின் மேல்புறத்தில் சிமிழோரத்தில் இருக்கின்ற முன்பக்கம் பின்பக்கத்தைப் பார்க்கிலும் தணிவாக இருக்கும்.
பலன்:—வண்டியில் தலைகுனிந்துகொண்டு வரும்.

18. அவயவம்:—தொங்குதொப்புள்.

அடையாளம்:—ஒட்டியிராமல் தொங்கிக்கொண்டிருக்கும்.

பலன்:—கொஞ்சதூரம் ஓடினால் அயர்ந்துபோகும்.

19. அவயவம்:—இறங்குச் சட்டம்.

அடையாளம்:—வாலடியி லிரண்டு பக்கமும் பின் குறுக்கின் பிரதான எலும்பிலிருந்து அதிகமாகக் கீழ்நோக்கிச் சாய்ந்திருக்கும்.

பலன்:—பின்பல மிருக்காது.

20. அவயவம்:—பூவால் வெடிவால்.

அடையாளம்:—வால் நுனியில்மட்டும் வெள்ளை நிறமிருக்கும்.

21. அவயவம்:—தடிவால்.

அடையாளம்:—வால் மிகவும் பருத்திருக்கும்.

பலன்:—மந்தமாயிருக்கும்.

22. அவயவம்:—தொடையடி கூழை.

அடையாளம்:—வால் முட்டிற்குக் கீழ்வராமல் தொடைக்குச் சமமாக கூழையாக விருக்கும். அதில் உரோமமில்லாமலும் சொற்பரோமமு மிருக்கும்.

23. அவயவம்:—கொள்ளிக்கால்.

அடையாளம்:—ஒற்றைக்காலில்மட்டும் வெள்ளைநிறமிருக்கும்.

24. அவயவம்:—சாத்துக்கால்.

அடையாளம்:—முன்காலின் முட்டுக்கள் சமீபமாக உள்பக்கம் நெருங்கி யிருக்கும்.

பலன்:—ஓடாது.

25. அவயவம்:—துணையடிக்கால்.

அடையாளம்:—நடக்கும்போது முன்னங்கால்கள் ஒன்றோ டொன்று உரையும்.

பலன்:—ஓடாது.

26. அவயவம்:—பின்னு கால்.

அடையாளம்:—நடக்கும்போது பின்னங்கால் இரண்டும் நேரே வைக்காமல் மாறி மாறி வைக்கும்.

27. அவயவம்:—வெட்டுக்கால்.

அடையாளம்:—நடக்கும்போது பின்காலின் குளம்பின் முனையைப் பூமியில் தேய்த்துக் கொண்டு நடக்கும்.

பலன்:—குளம்பு சீக்கிரத்தில் அற்றுப்போகும்.

28. அவயவம்:—மந்திக்கால்.

அடையாளம்:—பின்கால்முட்டு ரொம்பவும் வளைவாயிருக்கும்.

பலன்:—சவாரியில் சீக்கிரத்தில் கால் அசந்துபோகும்.

29. அவயவம்:—அரைக்குளம்பு.

அடையாளம்:—நடக்கும்போது முன்கால் குளம்பு திருகிப் பூமியில் தேய்த்துக்கொண்டு நடக்கும்.

பலன்:—தேயும் குளம்பு சீக்கிரத்தில் அற்றுப்போகும்.

30. அவயவம்:—விரிகுளம்பு.

அடையாளம்:—குளம்பின் இருபாகமும் நெருங்கியிராமல் விரிவாயிருக்கும்.

பலன்:—மண், கல் முதலியவை குளம்பினிடையிலேறித் துன்பமுண்டாக்கும்.

31. அவயவம்:—பணப்புள்ளி.

அடையாளம்:—சரீரமெங்கும் கலிப்பணம்போலே வெள்ளையாகப் புள்ளியிருக்கும்.

பலன்:—இந்தப் புள்ளிகள் நூறுக்கு அதிகமாயிருந்தால் குற்றமில்லையென்று கொள்வாருமுண்டு.

(குறிப்பு:—இக்குற்றம் வெள்ளை மயிலை இந்நிறங்களுள்ள மாடுகளுக்கு இரா.)

32. அவயவம்:—தொழுமறை ; பால்மறை.

அடையாளம்:—சரீரமெங்கும் சுமார் ஒரு துட்டு அகலம் வட்டம் வட்டமாக இருக்கும்.

பலன்:—இது குற்றமில்லையென்று சொல்வாருமுண்டு.

33. அவயவம்:—தடிமறை.

அடையாளம்:—மேற்கண்ட விதப்படி தடிப்பாயிருக்கும் கையினால் தடவினாலும் தடிப்புத் தோன்றும்.

பலன்:—சற்றுதூரம் வெளியில்போனால் இளைத்துப்போகும்.

34. அவயவம்.—சுண்டுவாதம்.

அடையாளம்:—கட்டுத் தரையிலிருந்து அவிழ்த்த உடனே நடக்கும் பொழுது கொஞ்சதூரம் பின்காலிரண்டும் ஒன்றாகட்டி நடக்கும்.

35. அவயவம்:—உடலாட்டம்.

அடையாளம்:—கட்டு நிலத்தில் நிற்கும்போது சரீரத்தை எப்பொழுதும் அசைத்துகொண்டு நிற்கும்.

36. அவயவம்:—கால்வாரி.

அடையாளம்:—கட்டு நிலத்தில் நிற்கும்பொழுது முன்காலைக் கொண்டு பூமியைப் பிராண்டிக்கொண்டிருக்கும்.

37. அவயவம்:—சுடுகாடுநக்கி.

அடையாளம்:—முன்வாயில் சுழியிருக்கும் ; அல்லது முன்வாயில் தன்நிறத்திற்குப் பேதமான நிறத்தில் நெருக்கமாய்ப் புள்ளிக ளிருக்கும். அல்லது அது கொடிபோல் படர்ந்து இருக்கும்.

38. அவயவம்:—இடிமேலிடி.

அடையாளம்:—நெற்றியில், 3-சுழிகள் ஒன்றைப் பார்க்க ஒன்று எதிர்த்திருக்கும். அல்லது மேல் நோக்கியிருக்கும்.

39. அவயம்:—வாய்ப்பூட்டு.

அடையாளம்:—கீழ் முகவாய்க் கட்டையில் இரண்டு சுழிகளிருக்கும்.

40. அவயம்:—செவிப் பாம்பு.

அயையாளம்:—கன்னக் கடை யோரமாகக் காதின் அடியின் கீழ் தன்னிறத்திற்குப் பின்னமான நிறத்தில் ஒரு நீண்ட சுழியிருக்கும்.

★

# PART—III

## சுழி இலக்கணம்.

1. சுழி:—முற்பாடை ; பிற்பாடை.

அடையாளம்:—முதுகில் முன் பின்னாக இரண்டு சுழிகளிருக்கும்.

2. சுழி:—விலங்கடி.

அடையாளம்:—முதுகிற் குறுக்காக இரண்டு சுழிகளிருக்கும்.

3. சுழி:—விலங்கடி.

அடையாளம்:—பின் கட்டம் இரண்டிலும் இரண்டு சுழிகளிருக்கும்.

4. சுழி:—விலங்கடி.

அடையாளம்:—முன்காலிரண்டிலும் உட்புறத்தில் ஒன்று ஒன்றோடு சம்பந்தப்பட்டிருக்கும்.

பலன்:—இந்தச் சுழியை மரணச்சுழி யெனச் சொல்லுவாருமுண்டு.

5. சுழி:—நீர்ச்சுழி.

அடையாளம்:—முதுகில் கோசத்திற்கு நேரே ஒரு சுழிமட்டும் இருக்கும்.

பலன்:—இந்தச் சுழியில் கைவிரல் வைத்துத் தேய்த்தால் உடனே மாடு நீர் விடும்.

6. சுழி:—உழவனைப் பார்த்த பூதம்

அடையாளம்:—முதுகில் நீளமாக ஒற்றைச்சுழி வாலைப் பார்க்கும்.

பலன்:—இந்தச்சுழி தலையைப் பார்க்க இருந்தால் தோஷமில்லை என்பார்கள்.

7. சுழி:—ஏறு நாகம்.

அடையாளம்:—இது பவனவாய்க்குக் கீழ், தாடையில் சர்ப்பப்படம் போலே மேல் நோக்கியிருக்கும்.

8. சுழி:—இறங்கு நாகம்.

அடையாளம்:—மேற்கண்ட சுழி கீழ்நோக்கி யிருக்கும்.

9. சுழி:—கவ்யம்.

அடையாளம்:—முன்னூசத்தில் இரண்டு புறமும் சுழிகளிருக்கும்.

10. சுழி:—ஒற்றைக் கவ்யம்.

அடையாளம்:—மேற்கண்ட சுழி ஒரு புறமிருக்கும்.

11. சுழி:—பெண்டிழந்தான்.

அடையாளம்:—வாலின் அடிப்பக்கத்தில் குண்டி ஒன்று அல்லது இரண்டு மேல் அல்லது கீழ் நோக்கி, சுழி இருக்கும்.

12. சுழி:—கறட்டு ஒன்தான்.

அடையாளம்:—வாலின்மேல் கட்டாரிபோலவும் மயிர் வகிர்ந்து விட்டது போலவும் இருக்கும்.

குறிப்பு:—மேற்சொல்லிய குற்றங்களில் தொங்குகாது, தடிக்கொம்பு, பெருந்தலே, ஒற்றைநாடி, தொங்குநாறை, ஒற்றைக்கழுத்து, ஒட்டுக்கழுத்து, முதுகுநௌிவு, முன் தணிவு, தொங்கு தொப்புள், இறங்குச்சட்டம், தடிவாள், மந்திக்கால், இந்தப் பதின்மூன்றும் பாரவண்டிகளுக்கும் உழவிற்கும் உபயோகிக்கிற மாடுகளுக்கு விசேஷமாகா.)

மாடு விலைக்குவாங்கப் பார்க்கும்பொழுது தன் பின்காலைக் கொண்டு தலையைச் சொறிந்தாலும், முன்காலால் பூமியைப் பிராண்டினாலும், தலையை வலம் இடமாக அசைத்தாலும் சகுன விரோதம் என்று எண்ணப்படுகிறது.

முற்றிற்று.

# அட்டவணை